1000 படிகள் -1985
தொ. ந. ப. ப. கழக எண் : 2




விலை ரூ 25.00





● அச்சுப்பணி ஆலோசனையும், மேற்பார்வையும்: மணியன் பப்ளிசிட்டீஸ்-மதுரை
● அட்டைப்படம் : கே. முரளிதரன்
● அட்டைஅச்சு : பாபு பிரிண்டர்ஸ்-மதுரை
● அச்சு- நெப்போலியன் பிரஸ், மதுரை

# அணிந்துரை

டாக்டர் ஒளவை. நடராசன்
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத்துறை.

தலைமைச் செயலகம்
சென்னை-9

ஒரு நாட்டின் நிகழ்கால நடப்புகள் கடந்த காலத் தொடர்ச்சியாலும் அமைவனவாகும். ஒவ்வொரு காலத்திலும் அவ்வக் காலத்துச் சமுதாயம் தூவும் விதைகள், மரஞ் செடி கொடிகளாகச் செழித்து வளர்ந்து விடுகின்றன. இன்றைய சமுதாயத்தில் மாற்றமும் மறுமலர்ச்சியும் காண விழைவார் முன்னதாக எவையெவை ஆழமாக இங்கு வேர்கொண்டிருந்தன என்பதையறிந்து கொள்ள வேண்டும். எனவே சமுதாய மாற்றம் நிகழ்வதற்கு ஒரு நாட்டின் கடந்த கால வரலாறும் கண்ணாடி போலக் காண்பதற் கெளிதாக வரலாற்றாசிரியர்கள் தெளிவுடையதாக வழங்க வேண்டும். இத்தகைய சீரிய பணியை மதுரையில் அமைந்த ''தொல்பொருள் தொழில் நுட்பப் பணியாளர் பண்பாட்டுக் கழகம்'' மேற்கொண்டிருப்பதைக் கண்டு மகிழ்கின்றேன். இக்கழகம் வெளியிட்டுள்ள ''தொல்லியல் ஆய்வுத்தொகுதி'' என்னும் கலைமலர் தன் நறுமணத்தால் இதனைப் புலனாக்குகின்றது.

இந்நாளில் வளர்ந்து வருங் கலைகளுள் தொல்பொருள் ஆய்வு நெறி கலையாகத் திகழ்கின்றது. இத்துறையாய்வுக்கு அறிவியற் கருவிகள் பெரிதும் பயன்பட்டாலும், அறிவு வளமும் ஆர்வப் பெருமிதமுமே பெருந்துணையாக நிற்றல்

வேண்டும். அகழ்ந்து காணும் அறிவுடையாரும், தாம் அகழ்ந்து காண்பது தமிழகத்தின் நெடும்புகழுக்கு அணி சேர்ப்பது என்னும் அன்புடையாராக இத்துறையில் ஈடுபடுதல் வேண்டும். அன்பும் அறிவும்தான் தொல்பொருள் ஆய்வு நெறிக்குப் பண்பும் பயனுமாகும். அறிவுடையார் இத்துறையில் சிலராக விருந்தும் அவர்தாமும் தமிழ்மாட்சியில் அன்புடையராக மிளிர்தலைக் காணோம்.

கல்வெட்டுகளும், செப்பேடுகளும், அகழ்வாய்வில் கிட்டும் இடிபாடுகளும், புதைபொருள்களும், தமிழகத்தின் தொன்மைக்கும் மரபுக்கும் ஒளியேற்றுவன.

கலைத்திறம் ஒரு சிறகாகவும் தமிழ்த்திறம் மற்றைய சிறகாகவும் அமைந்தாலன்றித் தொல்லியல் துறைப்பறவை நல்விலக்கை நோக்கிப் பறக்க முடியாது. தொல்லியல் துறை ஒருசிறைப் பெரியாரைக் கொண்ட துறையாக இருந்து வருகிறது. இந்நிலை மாறவேண்டுமென்பதே நமது விழைவாகும்.

பண்டாரத்தார், மயிலை. சீனி. வேங்கடசாமி, வாண்டையார், கரந்தை கோவிந்தராசனார், வெள்ளைவாரணனார் ஆகிய புலவர் பெருமக்கள் கல்வெட்டுத் துறையின் முழுமை காண முயன்றனர். புறநானூற்று உரையயில்வார் பலரும் சங்கப்புலவர் ஊர்ப்பெயர்களைக் கண்டறிவதில் கல்வெட்டு களின் துணைகொண்டு ஊர்ப்பெயரை அரிதின் ஆய்ந்து நிறுவுகின்ற பெற்றியை எந்தையார் கொண்டிருந்ததைத் தமிழுலகம் நன்கறியும்.

எழுதப்பட்ட பகுதியினும் இனி எழுதலாகும் பகுதியே தமிழக வரலாற்றில் மிகுதியாக உள்ளன. நுட்பமாக விளக்க

வேண்டிய சிறந்த பகுதிகளை வரலாற்றேட்டில் வரைந்து குவிக்க எண்ணற்ற இளங்கைகள் முயலவேண்டுமென்பது என் வேட்கையாகும். அவ்வேட்கையைத் "தொல்லியல் ஆய்வுத்தொகுதி"யின் கட்டுரைகள் பல "பறம்பிற் பனிச் சுனை நீராகத் தணிவிக்கின்றன." கருத்து வளம் மிகுந்த இக்கட்டுரைகளை எழுதியுள்ள நண்பர் பலரை யான் நன்க-றிவேன். அவர்தம் புலமை நலம் மேலுஞ் சிறக்கப் பாராட்டு கிறேன். புதிய செய்திகள் ஒளிரும் கட்டுரைகள் தமிழ் தழீஇய நடைமிளிர்வனவாயும் அமைதல் வேண்டும். ஆர்வ முடையார்க்கு அஃது எளிதில் அமையும். அவ்வார்வதைப் பெருக்குவது நமது நாட்டமாக வேண்டும்.

தொல்லியல் ஆய்வுத்தொகுதியாகத் திகழ் கட்டுரைக் கலம்பகம் படைத்த பெருமக்களையும் தொல்பொருள் தொழில்நுட்பப் பணியாளர் பண்பாட்டுக் கழகத்தையும் பாராட்டுகிறேன். தமிழ்க் களஞ்சியத்துக்கு இப்புது வரவு பயனுடையதாகத் திகழும் என நம்புகிறேன்.

"நிலனாவிற் றிரிதரும் நீண்மாடக் கூடலார்
புலனாவிற் பிறந்த புதிது"

— கலித்தொகை

அன்புள்ள
ஔவை. நடராசன்
22—10—1985

# வாழ்த்துரை


டாக்டர் கி. ர. அனுமந்தன்
எம். ஏ; எம். எஸ் பி. எச்டி.
துறைத்தலைவர் (ஒய்வு)
பண்டைய வரலாற்றுத்துறை
மதுரைக்காமராசர்
பல்கலைக்கழகம், மதுரை


சுவரின்றேல் சித்திரமில்லை. கல்லின்றேல் சிற்பமில்லை. அது போன்றே ஆதாரங்கள் (Sources) இன்றேல் வரலாறு மில்லை. அத்தகைய ஆதாரங்கள், இலக்கியங்கள், தொல்லியல் ஆய்வுகள், கல்வெட்டுக்கள் போன்ற பல்வேறு வடிவங்களில் வரலாற்றாசிரியர்களுக்குத் துணைபுரிகின்றன. இவ்வாறு ஒரு வரலாற்றாசிரியனுக்குப் பல்லாற்றானும் துணைபுரியக் கூடிய பல்வேறு சாதனங்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குவதே **"தொல்லியல் ஆய்வுத்தொகுதி"** எனும் இச்சிறு நூலாகும். இதில் தமிழ் இலக்கியங்களையும், கல்வெட்டுகளை யும் நன்கு ஆய்ந்துள்ள வல்லுநர் பலரது கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன அரசியல் வரலாறு, சமுதாய வரலாறு, பண்பாட்டு வளர்ச்சி, இடப்பெயர்களின் வரலாறு, எழுத்துக்களின் தோற்றம் என்று இவ்வாறு வரலாற்றின் பல்வேறு கோணங்களைப் படம்பிடித்துக் காட்டும் வகையில் கட்டுரைகள் அமைந்துள்ளன. ஆதீண்டு குற்றி, தாவளம், தலைக்கோல், பொன்மழை, குளக்கீழ், முறிகள் போன்ற சொற்களில் பொதிந்து கிடக்கும் வரலாற்று உண்மைகளை அறிய இந் நூல் பெரிதும் உதவுகிறது. ஒவ்வொரு சிறுகட்டுரையிலும் பிற்காலத்தே ஆராய்ச்சி மாணவர்களால், ஒரு ஆராய்ச்சிக் கட்டுரையாக விரிவுபடுத்தக் கூடிய கருப்பொருள் அடங்கியுள்ளதைக் காண்கிறோம். வரலாற்று மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும், இந்நூல் அரியதொரு வரப்பிரசாதம்

என்பதில் ஐயமில்லை. தொல்பொருள் தொழில்நுட்பப் பணியாளர் பண்பாட்டுக் கழகத்தாரின் இப்பணி பெரிதும் பாராட்டுதற்குரியது. இதுபோன்று மேலும் பல வரலாற்றுக் களஞ்சியங்களை வெளியிட்டுத் தமிழக வரலாற்றுக்கு மேன் மேலும் அணிசெய்யும் அரிய பணியைத் தொடர்ந்து செய்து வரவேண்டுமென அன்னாரை வேண்டுகிறேன். அவர்தம் சீரிய முயற்சி வெல்க ! வாழ்க !! என உளமார வாழ்த்துகிறேன்.

அன்புள்ள

**கி. ர. அனுமந்தன்**

# பதிப்புரை

தமிழ், வரலாறு, தொல்லியல், நுண்கலை, வேதியியல் ஆகியவற்றில் முதுகலைப் பட்டம் பெற்ற இளைஞர்களின் கூட்டு அமைப்பு எங்கள் "தொல்பொருள் தொழில் நுட்பப் பணியாளர் பண்பாட்டுக்கழகம்" தமிழகத் தொல்லியல் கலை வரலாற்றிற்குப் பெருவிருப்போடு தொண்டு செய்வதைப் பெரும்பேறாகக் கொண்டு மகிழும் துடிப்பு மிகு ஆர்வலர்கள் நாங்கள்.

தொண்டு செய்யும் பணியில் கடந்த ஆண்டு இராசராசன் 1000 ஆவது ஆண்டு முடிபுனை விழாவில் வரலாற்றுத் துணுக்குகள் நிறைந்த மலர் ஒன்றினை வெளியிட்டுப் பொது மக்களின் பாராட்டையும், அறிஞர்களின் மகிழ்ச்சியையும், பத்திரிக்கைகளின் விமர்சனங்களையும் பெற்று மேலும் பணியாற்ற மிகுந்த ஆர்வம் பெற்றோம்.

இவ்யாண்டு 'தொல்லியல் ஆய்வுத் தொகுதி' என்ற இக்கோவைக் கருத்தரங்கு மலரை வெளியிட்டு மணம் பரப்ப முனைந்துள்ளோம். இதில் 43 கட்டுரைகள் நறும்பூக்களாகத் தொல்லியல் கலை வரலாற்றுத் தமிழ் என்னும் மணம் பரப்புகின்றன. பண்பாட்டுக் கழக உறுப்பினர்களாகிய எங்களுடைய பங்கு இதில் மிகுதி. தொல்லியல் அறிஞர்களும், ஆர்வலர்களும் கட்டுரை நறுமலர்களைத் தந்து மேலும் மணம் சேர்த்துள்ளனர்.

நற்படைப்புகளைப் படைக்க எங்களுக்கு ஆர்வமூட்டி, ஆற்றுப்படுத்தி வரும் தமிழ் வளர்ச்சி, பண்பாட்டுத் துறைச் செயலாளர் டாக்டர் திரு ஔவை நடராசன் அவர்கள் எங்களுக்கு நல்வழி காட்டிடும் ஆசான். அரசுத்துணைச் செயலாளர் திரு தொ.தி பிரபாகரன் அவர்கள் எங்கள் வளர்ச்சிக்கும் பணிகளுக்கும் நல்லாதரவு தரும் பெருமகனார்.

இம்மலர் மணம் தரத் தங்கள் அலுவலகப் பணிக்கு மேலும் தங்கள் ஓய்வு நேரத்தை முழுதும் செலவளித்தவர்கள் நண்பர்கள் திரு சு. இராசகோபால், திரு செ. போசு, திரு வெ. வேதாசலம், திரு தே. கோபாலன் ஆகியோர். மலர் முகப்பைப் பொலிவுடன் அமைத்தவர் நண்பர் திரு சே. முரளிதரன். இவர்களைப் பண்பாட்டுக்கழகம் நன்றி-யுடன் பாராட்டுகிறது.

நல்லதொரு அணிந்துரை தந்து எங்களைப் பாராட்டி, வாழ்த்தி, வழிநடத்தியுள்ளார்கள் அரசுச் செயலாளர் டாக்டர் திரு ஔவை நடராசன் அவர்கள். அவர்களை நன்றியுடன் போற்றுகின்றோம்.

எங்கள் பணிகள் தொடரவும், சிறக்கவும் வரலாற்றறிஞர் பெரியவர் டாக்டர் கி. ர. அனுமந்தன் அவர்கள் வாழ்த்துரை தந்து பெரிதும் பாராட்டியுள்ளார்கள். அவர்களை வணங்கு-கின்றோம்.

சிதறல்களாகத் தந்த கருத்துக்கள் பலவற்றையும் வகை, வகையாகப் பிரித்து நுழைவாயிலிலேயே அறிமுகப்படுத்தி டாக்டர் திரு கோ. விசயவேணுகோபால் அவர்கள் அழைத்-துச் செல்கிறார்கள். அவர்களது அன்பிற்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளோம்.

எங்களார்வம் மேலும் பெருக்குற்று நற்பணிகள் பல வாற்றத் தமிழுலகின் பேராதரவு பெரிதும் வேண்டுகின்றோம்.

தொல்பொருள் தொழில் நுட்பப்
பணியாளர் பண்பாட்டுக் கழகம்
மதுரை

## தொல்பொருள் தொழில் நுட்பப்பணியாளர் பண்பாட்டுக் கழகம்

**தலைவர்** : திரு. பொ. இராசேந்திரன் எம். ஏ;
**துணைத் தலைவர்** : திரு. செ. போசு எம் ஏ;
**செயலாளர்** : திரு. மா. செந்தில் செல்வக்குமரன் எம். ஏ;
**பொருளாளர்** : திரு. சு. இராசகோபால் எம். ஏ;
**உறுப்பினர்கள்** :

1. திருமதி. நா. மார்க்சீய காந்தி எம். ஏ;
2. திரு. அ. இராசேந்திரன் எம். ஏ;
3. திருமதி. ஆ. பத்மாவதி எம். ஏ;
4. திருமதி. இரா. வசந்த கல்யாணி எம். ஏ;
5. திரு. வெ. வேதாசலம் எம். ஏ;
6. திரு. எஸ். இராமசந்திரன் எம். ஏ;
7. திரு. இரா. ப. கருணானந்தன் எம். ஏ;
8. திரு. து. துளசிராமன் எம். ஏ;
9. திரு. இரா. செல்வராஜ் எம். ஏ;
10. திரு. ச. கிருட்டிணமூர்த்தி எம். ஏ;
11. திரு. சொ. சாந்தலிங்கம் எம். ஏ;
12. திரு. ச. செல்வராஜ் எம். ஏ;
13. திரு. பொன். அரசு எம். ஏ;
14. திரு. மா. கலைவாணன் எம். ஏ;
15. திரு. சொ. சந்திரவாணன் எம். ஏ;
16. திரு. க. நெடுஞ்செழியன் எம். ஏ;
17. திரு. தி. சுப்பிரமணியன் எம். ஏ;
18. திரு. சி. முனிசாமி எம். ஏ;
19. திருமதி. சீ. வசந்தி எம். ஏ;
20. திரு. தே. கோபாலன் எம். ஏ;
21. திரு. பி. கௌதமபுத்திரன் எம். ஏ;
22. திரு. கே. எஸ். சம்பத் எம். ஏ;

23. திரு. ர. சாந்தகுமார் எம். ஏ;
24. திரு.ச. பரணன் எம். ஏ;
25. திரு கோ. அர்ச்சுனன் எம். ஏ;
26. திரு. வெ. இராமமூர்த்தி எம். ஏ;
27. திரு. இரா. முத்து எம். ஏ;
28. திரு. கோ. முத்துச்சாமி எம். ஏ;
29. திரு இரா. செயராமன் எம். ஏ;
30 திரு. நாக. கணேசன் எம். ஏ;
31. திரு. கே. முரளிதரன் டி. எப். ஏ;
32. திரு. எம். எஸ். அசோக்தீன் எம். எஸ்சி.

# நூன்முகம்

பேராசிரியர் டாக்டர் கோ. விசய வேணுகோபால்
தமிழியல் துறை
மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை

தமிழக வரலாறு அரசர் வரலாறு என்ற அளவிலே தான் பெரும்பாலும் உள்ளது. வெளிச்சத்திற்கு வராத பல பகுதிகள் அதில் உள்ளன. கடந்த சில ஆண்டுகளாகவே தமிழகத்தில் கிடைக்கும் தடையங்கள் கொஞ்சம் கொஞ்சமாக இனங் கண்டு கொள்ளப்பட்டு வருகின்றன. இப்போக்கிலே தான் தமிழகத்திற்கு இது வரை வெளித் தெரியாத பல கூறுகள் பற்றி இவ்வாய்வுக் கட்டுரைத் தொகுதி அமைந்துள்ளது. முற்றிலும் நேரடி ஆய்வில் ஈடுபட்டுள்ள ஆய்வாளர்களது கருத்துக்களே இந்நூலில் இடம் பெற்றுள்ளமை ஒரு தனிச் சிறப்பாகும். தொல் பொருள் ஆய்விலிருந்து தொடங்கி இன்றைய அறிவியல் வரை தமிழக வரலாற்றின் பல கூறுகள் இத்தொகுப்பில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இக்-கட்டுரைகள் பின்வரும் பிரிவுகளுள் அடங்கும். i தொல்காலம் ii கோயில்கள் iii சிற்பக்கலை iv கோட்டைகள் v கல்வெட்டு களும் செப்பேடுகளும் vi தமிழகப் பண்பாட்டுச் செய்திகள் vii வாணிபம் viii ஊர்ப்பெயராய்வு ix அரசர் பற்றிய விளக்கம் x பண்டைத் தமிழ் எழுத்துக்களின் தோற்றம் வளர்ச்சி ஆகியன அவை.

i. தமிழகத்தில் அண்மையில் பல இடங்களில் பாறை -குகை ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவை தமிழகத்

தின் பழங்கால மக்கள் பண்பாட்டுச் செய்திகளைப் புலப் படுத்தும் புதிய சான்றுகள். இவற்றின் வழி பழந்தமிழகத் தின் நிலையை அறிந்து கொள்ளவும் புரிந்து கொள்ளவும் வாய்ப்பேற்பட்டுள்ளது. கே. எஸ். சம்பத், மல்லப்பாடி முத-லான இடங்களிற் கிடைக்கும் பெருங்கற்கால ஓவியங்களைப் பற்றிப் பொது நிலையில் விளக்கியுள்ளார் இவ்வோவியங்-களில் காணுப்பெறும் கலை, உத்திகள் பற்றிக் கே. முரளி-தரன் விளக்கியுள்ளார். சமுதாய நலம் பயக்கும் தொல்லியல் கண்டு பிடிப்பொன்றினைப் பற்றி அரங்க. பொன்னுசாமி எடுத்துக் கூறியுள்ளார்.

ii. தமிழகத்தே வழிபாட்டுச் சிறப்பு மிக்க கோயில்கள் பல இருப்பினும் அவை தவிரக் காண்பாரற்றுக் கிடக்கும் பல கோயில்கள் கூடத் தமிழக வரலாற்றினை எடுத்துக் கூறும் சான்றாதாரங்களாக விளங்குகின்றன. இவ்வகையில் ஆறு-கட்டுரைகள் அமைந்துள்ளன. திருச்சுனை (மதுரை மாவட்டம்) அகத்தீஸ்வரர் கோயில் பற்றிக் கா. நெடுஞ்செழியனும், எறும் பூர் (தென்னார்காடு மாவட்டம்) கடம்பவன ஈசுவரர் கோயில் பற்றிச் ச. செல்வராசும், தஞ்சை மாவட்டச் சூரியனார் கோயில் பற்றி ஆர். செயராமனும், ஆமூர் (மதுரை மாவட்டம்) ஐயப்பொழிலீசுரம் கோயில் பற்றிக் கோ அர்ச்சுனனும், திருக்குறுக்கை வீரட்டானம் (தஞ்சை மாவட்டம்) பற்றிக் கோ. முத்துச்சாமியும் விளக்கி எழுதியுள்ளார்கள். கோவில் களில் மலர்கள் தொடுக்கப் பயன்படுத்திடக் கற்பலகைகள் அமைக்கப்பட்டன. இவற்றைத் திருப்பூப்பலகைகள் என்பர். இம்மரபுபற்றி விளக்கியுள்ளார் சொ. சந்திரவாணன்.

iii கோயிற் கலையோடு தொடர்புற்ற சிற்பக் கலை பற்றியும், செப்புத் திருமேனி பற்றியும் மூன்று கட்டுரைகள் இத்தொகுதியுள் உள்ளன. பாண்டிய நாட்டுக் குடவரை களில் முருகன் சிறப்புற அமைக்கப் பட்டதை இலக்கியத்

தலைப்புக்களுடன் மா. சந்திரமூர்த்தி விவரித்துள்ளார் தஞ்சைப் பெரியகோயில் பரிவாரத்துப் பிள்ளையார் சிற்பம் பற்றி இரா.ப கருணானந்தன் அங்குள்ள கல்வெட்டுக்களின் அடிப் படையில் எடுத்து விளக்கியுள்ளார். சிவன் கோவிலில் சன்னிதி முன்பு நந்தி காணப்படுவது மரபு இதனையே மனித உருவில் அதிகார நந்தி என்று காட்டுவதும் உண்டு. குரங்கு முகத்தில் இதுவரை கண்டறியாத அதிகார நந்தியின் செப்புத் திருமேனிப் படிமம் பற்றிச் (கங்கை கொண்டான், திருநெல்வேலி மாவட்டம்) ச. அரியரன் வடமொழி மேற்கோள்களுடன் விளக்கியுள்ளார். உலகப் புகழ் பெற்ற கோவில்களையும். சிற்பங்களையும் உருவாக்கிய சிற்பிகளைப் பற்றி ஒரிரண்டு குறிப்புகளே நமக்குக் கிடைத்துள்ளன. இவ்வகையில் கோட்டாற்றுச் சிற்பிகள் பற்றி விளக்கியுள்ளார் பெ கௌதமபுத்திரன்

iv. கோட்டைகள் பழைய மன்னர்களின் வாழ்விடங்கள், இவற்றில் பல தமிழகத்தே இடிந்த நிலையில் பல இடங்களில் காணப்படுகின்றன. வாழ்ந்து வீழ்ந்த பழைய வரலாற்றுச் செய்திகளைத் தம்முள் அடக்கி நிற்பன இவை. காரையார் எனப் படும் மேலணைப் பகுதியில் (தாமிரபாரணி, – அம்பாசமுத்திரம், நெல்லை மாவட்டம்) அமைந்துள்ள பாண்டியன் கோட்டை பற்றிப் பொன். அரசு எழுதியுள்ளார். கோட்டையைப் போலவே பழைய ஊர்களும் மண்மேடிட்டுக் கிடப்பவை பல. இவற்றுள் புதைந்து கிடக்கும் சிங்கபுரம் (= கலசபுரம், புதுக்கோட்டை மாவட்டம்) பற்றி இரா. முத்து எழுதியுள்ளார். இவ்வாறே தஞ்சை மராட்டியர் அரண்மனைக் கூடம் பற்றிய செய்திகளைத் தந்துள்ளார் ம. இராமகிருஷ்ணன்

v. தமிழக வரலாற்றை அறிய உதவும் அடிப்படைச் சான்றுகள் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும். இதுவரை சில

ஆயிரம் கல்வெட்டுக்களே படியெடுக்கப்பட்டு வாசிக்கப்பட்டுள்-ளன பல சிற்றூர்களில் மக்களின் அறியாமையால் பல கல்வெட்டுக்கள் அறிவுலகத்திற்குத் தெரியாமலே முடங்கிக் கிடக்கின்றன. இவ்வாய்வுத் தொகுதியில் மூன்று கட்டுரைகள் இவை பற்றி எடுத்துரைக்கின்றன. இவையனைத்தும் இதுவரை அறியப்படாதன. வரலாற்றுச் சிறப்புடையன.

சொ. சாந்தலிங்கத்தின் கட்டுரை முழு அரசனாகவன்றிச் செல்வாக்கு மிக்க தலைவனாக விளங்கிய தஞ்சை வீரநரசிங்கன் (கிருட்டின தேவராயர் ஆட்சிக் காலத்தவன்) பற்றிக் கல்வெட்டுக்கள் வாயிலாகத் தெரியவரும் செய்திகளை ஆராய்கிறது மேலவளவு (அழகர்மலைக்குக் கிழக்கே உள்ள ஊர். மதுரை மாவட்டம்) எனும் ஊரின் வடமேற்கேயுள்ள பரம்புக் கண்மாய்க்கருகேயுள்ள கல்வெட்டின் வழித் தெரியலாகும் வரலாற்றுச் செய்திகளை விளக்கியுள்ளார் தே. கோபாலன். நக்கனேரி (கொல்லங் கொண்டானருகில் உள்ள ஊர் இராமநாதபுரம் மாவட்டம்) ஊரில் உள்ள பாறை ஒன்றில் காணப்படும் வீரபாண்டியனின் வட்டெழுத்துக் கல்வெட்டு தெரிவிக்கும் சில புதிய செய்திகளை வெளியிட்டுள்-ளார் கோ. விசயவேணுகோபால். மன்னார்கோயிலில் (திருநெல்வேலி மாவட்டம்) கிடைத்த செப்பேட்டின் வழி நாய் குட்டி போடுவது பற்றிய விவாதத்தில் வெற்றி பெற்ற ஒருவருக்கு வழிவழியாக நெல் அளிக்கப்பட்டு வரும் செய்தியைத் ('தாய்' வார இதழில் வெளிவந்தது) தெரிவிக்கிறார் வெ. இராமமூர்த்தி.

vi பழந்தமிழர் பண்பாடுகள், பழக்க வழக்கங்கள் பற்றி நாம் அறிந்துள்ளவை குறைவே. இம்மரபுகளை எடுத்துக் காட்டும் வகையில் சில கட்டுரைகள் அமைந்துள்ளன. தினவெடுத்த மாடுகள் உராய்ந்து கொள்ள அமைக்கப்படும் கல் பழந்தமிழில் ஆதீண்டு குற்றி எனப்படும். இம்மரபு பற்றிய

செய்திகளைத் தருகிறார் அ. இராசேந்திரன். திருச்சி மாவட்டம் கருவூருக்கு அருகேயுள்ள புகளூரில் ஆறுநாட்டார் மலை என ஒன்றுள்ளது. இங்குக் குறிக்கப்படும் ஆறுநாட்டார் பற்றிய செப்பேடு (சிதம்பரத்தில் கிடைத்தது) ஒன்றின் வழி இவர்களுடைய பழக்க வழக்கங்களையும், ஊனமுற்றோருக்கு அம்மக்கள் காட்டிய தனிக்கவனத்தையும் விவரித்துள்ளார் செ. போசு. சோழர் காலத்திய அந்தணர் பற்றி நாக. கணேசன் எடுத்துரைத்துள்ளார். ஆடலரசிகட்குத் தலைக்கோல் பட்டம் தருவது நமக்குச் சிலப்பதிகாரம் தரும் செய்தியாகும். ஆட வல்லானான நடராசப்பெருமான் கையில் தலைக்கோலைக் கொடுத்துச் சோழர்கள் ஆடல்கலைக்குச் சிறப்புச் செய்தமையை இரா. கலைக்கோவன் எடுத்துக்காட்டியுள்ளார். பொன்மழை பெய்ததாகக் குறிப்பிடப்படும் புராணக்கருத்தை ஆராய்கிறார் ச. பரணன். வீடு கட்டுவதற்கு முன்னும், கட்டப்படும்போதும் பின்பற்றும் மரபுகளை மனை ஆய்வு முறை என்ற கட்டுரை யில் விளக்குகிறார் வே. இராமன். வெண் கொற்றக்குடை மரபுபற்றி ஆராய்ந்து எழுதியுள்ளார் துரைச்சாமி. 'முறி' என்னும் வழக்கு பிரமாணம், ஆவணம், தீட்டு போன்றவற் றிற்கு இணையாகப் பயன்படுத்தப்பட்ட முறையை சு. இராசகோபால் விளக்கியுள்ளார்.

vii தமிழக வாணியம் தொன்மைமிக்கது கிறித்துவின் பிறப்பிற்கும் முந்தையது. தமிழர் வணிகம் பற்றி புதிய ஒளிதரும் கட்டுரைகளும் இத்தொகுதியில் உள்ளன. வணிகர் கள் வழிநடையில் தங்கும் தாவளங்கள் பற்றிய செய்திகளைத் தொகுத்தளித்துள்ளார் தி. சுப்பிரமணியன். து. துளசிராமன் தனது கட்டுரையில் தமிழகத்தே பண்டைக் காலத்தே வணிகத் தொடர்பு கொண்டிருந்த ரோமானியர்கள் பற்றிச் சில புதிய செய்திகளைத் தந்துள்ளார்.

viii ஊர்ப்பெயராய்வு பண்பாட்டாய்வில் அடிப்படையான ஒன்றாகும். இதன்வழியேயும் பல வரலாற்றுச் செய்திகள் நமக்குப் புலப்படலாம். இவ்வகையில் ஊர்ப்பெயர்களை வரலாற்று எச்சங்கள் எனலாம். வெ. வேதாசலத்தின் 'குளக் கீழ்' எனும் கட்டுரை பாண்டிய நாட்டில் பின்பற்றப்பட்டு வந்த இடப் பெயரிடு முறையினை எடுத்து விளக்குகிறது. இவ்வாறு பழங்காலத்தே வைக்கப் பெற்று வழக்கிலிருந்த ஊர்ப்பெயர்கள் காலப்போக்கில் அரசு மாற்றம் போன்ற காரணங்களால் மாற்றப்படுதலும் உண்டு. இவ்வாறு வேறு காலத்தே வேறு பெயரிடப்பட்ட ஊர்கள் பற்றிப் பொ. இராசேந்திரன் எடுத்துக் காட்டியுள்ளார்.

ix பழைய அரசர்கள் பற்றிய சில புதிய குறிப்புக்களும் தெரியவருகின்றன. கங்கர் பற்றி எ. சுப்பராயலுவும், கட்டாணைபருமர் பற்றி இரா. செல்வராசும், பூதலவீரன் உதய மார்த்தாண்டன் பற்றி மா. செந்தில் செல்வக்குமரனும் மூவேந்தர் பற்றி செ. இராசுவும் திருமலைச்சேதுபதி பற்றிச் சி. முனிசாமியும் சில புதிய கருத்துக்களைத் தெரிவித்துள் ளனர். இல. தியாகராசனின் கட்டுரை இராசராசன் காலத்திய அதிகாரியான மும்முடிச்சோழபோசன் பற்றி விளக்குகிறது.

x பண்டைத் தமிழ் எழுத்துக்களின் தோற்றம், வளர்ச்சி பற்றிய கருத்துக்கள் இன்னும் செம்மையாக எடுத்துரைக்கப் படவில்லை எனலாம். இக்குறையைப் போக்கும் வகையில் சில கட்டுரைகள் அமைந்துள்ளன. தமிழ் நாட்டில் உருவ எழுத் துக்கள் வழங்கிய மரபு பற்றி நடன. காசிநாதன் சிறப்புற உணர்த்தியுள்ளார். இதுபோலவே கீழ்வாலையில் (தென்னார் காடு மாவட்டம்) குகை ஓவியங்களோடு காணப்பெறும் வரிவடிவங்களைச் சிந்துவெளி அகழ்வாய்வில் கண்டெடுத்த முத்திரை வரிவடிவங்களோடு ஒப்பிட்டு விளக்கியுள்ளார்

இரா. பவுன்துரை. மகாராஜக்கடை (தர்மபுரி மாவட்டம்) யில் காணப்படும் வண்ண எழுத்துக்கள் பற்றி விளக்கியுள்ளார் ச. கிருஷ்ணமூர்த்தி.

தொல்பொருள் ஆய்வுத்துறைப் பணியாளர்கள், பல் கலைக் கழக ஆசிரியப் பெருமக்கள், ஆர்வலர் சிலர் ஆகியோரின் அரு முயற்சிகளின் விளைவே இத்தொகுப்பு நூல். ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் புதியன சில வற்றைச் சொல்கின்றது.

இந்த வரலாற்று மணிமாலை இனி உங்களுடையது.

# உள்ளடக்கம்

# தஞ்சையில் ஒரு கலக நாய(க்)கன்

சொ. சாந்தலிங்கம் எம். ஏ., டி. இ. ஏ.,

தஞ்சாவூர்

அண்மையில் தஞ்சை வட்டம் ஆலக்குடி என்னும் சிற்றூரில் புதிய கல்வெட்டு ஒன்றைக் காணநேர்ந்தது.1 கி. பி. 16–ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சார்ந்த இக்கல்வெட்டு தஞ்சை நாயக்கர் ஆட்சி தோன்றுவதற்கு முந்திய கால கட்டத்தின் அரசியல் நிலமையைத் தெரிவிக்கும் வகையில் அமைந்துள்ளது. வீர நரசிங்கராய நாயக்கன் என்னும் குறுநிலத் தலைவனின் பெயரைத் தாங்கியுள்ள இக்கல்வெட்டே தஞ்சை மாவட்டத்தில் இவன் பெயரால் கிடைத்துள்ள முதல் கல்வெட்டு எனலாம்.

வீர நரசிங்கன் பெயரால் இதுவரை தமிழ்நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் சுமார் 17 கல்வெட்டுக்ள் கண்டறியப்பட்டுள்ளன. இது 18–வது கல்வெட்டாக அமைகிறது. இத் தலைவன் பிராமண வகுப்பைச் சேர்ந்தவன் என்றும் காஞ்சி ஏகாம்பரநாதர் கோயில் தேவகன்மியாக விளங்கிய தழுவக் குழைந்தான் பட்டரின் மகன் என்றும் கல்வெட்டு ஒன்று கூறுகிறது.2 இவன் கிருஷ்ணதேவராயர் காலத்திற்கு முன் பாகவே விஜயநகர மன்னரது அரச சேவையில் சேர்ந்தவன் என்றும் கி. பி. 1510 முதல் தமிழகத்தின் பெரும்பகுதியை ஆளும் அதிகாரம் பெற்றிருந்தவன் என்றும் பல சான்றுகள் மூலம் அறிகிறோம்.3 இவனுக்கு சாளுவ நாயக்கன், செல்லப்பன், சுவாமி செல்லப்பர், காஞ்சிபுரவரதீஸ்வரன் என்று

பல பெயர்கள் இருந்தன. சோழநாட்டுப் பகுதியின் ஆளுநனாகவும் இருந்தமையால் 'சோழன்' என்றும் தவறுதலாகக் கருதப்பட்டுள்ளான்.

நூனிஸ் தனது குறிப்புக்களில் செல்லப்பன் என்னும் வீரநரசிங்கன் அனைத்துப் பிற ஆளுநர்களைக் காட்டிலும் சக்தி வாய்ந்தவனாக விளங்கியவன் எனக் குறிப்பிடுகிறார். 'இவன் கீழைக்கடற்கரைப் பகுதிகள், நாகபட்டினம், தஞ்சாவூர் புவனகிரி, திருக்கோயிலூர், காயல் ஆகியவற்றை உள்ளடக்கிய பெரும் நிலப்பரப்பின் தலைவனாக இருந்தான். இவனுக்குப் பத்துலட்சத்து நூறு தங்க பகோடாக்கள் வருமானம் இருந்தது. அதில் மூன்றில் ஒருபங்கை அரசனுக்குச் செலுத்திவிட்டு எஞ்சிய இரண்டு பங்கை தன் படைப் பராமரிப்புச் செலவுகளுக்கு வைத்துக் கொண்டான். இவனிடம் 30,000 காலாட் படைகளும், 3000 குதிரைகளும், 30 யானைகளும் இருந்தன4 என்று நூனிஸ் குறிப்பிட்டுள்ளார்.

மதுரைப் பகுதியும் இவனது ஆளுகையின் கீழேயே இருந்திருக்க வேண்டும் என வரலாற்றாசிரியர்கள் கருதுகின்றனர். நூனிஸ் தனது குறிப்பில் முக்கிய அமரநாயகர்கள் பற்றிய பட்டியலைச் சொல்லும் போது மதுரைப் பகுதிக்கென்றுஎந்த அமரநாயக்கனையும் தனியாகக் குறிப்பிடவில்லை என்பதிலிருந்தே மேற்கண்ட கருத்து உறுதிப்படுகிறது5. இவன் கிருஷ்ணதேவராயர் ஆட்சியின் இறுதிக் கட்டத்திலும் அச்சுதராயர் ஆட்சியின் தொடக்ககாலத்திலும் பிரதமமந்திரி (சர்வ சிரப்பிரதானி) என்று சொல்லத்தக்க பெரும் பதவியில் இருந்தான்6. அரசனுக்கு அடுத்த நிலையில் இருந்தவன் இவன். கிருஷ்ணதேவராயர் இறந்த போது இவன் தலைநகரிலேயே இருந்தான். அரசுரிமையைக் கைப்பற்றுவதில் போட்டி ஏற்பட்டபோது வீரநரசிங்கன் தன் செல்வாக்காலும் படை வலிமையாலும் தலைமையைக் கைப்பற்றி ஆரவீடு

ராமராயனின் முயற்சியைத் தோற்கடித்து அச்சுதராயன் அரசனாவதில் பெரிதும் துணைநின்றான். இதனாலேயே தொடக்கத்தில் அச்சுதராயனுக்கும் பெரிதும் நம்பிக்கைக்குரிய பிரதம மந்திரியாக விளங்கினான்.

இவன் தொடககத்திலிருந்தே மேலாதிக்க மன்னர்களிடத்தில விசுவாசியாக இருந்தமையால் ஓரளவு சுயாதிகாரம் பெற்ற தலைவனுகவும்விளங்கினுன் சிலகல்வெட்டுகளில்இவனது தானங்களைக் கூறும்போது மேலாதிக்க மன்னர்களின் பெயர் காணப்படாதது கொண்டு நோக்க இவன் பெற்றிருந்த சுயாதிகாரச் செல்வாக்குப் புலனுகின்றது.

கி. பி. 1510 ஆம் ஆண்டைச் சேர்ந்த இரண்டு திருப்பத்தூர்க் கல்வெட்டுகள் (இன்றைய முத்துராமலிங்கம் மாவட்டம்) நாராயணமங்கலம், காரையூர் என்னும் இரண்டு ஊர்களையும் இணைத்து அதற்குச் செல்லப்பபுரம் என்று தன் பெயரால் பெயரிட்டு திருப்பத்தூர் சிவன் கோயிலுக்குத் தானமாகக் கொடுததுள்ளான் என்ற செய்தியைத் தருகின்றன.7 கி. பி. 1511–இல் கிருஷ்ணதேவராயர் செங்கை மாவட்டம் குன்றத்தூர எனனும் கிராமத்தைச் செல்லப்பனுக்குத் தானமாக வழங்கியுள்ளார். கி. பி. 1514–இல் கிருஷ்ணதேவராயர் செல்லப்பனின் நன்மை கருதி தஞ்சை மாவட்டம் மாங்காடு எனனும் இடத்தில் கோயிலுக்கு நிலதானம் செய்துள்ளார்.8 மேலும் திருமயம், திருவரங்குளம், தேவிகாபுரம், உரத்தூர், சிங்கப்பெருமாள் கோயில் ஆகிய இடங்களிலுள்ள கல்வெட்டுகள் இத்தலைவனது செல்வாக்கையும், கொடைத் தன்மையையும் எடுத்துக்காட்டுகின்றன.

பேரரசர்களிடம் விசுவாசமும் நட்பும் மக்கள் மத்தியில பெரும் செல்வாக்கும் படைபலமும் கொண்டிருந்த சாளுவ

வீரநரசிம்மன் பின்னாளில் பேரரசுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்யவும் துணிந்தான். பரமக்குடிப் பகுதியின் தலைவன் தும்பிச்சி நாயக்கனையும், திருவாங்கூர் ராச்சியத்து மன்னன் உதய மார்த்தாண்டனையும் தன் கிளர்ச்சிக்குத் துணையாய்க் கொண்டு தான் தலைமையேற்றுக் கலகம் விளைவித்தான். இதற்குச் சில காரணங்களையும் வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுவர்.

கிருஷ்ணதேவராயர் காலத்திலேயே சாளுவ நரசிம்மன் அவர்க்கு எதிராகச் செயல்பட்டான் என்ற கருத்தும் உண்டு9 இதனை மறுத்துக் கூறுவாரும் உளர்.10 கிருஷ்ணதேவராயரின் இறுதிக்காலம் காலம் வரையிலும் சாளுவ நரசிம்மன் பரம விசுவாசியாகவே இருந்துள்ளான் என்பது அச்சிறுப்பாக்கம் கல்வெட்டால் உறுதிப்படுகிறது அச்சுதராயர் ஆட்சியின் காலத்திலும் இருவர்க்கிடையிலும் சுமுகமான உறவு நிலவியது என்பது வீரநரசிம்மனின் நன்மைக்காக அச்சுதராயர் தானம் வழங்கினார் என்று கூறும் உரத்தூர் கல்வெட்டாலும் (கி. பி. 1529) தெரியவருகிறது. கி. பி. 1530-இல் சாளுவ நரசிம்மன் தன் அரசன் அச்சுதராயன் நன்மைக்காகக் கோயம்பேடு சுப்பிரமணியர் கோயிலுக்கு இரண்டு கிராமங்களைத் தேவதானமாகக் கொடுத்தான் என்பது பழவந்தாங்கல் கல்வெட்டொன்றாலும் பெறப்படும்.12

எனவே இக்காலத்திற்குப் பின்னரே அச்சுதராயனுக்கும் வீரநரசிங்கனுக்கும் இடையில் மனமுறிவு ஏற்பட்டிருக்கவேண்டும் என்பது தெளிவு. இதற்குக் காரணம் மன்னன் அச்சுதராயரது ஆணை யொன்றைப் புறக்கணித்து சாளுவன் தன்னிச்சைப்படிச் செயல்பட்டதே என்பது ஒரு கருத்து. அச்சுதராயர் பதவியேற்ற நாளில் சில நிலங்களைத் தானமாகக் கொடுத்து அவற்றைக் காஞ்சியிலுள்ள ஏகாம்பரநாதர் கோயி-

லுக்கும், வரதராசர் கோயிலுக்கும் சமமாகப் பகிர்ந்தளிக்கும்படி நரசிங்கனைப் பணித்தார். ஆனால் சைவத்தின்பால் பெரும் பற்றுக் கொண்ட இவன் அந்நிலங்களைச் சிவன் கோயிலுக்கு அதிகமாகவும் வைணவக் கோயிலுக்குக் குறைவாகவும் பகிர்ந்தளித்து விட்டான். இச் செய்தியைக் கேள்வியுற்ற மன்னன் சினங்கொண்டு பின்னுளில் இவ்வாணையை மாற்றி சமமாக பகிர்ந்து ஆணையிட்டான்,13 இதுவே இருவரிடையேயும்கருத்து வேறுபாடு தோன்றக் காரணம் என்பர்,

ஆனல் இதுமட்டுமே உறவுச் சீர்கேட்டிற்குப் பெரிதும் காரணம் எனக் கொள்ள இயலாது. அச்சுதராயர் காலத்தில் நிர்வாகத்தில் பெரும் பங்கு வகித்தவர்கள் சளக்கராஜு பெரியதிருமலை, சின்ன திருமலை என்னும் இரு சகோதரர்கள் ஆவர். இவர்களது சதியின் காரணமாகவே சாளுவநரசிம்மன் அரசனிடம் தான் பெற்றிருந்த செல்வாக்கை இழக்க நேர்ந்தது. வீரநரசிம்மன் தொடர்ந்து தலைநகரில் தங்கி அரசனேடு நல்லுறவு கொண்டிருப்பது தங்களது அரசியல் வளர்ச்சிக்குத் தடையாக இருக்கும் எனக் கருதிய திருமலைச் சகோதரர்கள் அரசனிடத்தில் நரசிம்மனுடைய சுயாதிக்கப் போக்கையும், அரசனின் ஆணையை மதியாத பாங்கையும் பெரிதுபடுத்தி மனக்கசப்பை வளர்த்துவிட்டனர்.14 இதன் காரணமாகவே நரசிங்கன் பெரிதும் வருத்தமுற்று கிளர்ச்சி செய்யும் எல்லை வரை போனுன் என்பது பொருத்தமான காரணமாகக் கொள்ளலாம்.

எனினும் வீரநரசிங்கனின் கலகம் வெற்றி பெறவில்லை விஜயநகரப் பேரரசின் பெரும்படை சளக்கராஜு திருமலையின் தலைமையில் புறப்பட்டு தாமிரபரணிக்கரையில் நடைபெற்ற போரில் கலகத் தலைவர்களைத் தோற்கடித்தது, வீரநரசிங்கன் கைது செய்யப்பட்டு ஸ்ரீரங்கத்தில் தங்கியிருந்த

அச்சுதராயர் முன் நிறுத்தப்பட்டான். மன்னன் இவனை விசால மனத்துடன் விடுதலை செய்தான் என்ற செய்திகளை யெல்லாம் அச்சுதராயாப்யுதயம் என்னும் நூல் விரிவாகக் கூறுகிறது.

இக்கலகம் நிகழ்ந்த காலம் கி. பி. 1532இன் முதல் பகுதி யில் எனலாம். இதற்குப்பின் அரசனால் மன்னிக்கப்பட்ட வீர நரசிம்மன் மேலும் சிலகாலம் சிறுபதவிகளில் இருந்துள்ளான் என்று தெரிகிறது. கி. பி. 1536–இல் மகாபலிபுரம் திருமால் கோயிலுக்கு இவன் நிலதானம் செய்துள்ளான் என்று ஒரு கல்வெட்டு கூறும்.15 கி. பி. 1545-ஆம் ஆண்டு கல்வெட்டு ஒன்று இவன் இராமநாதபுரம் மாவட்டம் கொந்தகை கிரா-மத்தினரால் கொண்டு வரப்பட்ட வழக்கு ஒன்றை கற்றறிந்த வல்லுநர்களைக் கொண்டு தீர்த்துவைத்தான் என்று கூறு-கிறது.16 இக்கேரி சதாசிவ நாயக்கன் கட்டி என்னுமிடத்தில் சாளுவநாயக்கன் ஒருவனைத் தோற்கடித்தான் என்று தெரி கிறது. இவனும் அச்சுதராயர் காலத்துச் சாளுவ நாயக்கனும் ஒருவனே எனலாம்.17

இந்தப் பின்னணியில் ஆலக்குடி கல்வெட்டை நாம் ஆராயப் புகுந்தால் அதன் முக்கியத்துவம் நமக்குப்புலப்படும். இக்கல்வெட்டில் விஜயநகரப் பேரரசர் பெயர் எதுவும் குறிப் பிடப்படவில்லை. ஆட்சியாண்டு அல்லது வரலாற்று ஆண்டு பற்றிய குறிப்பும் இல்லை. எனவே இக்கல்வெட்டு சாளுவ வீரநரசிங்கராயன் பெரும் செல்வாக்குடனும் கிருஷ்ணதேவ-ராயருக்கு மிகுந்த விசுவாசத்துடனும் ஆட்சிபுரிந்த கி. பி. 1515க் கும் 1529க்கும் இடைப்பட்ட காலத்தில் அடங்கும். ஏனெனில் அச்சுதராயர் காலத்தில் மிகக் குறுகிய காலத்திற்குள்ளாகவே இருவரிடையேயும் இருந்த சுமுக உறவு கெட்டுவிட்டபடியால் அக்காலத்திலோ அதன் பின்னரோ நரசிங்கன் இக்கொடை யைச் செய்திருக்க வாய்ப்பில்லை.

ஏகாம்பர நாதர் கோயிலுக்குத் திருநாமத்துக் காணியாக ஏகாம்பர நல்லூர் விடப்பட்டது. இங்கிருந்த திருகம்பை வாய்க் காலுக்குக் கிழக்கில் கச்சி வடுக பிள்ளையார் குழுமி (குமிழி-மடை) என்ற கலிங்கு ஏற்படுத்தி அதிலிருந்து இரவும் பகலும் தடையின்றி நீர் பாய்வதற்கு ஸர்வமாநியமாக நீராணிக்கப் பண்டாழம், கல்லணைக்காடுவெட்டி என்னும் இரண்டு வரி-களும் சுவாமி வீர நரசிங்கராய நாயக்கரால் தானமாகக் கொடுக்கப்பட்டது என்பதே கல்வெட்டுக் கூறும் செய்தி.

இக்கல்வெட்டில் குறிப்பிடப்படும் ஏகாம்பர நாதர் கோயில் காஞ்சி ஏகாம்பரர் கோயிலாகவே இருக்கலாம். சாளுவ நர-சிம்மன் காஞ்சி ஏகாம்பரர்பால் பெரிதும் பக்தி கொண்டவன் என்பது முற்கூறிய நிலப்பங்கீடு பற்றிய செய்தியாலும், காஞ்சிபுரவரதீஸ்வரன் என்னும் பெயர் கொண்டிருத்தலாலும் புலப்படும். ஏகாம்பர நல்லூர் என்பது ஆலக்குடிக்கு அருகாமையில் இருந்த ஓர் ஊராக இருக்கலாம். அவ்வூர் எது என்பது அறிய இயலவில்லை. ஆலக்குடிக்கே முன்னாளில் அப்பெயர் வழங்கப்பட்டிருக்கலாம்.

இந்த வகையில் இக்கல்வெட்டு தஞ்சை அரசியலின் ஒரு முக்கிய காலகட்டத்தைச் சுட்டுவதாக அமைகிறது. இக்கல்-வெட்டுக் குறிப்பிடும் வீர நரசிங்கராயனின் காலத்துக்குப்பிறகே தஞ்சைக்கு நம்பிக்கைக்குகந்த தலைவன் தேவை என்பதை உணர்ந்த அச்சுதராயர் தன் சகலரைத் தஞ்சை நாயக்கத் தனத்தின் தலைவனாக்கி தஞ்சையில் நாயக்கர் அரசை உருவாக்கினார் என்பது வரலாற்றறிஞர் எண்ணமாகும்.

## அடிக்குறிப்புகள் :

1. தமிழ்ப் பல்கலைக் கழகத் தொல்லியல்துறைப் பேராசிரியர் டாக்டர். ஏ, சுப்புராயலு இக்கல்வெட்டை முன்னரே படியெடுத்துப் படித்துள்ளார்கள்.

2 S. I, I. VII No. 447
3 N. Venkataramanayya Studies in the History ot Third dynasty of the Vijayanagar p. 23
4 Robert Sewell Forgotton Empire p. 384-85
5 Venkataramanayya op. cit p. 456
6 Ibid p 103
7 MER 91, 92 / 1908
8 MER 361 / 1908
9 V. Vriddagreesan The Nayaks of Tanjore
10 Venkataramanayya op. cit p 23
11 MER 256 / 1910
12 ARE 110 / 1941
13 Vriddagreesan op. cit. p. 19
14 Dr. A. Krishnaswamy, The Tamil country under Vijayananagar p. 205
15 MER 55 / 1890
6 ARE 2 / 1925
17 A. Krishnaswamy, op. cit. p. 211

கல்வெட்டு

1. சுபமஸ்து ஏகா
2. ம்பர நாதன் தி
3. ரு நாமத்துக்கா
4. ணியான ஏகா
5. பர நல்லூர்
6. திருகம்பை
7. வாய்க்காலு
8. க்கு கிழக்குக
9. ச்சி வடுக பிள்
10. ளையார் குழுமி
11. சுவாமி வீரநா
12. சிங்க யிராய நா
13. யக்கர் ஏகாம்
14. பர நாதனுக்கு
15. ஸர்வ மானிய
16. மாக யிரவு பக
17. ல் உடையாமல்
18. தண்ணீர் பாய
19. வும் நீராணிக்க
20. பண்டாழ நெல்
21, லும் கல்லணை
22. காடு வெட்டும்
23. மானியம் சந்
24. திராத்தித்தர் உள்ள
25. வும் நடக்க இ
26. ந்த தன்மத்துக்
27 கு அகுதம் ப
28 ண்ணினவன் கெ
29 ங்கை கரையி
30 லே காரம் பசுவை
31 வ கொன்றபாவ
32 த்திலே போவான்

# பாண்டியன் கோட்டை

டோன். அரசு எம். ஏ., எம். டக
சென்னை

திருநெல்வேலி மாவட்டம், அம்பாசமுத்திரம் வட்டத்தில் உள்ள காரையார் என்று அழைக்கப்படும் மேல்அணை பகுதிக்கு வடமேற்கில் சுமார் 80 கி.மீ தூரத்தில் அமைந்-துள்ளது பாண்டியன் கோட்டை என்று அழைக்கப்படும் பகுதி இந்தக் கோட்டை அமைந்துள்ள மலை 'மான (வால) முடி' மலைக்குக் கிழக்கிலும் கருமலைக்குத் தெற்கிலும், காரையார் ஊருக்கு மேற்கிலும் சுமார் 2000 அடி உயரம் உடையதாக அமைந்துள்ளது.

மேல்அணையில் இருந்து தமிழ்நாடு மின்வாரியத்தினரால் புதிதாக அமைக்கப்பட்டுவரும் நீர் மின்னியல் சுரங்கம வரையில் சுமார் 2 கி.மீ தூரம் வரை வாகனங்கள் செல்லத்தக்க பாதை அமைக்கப்பட்டுள்ளது. பிறகு சற்று சாய்வான. மலையின் தென்கிழக்குப் பகுதி வழியாக மரங்களும், உயரமான புல் புதர்களும் நிறைந்த காடுகள் இடையே ஏறிச்சென்றால் பாண்டியன் கோட்டை என்று அழைக்கப்படும் இடிந்த கட்டிடப்பகுதி (மதில்சுவர்) உள்ள இடத்தை அடையலாம்.

## கோட்டை அமைந்துள்ள இடத்தின் சிறப்பு

இக்கோட்டையின் வெளிப்பகுதியில் மூன்று புறமும் உள்ள மிகவும் செங்குத்தான பள்ளத்தாக்குகள் இதற்கு மிகவும் பல

மான இயற்கை அரண்களாக அமைந்து உள்ளன. வடக்கு தெற்கு, மேற்கு ஆகிய மூன்று பக்கங்களில் இருந்து யாரும் இக்கோட்டைக்கு ஏறி வருவது கடினமான செயலாகும் மேலும் இப் பள்ளத்தாக்குகளில் தென்புறமும், வடபுறமும் தாமிரபரணி மற்றும் சேர்வலாறு நீர் நிறைந்துள்ளது. இவற்றையெல்லாம் தாண்டி ஒருவர் இதனை அணுகினாலும் இம்மலையின் மேற்கு மற்றும் வடக்கு திசைகளில் உள்ள காடுகளில் நிறைந்திருக்கும் கருநாகங்கள், சிறுத்தை புலி, காட்டுப்பன்றி கரடி போன்ற வற்றின் தாக்குதலுக்கு ஆளாக வேண்டி இருக்கும். எனவே இப்பகுதிகளில் மனிதர்கள் நெருங்குவது சற்று சிரமமான காரியமாகும்.

சற்று சரிவாக உள்ள இம்மலையின் கிழக்குப் பகுதியிலும் எதிரிகள் நுழைவதும் அரிய செயலே. காரணம் இககோட்டைக் கட்டிடத்திற்கு 200 கீழே உள்ள பகுதியில் பெரும்பாலும், உயரமான மரங்களோ, அடர்ந்த புதர்களோ இன்றி வெட்ட வெளியாக உள்ளது. மேலும் இப்பகுதி ஏற்ற இறக்கம் அதிகம் இல்லாமல் ஓரளவு சீரான சரிவாக உள்ளதால் இக்கோட்டை-யில் இருந்து எதிரிகள் நெருங்கிவருதை எளிதில் அறிந்து கொள்ளலாம்' இப்பகுதியில் மட்டும் சற்று கவனமான கண் காணிப்பு இருக்குமேயாயின் அக்கண்காணிப்பில் இருந்து தப்-, பித்துக் கொண்டு எவரும் இந்தக் கோட்டையில் நுழைந்து விடமுடியாது. இது தவிர இதன கிழக்குப் பகுதியில் உள்ள நுழைவாயில் மரங்கள் அடர்ந்த பகுதியின் இடையே அமைக் கப்பட்டு இருப்பதால் நுழைவாயிலைக் கண்டறிவதும் கடின மானதாகவே இருக்கும்.

இங்கு உள்ள கனிதரும் சிலவகை மரங்களும் குளிர்நீர் சுனையும் இங்கு உறைவோரின் பசியை ஓரளவு போக்கத் தக்கனவாக உள்ளன. எல்லாவற்றிற்கும் சிகரமாக இக்கோட்

டையின் உட்புறம் வடக்குப் பக்கத்தில் உள்ள சுமார் 200' அடி உயரமுள்ள குறுகலான குன்றின் உச்சியில் இருந்து விழிப் புடன் கவனித்து வந்தால் இதனைப் பற்றி நாற்புறமும் உள்ள எல்லாப் பகுதிகளையும் நனகு கண்காணிக்க இயலும், இவ்வாறு இம்மலையின் இயற்கை அமைப்பில் எல்லாவற்றையும் நன்கு கவனித்து அதன் இயற்கை அமைப்பையே தனக்குச் சாதகமாகப் பயன்படுத்தி இக் கோட்டையை அமைத்தவர் களின் திறன் போற்றற்குரிய ஒன்றாகும். போர் பாதுகாப்புக்கு மட்டுமின்றி அமைதியான இதன் சூழலும் இங்கிருந்து காணக் கூடிய இயற்கைக் காட்சிகளுக்கும் இக்கோட்டை அமைக்கப் பட்டுள்ள பகுதி தகுதி வாய்ந்ததாகும்.

## பாண்டியன் கோட்டை குறித்த குறிப்புகள்

"கோட்டைமலை" என்று அழைக்கப்படும் மலைப்பகுதியில் 'பாண்டியன் கோட்டை" என்று இப்பகுதி மக்களால் அழைக் கப்படும் கோட்டைப் பகுதியில் இடிந்த வெளிப்புற மதில் சுற்றி னைத்தவிர வேறு தொல் பொருட்கள் எதனையும் கண்டறிய இயலவில்லை. இக்கோட்டை திருவிதாங்கூர் நாட்டிற்கும, நெல்லைப் பகுதிக்கும் இடையே உள்ள குறுகிய பாதையில் அமைந்து இருப்பதால் இது பசரா (திருவிதாங்கூர) படைத் தளமாகவோ அன்றி அவர்கள் செய்விடமாகவோ இருந்திருக் கககூடும் என்று கணிக்கலாம். 'ஹோர்ம் எனனும அறிஞரின் கூற்றுப்படி 'மலையவர்' (அல்லது திருவிதாங்கூர்) மற்றும் 'பொலிகா' ஆகியோருக்கு இடையே 1759ல் நடைபெற்ற ஆதிக் கப்போராட்டதின் போது இப்பகுதி முக்கிய பங்கு வகித்ததாகக் குறிப்பிடப்படுகின்றது.

வரகுண பாண்டியன் காலத்தில் பொதிய மலைப் பகுதி யை ஆண்டு வந்த ஆய்க்குடியைச் சேர்ந்த கருநந்தன் என்ற குறுநில மன்னனை தோற்கடித்து அவனது 'அரிவியூர்' கோட்

டையை அழித்தான் என்று கல்வெட்டுச் செய்தி பகர்கின்றது. அரிவியூர் கோட்டை திருவிதாங்கூரின் எல்லையில் உள்ளது. எனவே இந்தக் கோட்டை ஆய்க்குடியினரின் மற்றொரு கோட்டையாகவே திகழ்ந்திருக்கக்கூடும்.

கோச்சடையன் ரணதீரன் காலத்தில் பொதிய மலைப் பகுதிகளின் குறுநில மன்னனாக ஆண்டு வந்த 'ஆய்வேள்' என்பவனை அம்பாசமுத்திரத்திற்கு அருகில் உள்ள 'மருதூரில் தோற்கடித்ததாக செய்திகள் காணப்படுகின்றன. மேற்கண்ட இரு நிகழ்ச்சிகளிலும் 'பாண்டியன் கோட்டை' குறித்த குறிப்-புகள் காணப்பெறாவிடினும், இப்பகுதியின் ஆட்சியாளர்களாக விளங்கிய ஆய்க்குடியினருக்கு இக்கோட்டை உரியதாக இருந் திருக்கலாம் என்று கருத முடிகின்றது.

எல்லாவற்றிற்கும் மேலாக முதலாம் இராசேந்திரச் சோழனின் திருவாலங்காடு செப்பேடு இப்பகுதி குறித்த செய்தியினை தெரிவிக்கின்றது. இச் செப்பேட்டின் 91–93வது வடமொழியில் அமைந்த வரிகள் இப்பகுதி குறித்து குறிப்பிடுகின்றது. ஆனால் அதில் கோட்டை குறித்த நேரிடையான செய்திகள் ஏதும் குறிக்கப்பெறவில்லை. இந்தச்செப்புப் பட்டயத்தில்மதுராந்தகன் [முதலாம் இராசேந்திரன்] பாண்டிய அரசனின் வலிமை மிக்க படையை ஒடுக்கி பாண்டிய அரசனை அவனது நாட்டை விட்டுத் துரத்தினான் எனவும் கூறப்படுகின்றது. மேலும் மதுராந்தகனிடம் கொண்ட அளவற்ற பயத்தின் காரணமாக பாண்டிய அரசன் மலையமலையில் ஓடி ஒளிந்து கொண்டான் எனவும், அம்மலையமலையில் தான் அகத்திய மாமுனிவர் உறைகின்றார் எனவும் குறிப்பு காணப்படுகிறது. மலைய-மலை என்பது இக்கோட்டை அமைந்துள்ள பொதிகைமலைத் தொடரைக் குறிக்கும் எனவே பாண்டிய அரசன் இராசேந்திரச் சோழனுக்கு பயந்து இப்பொதிய மலையில் காத்துறைந்தான் என அறிய முடிகின்றது.

இந்த செப்பேட்டுச் செய்தி மூலம் மதுராந்தகனிடம் தோல்வியுற்று விரட்டப்பட்ட பாண்டிய மன்னன் யார்? மலையமலையில் அவன் எவ்வாறு அடைக்கலம் புகுந்து எங்கு தங்கி இருந்தான். என்பது குறித்து விவரமாக தெரிவிக்கப்படவில்லை மற்ற கல்வெட்டுச் செய்திகளில் இருந்து மதுராந்தகனிடம் தோற்று இப்பகுதியில் கரந்துறைந்த பாண்டிய அரசன் ஸ்ரீவல்லபனாகவோ அல்லது அவனது வழித்தோன்றல்களாகவோ இருக்கக்கூடும் என்று யூகிக்க முடிகின்றது. எவ்வாறு இருப்பினும் இம்மன்னன் காலத்திலேயே இந்தக் கோட்டை இருந்ததா? அல்லது இம் மன்னன் இந்தக் கோட்டையில் தான் அடைக்கலம் புகுந்திருந்தானா? என்பது குறித்து முடிவாகக் கூறுவதற்குச் சான்றுகள் ஏதும் இல்லை.

## மக்கள் கூறும் கதை

உள்ளூர் மக்கள் இந்தக் கோட்டை எதிரிகளுக்குப் பயந்து பாண்டிய அரசன் கட்டியதாகக் கூறுகின்றனர். இதனைக் கட்டுவதற்குப் பயன்படுத்தப்பட்ட செங்கற்கள் சுமாா 1500 அடி கீழே உள்ள பாபநாசம் என்ற ஊருக்கு அருகில் இருந்து கொண்டு வரப்பட்டன. இதனை இந்த உயரத்திற்கு கொண்டு வர தொழிலாளிகள் வரிசையாக நின்று (சுமார் 15 கி. மீ) ஒருவர் கையில் இருந்து மற்றொருவர் பெற்று மாற்றிச்செல்லும் முறையில் பணிபுரிந்திருக்கின்றனர்.

இந்தக் கோட்டையில் இருந்து வந்த பாண்டிய மன்னன் சோழர்களுக்கு (நவாப்புகள் என்றும் சிலர் கூறுகின்றனர், பயந்து தங்கரதத்துடன் தங்கி இருந்தான். தனது எதிரிகள் வருவதை அறிந்து கொள்வதற்கும் உடனுக்குடன் செய்தி அறிவதற்கும் பறை ஒலி எழுப்பும் முறை ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தது. அந்த ஏற்பாட்டின்படி மலையின் அடிவாரத்தில் உள்ள பாபநாசம் என்ற ஊருக்கு அருகில் உள்ள கொட்டுந்

தளம் (அல்லது) தழுக்குப்பாறை என்ற இடத்தில் ஒரு காவலரை கண்காணிக்கப் பறையுடன் நிறுத்திஇருந்தனர். இந்தக்காவலன எதிரிகள் வருவதை அறிந்தவுடன் தனது பறையை அறைந்து ஒலி எழுப்பினால் அவனுக்குச் சற்று மேற்பகுதியில் இருக்கும் வேறொரு காவலன் தனது பறையை அறைந்து ஒலி எழுப்புவான். இவ்வாறு ஒவ்வொரு இடத்திலிருந்தும் வரிசையாக பறை அறைந்து கடைசியாக கோட்டையில் உள்ள அரசனுக்கு விரைவில் செய்தி சென்று அடையும். மேற்கண்ட ஏற்பாட்டில் ஒருநாள் கொட்டுந்தளத்தில் இருந்த காவலன் தற்செயலாக உறங்கிவிட்டான்.

உறக்கத்தின் போது கைதவறி பாறைகீழே விழுந்து பாறைகள் வழியே உருண்டோடி அவற்றில் மோதி ஒலி எழுப்பிக் கொண்டே கீழே விழுந்து விட்டது. அந்தஒலி எதிரிகள் வருவதைக் குறிப்பிடும் ஒலியெனக் கருதி தொடர்ச்சியாக மற்றவர் ஒலி எழுப்ப அரசனுக்குச் செய்தி எட்டியது. எதிரிகளால் அழிக்கப்படுவோம் என்று நம்பிய பாண்டிய அரசன் தனது தேவியரையும், பெண்டிரையும் வெளியேற்றி விட்டு தங்கரதத்தை ஒரு இடத்தில் அழுத்திமறைத்துவிட்டு அடுக்குப்பாறை என்றஇடத்திற்கு வந்து தனது தலையை தானே அறுத்து அந்தப் பாறை மீது வைத்துவிட்டு கீழே விழுந்து விட்டான். தலையற்ற அம் மன்னனின் முண்டம் விழுந்த இடம் 'முண்டன்துறை' எனவும் அதனால். அப்பகுதி 'முண்டந்துறை' எனப்பெயர் பெற்றதாகவும் கூறுகின்றனர். தலையை அறுத்து வைத்த இடமானதினால் 'அறுக்குப்பாறை' என்பது 'அடுக்குப்பாறை' என்று வழங்கி இருக்கக்கூடும். இந்தக் கோட்டையில் வசித்த பாண்டிய மன்னன் யார் என்பது குறித்து இவ்வூர் மக்களுக்கும் தெரிந்திருக்கவில்லை.

## மேற்பரப்பு ஆய்வு

பாண்டியன் கோட்டை எனறு அழைக்கப்படும் இக்கட்டிடம் உள்ள மலைப்பகுதியைச் சுற்றி மூன்று பக்கங்களி

லும் இயற்கை அரண்களாக மிகவும் செங்குத்தான பள்ளத் தாககுகளைக் கொண்டுள்ளது இம்மலையின் வடக்கு பக்கம், சரிவு சிறிதுமற்ற செங்குத்தான பாறைகளாக உள்ளதால் அந்தப் பகுதி வழியாக இதன் மீது ஏறுவது கடினம். அத னால் இதன் வடக்கு பக்கத்தில் சுவா ஏதும் கட்டப்பட்டிருக்க வில்லை. தெற்கு மேற்குப் பகுதிகள் ஓரளவு செங்குத்தாக இருந் தாலும் பெரும் சிரமம் மேற்கொண்டால் ஏறிவரக்கூடும என்று இதன்மீது ஏறுவதறகு ஏற்ற சரிவான பகுதியான கிழககுப் பகுதியிலும் மதில்சுவர் எழுப்பப்பட்டுள்ளது.

மதில் சுவரின் மொத்த நீளம் சுமார் $1\frac{1}{2}$ கிலோ மீட்டர் உடையதாகக் காணப்படுகின்றது. இந்த மதில் சுவரின் அடிப் பகுதி 5 அடி உயரம் வரையில் $2 \times 3/4' \times 3/4$ அடி அளவுள்ள சரி வான அளவில் சீர் செய்யப்பட்ட கருங்கற்களால் கட்டப்பட்டு உள்ளது.

கருங்கல் கட்டிடப் பகுதிக்கு மேல் $10\frac{1}{2} \times 6 \times 2$ அள வுள்ள சுட்ட செங்கற்களைக் கொண்டு கட்டப்பட்டு உள்ளது. செங்கற்கட்டிடப்பகுதி பெரும்பாலும் இடிந்து கீழே விழுந்து விட்டிருப்பதாகத் தெரிகின்றது. இச் செங்கல் கட்டிடப் பகுதி அதிகம் காணப்படாதிருப்பது இவை இடிபாடுகளுக்குப் பிறகு மழைநீர் போன்றவற்றால் கீழே அடித்துச் செல்லப்பட்டிருக கக்கூடும் எனத் தெரிகின்றது. இந்த சுவரின் அதிக அளவு அகலம் 6 அடிகளாகும்.

சுமார 40 ஏக்கர் நிலப்பரப்பை உள்ளடக்கிய இந்தக் கோட் டைமதிலின் கிழக்குப் புறத்திலும், தெற்குப் புறத்திலும் இரண்டு நுழைவாயில்களை ஒட்டி உட்பகுதியில் $15' \times 12'$ அளவுள்ள அறைபோன்ற அமைப்பு உள்ளது. இது வாயிற்காப்போருக்கு

என ஏற்படுத்தப்பட்டிருக்க வேண்டும் எனத் தெரிகின்றது. தற்சமயம் 4 அடி உயரம் வரை இடிந்து காணப்படும் இந்த அறைப்பகுதி சீரான கருங்கற்களால் கட்டப்பட்டிருக்கின்றது. தென்புற வாயிலுக்குச் சற்று தூரத்தில் நிழல்தரும் அடர்ந்த சோலைகளும், அருகில் குளிர்நீர் தரும் சுனை ஒன்றும் காணப் படுகின்றன. தென்புற வாயிலை ஒட்டியுள்ள அறையை இப் பகுதிமக்கள் தங்கரதத்தை அமுத்தி வைத்துள்ள கிணறு என்று அழைக்கின்றனர்.

மதில்சுவற்றிற்கு வடபுறம் சுமார் 200 அடிஉயரம் உடைய, ஒரு புறம் மட்டும் சரிந்த செங்குத்தான குன்று ஒன்று உள் ளது. இக்குன்று இக்கோட்டையை அணுகுவோரின் நடமாட் டம் அனைத்தையும் கண்காணிக்க ஏற்றவாறு உள்ளது. இக் கோட்டைப்பகுதியின் உட்புறமும், வெளிப்புறமும் அடர்ந்த உயரமான முட்களாலும், சிறு ஈச்ச மரங்களாலும் நிறைந்துள் ளன. இதன் மண்பகுதி முழுவதும் அடர்ந்த புற்களினால் மூடப்பட்டுள்ளதால் மேற்பரப்பு ஆய்வில் தொல் பொருட்கள் எதனையும் கண்டறிய இயலவில்லை. ஆயினும் இக் கோட்டை யின் உள்பகுதிகளில் ஆங்காங்கே காணப்படும் பூமிக்குள் புதைந்த நிலையில் உள்ள ஒரு சில கருங்கல் பலகைகளும் அவற்றின் அமைப்பும், அவை போன்ற இன்னும் சில இதன் மண் பகுதியில் புதைந்திருக்கக்கூடும் என்று கருதத்தூண்டு கின்றது.

இந்த கோட்டையின் உட்புறமும், வெளிப்புறமும் ஒரு சில இடங்களில், மாதிரி அகழ்வாய்வு நடத்தினால் தொல்பொருட் கள் கிடைப்பதற்கு வாய்ப்பு உள்ளது. அவற்றின் மூலம் இக் கோட்டையைப் பற்றிய உண்மைகளும் தெரியக்கூடும்.

## காலம்

இலக்கியச் சான்றுகள், மற்றும் அரசர்களது கல்வெட்டுச்

சான்றுகள் போன்றவைகளில் இந்த பாண்டியன் கோட்டையைக் குறித்து நேரிடையாகக் குறிப்பிடப்படவில்லை. ஆயினும் அவற்றில் காணப்படும் செய்திகளின் மூலம் இக்கோட்டை அமைந்துள்ள மலைப்பகுதி தோல்வியுற்ற பாண்டிய அரசர்களுக்கும், இப்பகுதி, குறுநில மன்னர்களுக்கும் உறைவிடமாகத் திகழ்ந்திருக்கின்றது என்று தெரிகின்றது இதன் அடிப்படையில் இக்கோட்டையும் அவர்களால் கட்டப்பட்டிருக்க வேண்டும் என எடுத்துக் கொண்டால், இது கி.பி. 11-ஆம் நூற்றாண்டிலோ பிறகோ கட்டப்பட்டு இருக்கக்கூடும் இதன் காலத்தை இங்கு மாதிரிஅகழ் வாய்வுகள் நடத்துவதன்மூலம் கிடைக்கும் தொல்பொருட்களின் துணையுடன் ஓரளவு சரியாகக் கணிக்க இயலும்.

---

## கோட்டைகள்

கோட்டை வடமொழியில் 'துர்க்கம்' என்று அழைக்கப்படும் காடு, மலை, நீர் ஆகியவற்றை இயற்கை அரணாகக் கொண்டு அமைக்கப்படும் கோட்டைகள் வனதுர்க்கம், கிரிதுர்க்கம், ஜலதுர்க்கம் எனப்பட்டன.

தமிழ்நாட்டில் செஞ்சி, சென்னை, வேலூர், திருமெய்யம் திண்டுக்கல், தரங்கம்பாடி, கிருஷ்ணகிரி, நாமக்கல் ராயக்கோட்டை, மகாராஜாகடை, திருச்சி, செங்கற்பட்டு, வாலிகண்டபுரம் போன்ற இடங்களில் இன்றும் அழியாத கோட்டைகளும், கோட்டைகளின் எச்சங்களும் உள்ளன,

எத்தனையோ ஊர்களில் 'கோட்டைமேடு' என்று அழைக்கப்படும் பகுதிகள் உண்டு. ஊர்களின் பெயரோடு பாளையங்கோட்டை, பட்டுக்கோட்டை, அருப்புக்கோட்டை, டெங்கனிக்கோட்டை என்று கோட்டைகள் சேர்ந்து வருவதுண்டு.

இலக்கியங்கள் 'புரிசை', 'எயில்' என்றுகோட்டைகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றன.

கோட்டை, கொத்தளம் பற்றி ஒரு நூல் உருவானால் தமிழக வரலாறு மேலும் சிறப்படையும்.

# பரம்புக் கண்மாய்க் கல்வெட்டு

தே. கோபாலன் எம். ஏ.,
மதுரை

மதுரை மாவட்டத்தில் மேலூருக்கு அருகில் அழகர்மலைக்குக் கிழக்கே மேலவளவு என்ற ஊர் உள்ளது, இவ்வூரின் வட மேற்கேயுள்ள சோமகிரிமலை, முறிமலை என்ற இரண்டு மலை களுக்கு இடையே பெரிதாக எடுக்கப்பட்ட கரையைக் கொண் டதாகப் பறம்புக் கண்மாய் விளங்குகின்றது. இக்கண்மாயில் உள்ள கலிங்கிற்கு அருகிலேயே இக்கல்வெட்டு பாறை ஒன்றில் பொறிக்கப்பட்டுள்ளது 1 தமிழில் அமைந்துள்ள இக் கல்வெட்டு மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1216–1239) காலத்திய தாகும். இக்கல்வெட்டில் சோணாடு கொண்டருளிய சுந்தர பாண்டியன் என்று அவனது வெற்றிச் சிறப்பு குறிப்பிடப்பட் டுள்ளது. கல்வெட்டில் ஆட்சியாண்டு பொறிக்கப்பட்ட பகுதி அழிந்து பட்டதால் அவனது எந்த ஆட்சியாண்டில் இக்கல் வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது என்று தெரியவில்லை. ஆனால் இக்வெட்டு சுந்தரபாண்டியனின் சோழநாட்டு வெற்றிக்குப் பிறகு, அதாவது கி.பி1219க்குப் பிறகு பொறிக்கப்பட்டது எனலாம்.

## கல்வெட்டு

1. ஸ்வஸ்தி ஸ்ரீ தி, ரி பு வனச் சக்கரவத்திகள் சோணாடு
2. கொண்டருளிய ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர்க்கு யா
3. . . . . . . தின் எதிராமாண்டு அழகர் திருவிடை
4. . . . . . . ம் வட பரப்பு நாட்டு பறம்பான திருநாராயண
5. . . . . . . ங்கலத்து குளம் கரையும் வளர்த்து வயல் நீர்க்
6 கு ஈடுபடாமற் பாறை மேலே நீரும் ஏறக் கண்டு கரைகு
7. . . , . . . யாமற் கல்லும் படுப்பித்து கலிங்கும் நாட்டு வி
8. . . . . . . கோவூருடையான் ஆள்வான்
9. க்கரக்கையான் ஸ்வஸ்திஸ்ரீ

## கல்வெட்டின் பொருள்

மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் கோவூருடையான் ஆள்வான் சக்கரக்கையன் என்ற அதிகாரி வடபரப்பு நாட்டிலுள்ள பறம்பான திருநாராயண மங்கலம் என்ற ஊர்க் குளத்தின் கரையை உயர்த்தி கரையின் உள்வாய்ப்பகுதிகளில் கல்லிட்டுப் பரப்பி, பலப்படுத்தி கலிங்கு அமைத்துள்ளதை இக் கல்வெட்டு தெரிவிக்கின்றது.

## கண்மாய் அமைப்பும் தேவையும்

அழகர் மலையிலிருந்து வரும் சிற்றோடைகள் பெருகி மேலவளவிற்கு அருகிலுள்ள சோமகிரிமலை, முறிமலை என்ற இரண்டு மலைகளுக்கிடையே பாய்ந்து பாசனத்திற்குப் பயன்படாமல் வீணாகி விரையமாவதைத் தடுத்து நிறுத்தும் வகையில் இக்கண்மாய் அமைக்கப்பட்டுள்ளது. முதல்மடை, அழகிரிமடை என்ற பெயரில் இரு மடைகளுள்ள இக் கண்மாயினால் இப் பகுதியிலுள்ள ஏராளமான நிலங்கள் இன்றும் பாசனத்தைப் பெற்று வருகின்றன. அட்டப்பட்டி, பூதமங்கலம், கீழவளவு முதலான ஊர்கள் இப் பாசனத்தைப் பெற்றுப் பயனடையும் ஊர்களில் குறிப்பிடத்தக்கனவாகும். இக்கண்மாய் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் சோழநாட்டு வெற்றிக்கு பிறகு எடுக்கப் பட்டதால் இதனை எடுப்பித்த அதிகாரி வெற்றியில் கிடைக்கப் பெற்ற பொருளைக் கொண்டு பாண்டிய நாட்டு மக்களுக்கு பயன்படும் வகையில் இக் கண்மாயைச் சீர்திருத்தம் செய்திருக்க வேண்டும் இது போன்றே இரண்டாம் வரகுண பாண்டியனின் சோழநாட்டு வெற்றிக்குக் காரணமாக அமைந்த அரசியல் அதிகாரிகளும் ஒருவனால் திண்டுக்கல் வட்டத்திலுள்ள இராமநாதபுரம் என்ற ஊரிலுள்ள கண்மாய் எடுக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.2 மேலும் இவ்வாறு செய்யப் படுவதால் நீர்ப்பாசன நிலங்கள் மிகுதியாகி அரசுக்கும் வருவாய் பெருக வழி கிடைத்தது.

இக் கண்மாயை சீரமைப்புப் பணி செய்த சக்கரக்கையன்

என்ற அதிகாரி பொறியியல் நுணுக்கத்துடன் சோமகிரிமலை, முறிமலை என்ற இரண்டுக்கும் இடையில் நீரைத் தடுத்து நிறுத்தும் வகையில் அணைகட்டுவது போன்று பெரியகரை ஒன்றினை எடுத்திருக்கின்றான். இயற்கையில் கிடைக்கும் தண்ணீரைத் தடுத்து நிறுத்தி பாசனத்திற்குப் பயன்படும்படி செய்துள்ளான். அழகர் மலையிலிருந்து வெள்ளப் பெருக்கெடுத்து கண்மாயில் சேரும் மிகுதியான நீர், அதன் கரையை உடைத்துக் கொண்டு போகா வண்ணம் கரை மிகவும் உயர்த்தப்பட்டது. இப் பெரிய மண்கரையை தண்ணீர் அரித்து; உடைத்துக் கொண்டு போகாமல் தடுக்க கண்மாயின் உள்வாய்ப் பகுதியில் கருங்கற்கள் கொண்டு பரப்பப் பெற்று கரையின் வலிமை கூட்டப் பெற்றது. இதனையே இக்கல்வெட்டு "கரையும் வளர்த்து . . . . கரை குலையாமற் கல்லும் படுப்பித்து" என்று குறிப்பிடுகின்றது. இவ்வாறு செய்யும் முறை பாண்டிய நாட்டில் பழங்காலத்திலிருந்தே தொன்று தொட்டு வந்த முறையாகும். ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன், இரண்டாம் வரகுண பாண்டியன் ஆகிய முற்காலப் பாண்டிய மன்னர்கள் காலத்தில் இருந்த இருஞ்சோணாடு என்ற நாட்டின் தலைவனாகவும் அரசியல் அதிகாரியாகவும் விளங்கிய இருப்பைக்குடி கிழவன் என்பவன் தானெடுத்த கண்மாயின் அடியில் இவ்வாறு கற்களைப் பரப்பி கண்மாயைப் பலப்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கது 3 இதே போன்று மேலூர் வட்டத்திலுள்ள திருவாதவூர் கண்மாயில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் பெண்ணொருத்தி கண்மாயின் உள்வாயில் கற்களைப் பரப்பிக் கண்மாயின் கரையை வலுப்படுத்தியுள்ளது குறிப்பிடத்தக்கது.4

பரம்புக் கண்மாயிலும் பிற்காலப் பாண்டியர் காலத்தில் இம்முறையைப் பின்பற்றி கண்மாயின் உள்வாயில் கற்கள் பரப்பப்பட்டுள்ளன. மேலும் இவ்வாறு பெரிய வலிமை வாய்ந்த கரையை எடுப்பதால் கண்மாயின் இருபுறமும் கரை போன்று அமைந்து நிற்கும் சோமகிரிமலை, முறிமலை என்ற இரண்டு மலைகளில் அமைந்த பாறைகள் மீதும் இக்கண்மாயின் நீர்

ஏறி நிற்கும்படி செய்யப்பட்டது. இதனல் மிகுதியான நீர் நிறைந்து வயல் பகுதிகள் நீர்க்கு அகப்பட்டுப் பாழாகாமல் தடுக்கப்பெற்றுள்ளது. கண்மாயில் நீர் நிறைந்து கரையைத் தாண்டிக்கொண்டு சென்று நீர் வழிந்து கரை மீதேறி கரையை அறுத்து கண்மாய் உடைந்து போகாமல் கலிங்கும் இதில் அமைக்கப்பட்டுள்ளது. கரையை விட சற்று தாழ்வாய் அமைந்த இக் கலிங்கில் மிகுதியான நீர் வழிந்து வெளியேறி கண்மாய் உடையாமல் பாதுகாக்கும் வழி செய்யப்பட்டுள்ளது. இம் முறை எல்லாக் கண்மாயிலும் நீர் மடையைத் தவிர்த்து மறுகால் பாய செய்யப்பட்ட அமைப்பு முறையாகும். கலிங்கு என்ருல் மிகுதி நீர் வெளியேறும் இடம் என்பது பொருளாகும். இரண்டு மடைகள் உள்ள இக் கண்மாயில் தற்போது செங்கல்லால் கட்டப்பெற்ற சிதைந்து போன பழைய மடை ஒன்று காணப் படுகின்றது. ஆனல் இதனை விட்டுவிட்டு தற்போது நவீன முறையில் கரையிலேயே புதிய மடையமைத்து நீர்ப்பாசனம் செய்து வருகின்றனர்.

## பறம்பு - ஊரும் நாடும்

இக் கண்மாய்க் கல்வெட்டில் பறம்பு என்ற ஊருக்குரிய கண்மாயாக இது குறிப்பிடப்படுகின்றது. தற்போது இக்கண் மாய்க்கு அருகில் இப்பெயரால் எவ்வித ஊரும் இல்லை. ஆனல் இவ்வூரில் அமைந்துள்ள கண்மாய்க் கல்வெட்டு மட்டும் இவ் வூரின் பழம்பெயரை நினைவூட்டும் வகையில், அதனைப் பரம்பு என்று குறிப்பிடுகின்றது. இவ்வூருக்குத் திருநாராயணமங்கலம் என்ற மற்ருெரு பெயரும் இருந்திருப்பதை இக் கல்வெட்டு தெரிவிக்கின்றது. கல்வெட்டில் 'பறம்பான திருநாராயணமங்க லம்' என்று இது குறிப்பிடப்படுகின்றது. திருநாராயணன் என்ற பெயர் முற்காலப் பாண்டியமன்னன் பராந்தகவீரநாராயண னுக்குரிய பெயராக இருந்திருக்கின்றது. இவனது பெயரால் வ்வூர் அந்தணர்கள் வாழும் சதுர்வேதிமங்கலமாக ஆக்கப்

பெற்று அது பிற்காலப்பாண்டியர் காலத்திலும் தொடர்ந்து இருந்து வந்துள்ளதை இக்கல்வெட்டால் அறிந்து கொள்ள முடிகின்றது. இந்நிலை விசயநகர வேந்தர் காலத்திலும் இருந்து வந்திருக்கின்றது. இக்கல்வெட்டுள்ள இடத்திற்கு அருகில் பொறிக்கப்பட்டுள்ள மற்றொரு விசயநகரவேந்தர்காலக் கல்வெட்டில் இவ்வூருக்குத் 'திருநாராயண மங்கலம்' என்ற பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது.

இவ் ஊர் அக்காலத்தில் 'வடபறப்பு நாடு' என்ற நாட்டுப் பிரிவில் இருந்திருப்பதை இக்கல்வெட்டு தெரிவிக்கின்றது. வட பறப்பு நாடு என்பது மதுரை மாவட்டம் மேலூர் வட்டத்தைச் சார்ந்த ஆனைமலைக்கு வடக்கே அமைந்த பகுதியாகும். இது தென்பறப்பு நாடு, வடபறப்புநாடு என்ற இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இந்நாட்டின் வடபகுதியாக இவ்ஊர் விளங்கியமையால் இது வடபறப்புநாட்டுப் பறம்பு என்று கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றது, இந்நாட்டின் தலைநகராக விளங்கிய பறம்பு என்ற இவ்ஊரின் அடிப்படையிலேயே இவ்ஊரைச் சூழ்ந்த பகுதிகள் பறப்புநாடு என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதற்குப் புதியதாகக் கண்டறியப்பெற்ற இக் கல்வெட்டு துணை நிற்கின்றது.

பாண்டியநாட்டு அரசியல் வரலாற்றிலும் சமுதாய வரலாற்றிலும் குறிப்பாக நீர்ப்பாசனத் துறையிலும் புதிய ஒளியைத் தரவல்லதாய் இக்கல்வெட்டு அமைந்திருக்கின்றது.

## அடிக்குறிப்புகள்

1. இக் கல்வெட்டு மதுரை மாவட்டம் மேலூர் அரசினர் கலைக் கல்லூரி வரலாற்றுத்துறைப் பேராசிரியர் திரு. கணபதி அவர்களால் முதலில் கண்டறியப் பெற்றுள்ளது.
2. S. I. I. Vol. XIV. No: 26
3. திரு வெ. வேதாசலம் பாண்டிய நாட்டில் 'நீர்ப்பாசனப் பணிகள்' கல்வெட்டு காலாண்டு இதழ் எண் : 17 தமிழ் நாடு அரசு தொல்பொருள், ஆய்வுத்துறை, சென்னை.
4. A. R. E. 497 of 1962-63

# “ஆதீண்டு குற்றி...”

அ. இராசேந்திரன் எம் ஏ.,
சென்னை

மனிதனுக்குத் தினவு ஏற்பட்டால் கையால் சொறிந்து கொள்கிருன். ஆடு மாடுகளுக்குத் தினவு ஏற்பட்டால் அவற்ருல் எப்படிச் சொரிந்து கொள்ள முடியும்? அவை நிழல் தரும் மரங்களில் உராய்ந்து தன் தினவை, அரிப்பைத் தீர்த்துக் கொள்கின்றன

இவ்வாறு மாடுகள் உராய்ந்து உராய்ந்து நிழல் தரும் மரங்கள் அழிந்துபோகாமல் இருக்கவும் கால்நடைகளின் தேவையை உணர்ந்தும் இவ்வகையான அமைப்பு ஏற்படுத்தப்பட்டது ஆதிகாலந்தொட்டு ஆடுமாடுகள் தினவு அடங்க உராய்வதற்கென்று பலகைக் கற்களையும், குத்துக் கற்களையும் நட்டுள்ளனர். இவை பெரும்பாலும் நீர்நிலைகளை ஒட்டியே அமைந்தன. மேய்ச்சலுக்காக வெயிலில் சுற்றும் மாடுகள் நீர்நிலையை நாடிச் செல்கின்றன. சேற்றை உடம்பில் பூசிக் கொண்டு கரை ஏறும் மாடுகளுக்கு சேறு காயும்போது தினவு ஏற்படுகிறது. உடன் குற்றியை நோக்கிச் செல்கின்றன.

இவ்வாறு தினவைத் தீர்க்க நடப்படும் குற்றினய ‘ஆதீண்டு குற்றி’ ‘மாதீண்டு துறுகல்’ என சங்கஇலக்கியங்கள் விதந்து உரைக்கின்றன.

இவ்வாறு கல் நடப்படும் வழக்கம் வரலாற்று காலத்தில் இருந்தே இருந்து வந்துள்ளது.

'ஆ தறி' என்பது ஆதீண்டு குற்றியினின்றும் வேறானது. ஆதறி என்பது ஆடு மாடுகளின் கட்டுத்தறியைக் குறிப்ப தாகும் ஆவுருஞ்சு தறி என்பதே ஆதீண்டு குற்றியாகும்.

தொல்காப்பியர் காலத்திலும் இவ்வகை ஆதீண்டு குற் றிகள் வழக்கில் இருந்ததென்பதை உரையாசிரியர்களின் உரைக குறிப்பால் அறிகிறோம்1. ஒன்றொழி பொதுச்சொல் பற்றி கூறும் தொல்காப்பியம் 49ஆம் (சொல்) சூத்திரத்திற்குப் பொருள் கூற வந்த சேனாவரையர் பல பொருட்குப் பொதுவாகிய சொல்லைப் பற்றிக் கூறும் போது ஆதீண்டு குற்றி என்ற சொல்லை மேற் கோள் காட்டுகிறார். 'ஆதீண்டு குற்றி' பசுக்கள் தீண்டுவதற் கென்றே நடப்பட்டிருந்த போதிலும் பிறவிலங்குகளும் தீண்டும என உரைக்கிறார். எனவே ஆதீண்டு குற்றி என்பது பல விலங்குகளும் உராய்வதற்காக நடப்பட்ட கல் என பொருள் கொள்ள வேண்டும் கல்லாடனார் தம் தொல்காப்பிய, சொல் விருத்தி உரையில் தலைமை பற்றியும் சிறுபான்மை பற்றியும் வரும் சொல்லுக்கு இதை மேற்கோள் காட்டுகிறார்.1

இளம்பூரணர், ஆணொழி மிகுசொல், பெண்ணொழி மிகு சொல் அன்றிப் பொதுவாய் நிற்கும் சொல்லுக்கு ஆதீண்டு குற்றியைச்சான்று காட்டுகிறார். 2. இலக்கணவிளக்கம் (பா–323) முத்துவீரியம் (பா : 81) ஆகிய இலக்கணங்களும் இச்சொல்லை எடுத்தாளத் தவறவில்லை.

### மாதீண்டு துறுகல்

சேனாவரையரின் கருத்திற்கு அணி சேர்ப்பது போன்றே ஆதீண்டு குற்றியில் பிற விலங்குகளும் உரசிக் கொண்டன

---

1. தொல்காப்பியம் – சொல். கல்லாடனார் விருத்தி உரை, கழக வெளியீடு – பக் : 45.
2. தொல்காப்பியம் – சொல், அதிகாரம் இளம்பூரணர் உரை கழக வெளியீடு. பக் : 28

என்பதைச் சங்க இலக்கியக் குறிப்புக்களால் அறிகிறோம். மிரு கங்கள் உரைவதற்காகக் குற்றவாளிகளின் வீட்டின் முற்றத் தில் விலங்குகள் தினவு தீர உராயும் பொற்றைக்கல் இருந் தது. இதை ஐங்குறுநூறு (277:1-2) "மாதீண்டு துறுகல்" என குறிக்கிறது. மா என்பது விலங்கு; துறுகல் என்பது பொற்றைக் கல். இவ்வகை குத்துக் கற்களுக்குப் பொற்றைக் கற்களையே பயன்படுத்தினர். எனவே இது ஆதீண்டு துறுகல்' எனப் பெற்றது.

இறைவன் அருட்குறியாகக் கல்தறி நடப்பதை பழமுதிர்ச் சோலையில் இருந்ததைத் திருமுருகாற்றுப்படை (226) கூறும். கந்தினும் என்பதற்கு ஆதீண்டு குற்றியையுடைய இடத்தி னும் என்பர் நச்சினார்க்கினியர் யானைத்தறியிடத் தென பாரும் உளர்

*யானை உருஞ்சிய துறுகல்*

யானை உரசியதால் மாசு ஏறிய துறு கல்மழையால் தூய்மையான செய்தியைக் குறுந்தொகை (13) சுட்டுகிறது. இக் கல்லின் குளிர்ந்த இடத்தே தலைவனும் தலைவியும் தங்கினர் என்பதை மேற்படி பாடல் சுட்டும். அம்பலங்களில் நடப்பட் டிருக்கும் நெடிய தூண்களையே துறுகல்லாக கருதி யானைகள் தம் உடம்பை உரிஞ்சிய செய்தியை பட்டினப்பாலை உரைக் கிறது. (250-51)

பசுக்கள் உரிஞ்ச அமைக்கப்பட்ட இத்தம்பங்கள் (சீவ : 419 உரை) மரத்தாலும் செய்யப்பட்டு நடப்பட்டிருந்தன.

தற்காலத்தில் இது போன்ற குற்றிகள் உள்ளதா? என ஆய்வு செய்தபோது சில குறிப்புக்கள் நமக்கு கிடைக்கின்றன.

---

தொல்காப்பியம் – சொல் அதிகாரம், இளம் பூரணர் உரை கழக வெளியீடு, பக்-28.

தருமபுரி மாவட்டத்தில் மலைப்பகுதிகளில் நீர் நிலைகளை ஒட்டி பல குத்துக் கற்கள் நடப்பட்டுள்ளன. இவற்றைப்பற்றி அப்பகுதி மக்களிடம் விசாரித்தபோது 'மாடுகள் முள் புதர்களில் மேயும் போது தினவு ஏற்படுகிறது. அவற்றின் தினவைத் தீர்க்க உரசிக் கொள்ள நடப்பட்டவை எனக் கூறுகிறார்கள்.

தஞ்சாவூர் மாவட்டத்தில் குளக்கரைகளில் பலகைக் கல் குற்றிகள் நடப்பட்டு இருப்பதைக் காணலாம். கும்பகோணம் நன்னிலம் வட்டங்களில் சில குற்றிக்கற்கள் (குத்துக் கற்கள்) கல்வெட்டுடன் காணப்படுகின்றன.

சேலம் மாவட்டத்திலும் இவ்வகைக் குற்றிகள் ஆற்றங்கரை, ஏரிக்கரை, ஓடைக்கரை முதலிய பகுதிகளில் மிகுதியும் காண்கிறோம். இதை சன்னூசிக் கல் என்று அழைக்கின்றனர். மாடுகள் உராய்வதற்கே அன்றி அவற்றிற்கு நோய்கள் வந்தால் இக்கல்லை வழிபாடு செய்யும் வழக்கமும் நடைமுறையில் உள்ளது. இவற்றுள் இயந்திரங்கள், சூலக்குறிகள், ஐந்தெழுத்து மந்திரங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. சேலம் மாவட்டத்தில் மல்லிய கரை என்ற ஊரில் இரண்டு ஆதீண்டு குற்றிகள் கல்வெட்டுடன் உள்ளன.

சேலம் மாவட்டம் ஆரியபாளையம் என்ற ஊரில் குளக்கரையில் நடப்பட்டுள்ள கல்லில் பின்வரும் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. "இவ்விடம் அக்ஷப்வருஷம் ஆவணி மாதம் தியதி கால்நடைகளுககு உரைகல் குட்டை" என காணப்படுகிறது.

கோவை மாவட்டத்தில் கால்நடைகள் உலரயும் இககல்லை 'ஆ ஒஞ்சிக் கல்லு', 'ஆ உருஞ்சிக் கல்லு' என்று அழைக்கி

ருர்கள். உருஞ்சுதல் என்ருல் உரைதல் என்று பொருள். கோவை மாவட்டத்தில் மதுக்கரை ஆற்றுப் படுகையில் வழுக் கப்பாறை என்ற இடத்தில் 'ஆ நோஞ்சிக் கல்' ஒன்று காணப் படுகிறது.

ஐதராபாத்துக்கு அருகில் உப்பல் என்ற கிராமத்தில் மர நிழலில் இதைப் போன்ற ஆதீண்டு குற்றி ஒன்று காணப் படுகிறது.

சென்னையை அடுத்துள்ள சேலையூரில் குளக்கரையில் 'மந்தைக்கல்' என்னும் பெயரில் ஒரு ஆதீண்டு குற்றி காணப் படுகிறது. அதில் சூலம், வில், அம்பு போன்ற குறியீடுகள் செதுக்கப்பட்டுள்ளன.

உத்தண்டி, பூண்டிபஜார், மடிப்பாக்கம் ஆகிய ஊர்களிலும் இவ்வகை ஆதீண்டு குற்றிகள் கண்டறியப்பட்டுள்ளன. இவற் றை ஊரார் மந்தைக்கல் என வழங்குகின்றனர். மாடுகள் உராய்வதற்கே அன்றி நோய்தீர இக்கற்களுக்கு ஊரார் வழி பாடும் செய்கின்றனர்.

## முடிவுகள்

1. விலங்குகள் உரைவதற்காக நடப்படும் கல்லே ஆதீண்டு குற்றி.
2. ஆதீண்டு குற்றி, மாதீண்டு துறுகல், கந்து என இலக் கியங்கள் விதந்து பேசுகின்றன.
3, கல்லாலும் மரத்தாலும் அமைந்த இவை மரபு மாருமல் இன்றளவும் தொடர்ந்து வருகின்றன. இவை இன்று மந்தைக்கல், உரைகல், ஆ உருஞ்சிக்கல், குற்றிக்கல் (குத்துக்கல்) என பலபடப் பேசப்பட்டு வருகின்றன.

# திருச்சுனை அகத்தீசுவரர் கோயில்

கா. நெடுஞ்செழியன் எம். ஏ., டி. இ. ஏ.,
கங்கை கொண்ட சோழபுரம்

திருச்சுனை மதுரை மாவட்டம் மேலூர்வட்டத்தில் அமைந்துள்ள சிறிய சிற்றூராகும். இவ்வூர் மதுரை நகரிலிருந்து வடகிழக்கே 25 கல் தொலைவில் அமைந்துள்ளது. இங்கு அகத்தீசுவரர் என்ற சிவன் கோயில் ஒன்று உள்ளது. இக்கோயில் சிறிய குன்றின் மீது கட்டப்பட்டுள்ளது இக்கோயிலில் 16 கல்வெட்டுகள் உள்ளன: இக்கல்வெட்டுகள் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு முதல் கி பி. 19-ஆம் நூற்றாண்டு வரையில் உள்ள காலத்தவை. இவற்றில் 13 கல்வெட்டுகள் பிற்காலப் பாண்டியர் காலத்தவை, 3 கல்வெட்டுகள் நாயக்கர் காலத்தவை இவற்றில் பிற்கால பாண்டியர் காலததிய கல்வெட்டுகள் தென்னிந்திய கல்வெட்டுத் தொகுதி 8ல் வெளிவந்துள்ளன.

## ஊர் பெயர் :-

இக்கோயிலில் உள்ள பழமையான கல்வெட்டு பராக்கிரம பாண்டியன் காலத்தது. இக்கல்வெட்டில் இவ்வூர் சுரபி நாட்டு சூழிவரகண்டன் என்று குறிப்பிடப்பட்டுள்ளது இவருக்கு பிறகு வரும் பாண்டியர் கல்வெட்டுகளில் சுரநாட்டு கழிவரகண்டன், சுரநாட்டு சுழிவரகண்டன், சுரபி நாட்டு சூழும் அரசர்கண்டன் என்றும் பலவேறு பெயர்களில் அழைக்கப்பட்டிருக்கின்றது. 19-ஆம் நூற்றாண்டு அதாவது பாறையப்பட்டு நாயக்கர்

காலத்து கல்வெட்டில்தான் திருச்சுனை என்று அழைக்கப் பட்டிருக்கின்றது. மலைமீதுள்ள சுனை என்றும், நீர் வற்றாதது என்று இன்று மக்கள் இவற்றைப்பற்றிக் கூறி வருகின்றன 19–ஆம் நூற்றாண்டிலும் இச்சுனை சிறப்பாக கருதப்பட்ட தால்தான் பாளையப்பட்டுக்காரர் இச்சுணையை கரை கட்டி பாதுகாத்துள்ளனர். இந்தச் சுணையின் பெயரே பழைய சுழிவரகண்டன் என்ற பெயரை மக்கள் மறக்கச் செய்து இன் றையப் பெயரான திருச்சுனை ஆகிவிட்டது. கல்வெட்டுகளில் இறைவன் பெயர் அகத்தீசுரமுடையார் என்று குறிக்கப பட்டுள்ளது.

## அரசர்கள்

1. பராக்கிரம பாண்டியன் (கி பி. 1144 – 1166) 9வது ஆட் சியாண்டை சேர்ந்த ஒரு கல்வெட்டு மட்டும் உள்ளது
2. ஸ்ரீ குலசேகரன் (கி. பி. 1190 - 1217) 9, 13, 27வது ஆட் சியாண்டைச் சேர்ந்த 3 கல்வெட்டுகள் இக்கோயிலில் உள்ளன.
3. ஸ்ரீ சுந்தரபாண்டியன் (கி.பி. 1216-1239) 2, 4, 11, 11, 11 வது ஆட்சியாண்டிலுள்ள இக்கல்வெட்டுகளில் சுந்தர பாண்டியன் என்ற பெயர் மட்டும் காணப்படுகிறது. எந்த சுந்தரபாண்டியன் என்று காணவில்லை. ஆதலால் எழுத் தமைதியைக் கொண்டு நோக்கும்போது 2,4,11,11,11வது ஆட்சியாண்டு கல்வெட்டுகளில் காணப்படும் சுந்தர பாண்டியன் சோனாடு கொண்டருளிய சுந்தர பாண்டியனாக இருக்கலாம்.
4. சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டிய தேவர் கி. பி 1251 – 1271. 5வது ஆட்சியாண்டு கல்வெட்டு.
5. எம்மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீ சுந்தர பாண்டியன் (கி. பி. 1216 - 1239) 14வது ஆட்சியாண்டு கல்வெட்டு.

6. குமாரலிங்கையா 19ம் நூற்றாண்டு.

இவன் மதுரை நத்தம் பகுதியை ஆட்சி செய்த நாயக்கர் வழியில் வந்த பாளையப்பட்டாவரன்.

## திருச்சுனை கம்பத்தடி மண்டபம்

தொந்திலிங்கைய்யாரவர்களின் மகன் எறுதாதுலிங்கைய்யாரவர்கள் மகன் குமாரலிங்கைய்யாரவர்கள் 'திருச்சுனை கம்பத்தடி மண்டபத்தை கட்டியதாக இம்மண்டபத்தில் அமைந்துள்ள கல்வெட்டொன்று தெரிவிக்கின்றது 1.

## திருச்சுற்று மாளிகை

குமாரலிங்கையாரவர்கள் இக்கோயில் திருச்சுற்று மாளிகையை கட்டியதாக திருச்சுற்றுமாளிகையிலுள்ள மற்றொரு கல்வெட்டு தெரிவிக்கின்றது 2.

## மதில்

குமாரலிங்கையாரவர்கள் சுனையை சுற்றியுள்ள மதிலை கட்டியதாக மதிலில் உள்ள கல்வெட்டு தெரிவிக்கின்றது 3.

## கொடைகள்

இக்கோயிலுக்கு குளம், பல்வேறு பகுதியிலுள்ள நிலங்கள் மற்றும் நெல் ஆகியவை தானமாக அளிக்கப்பட்டுள்ளன. இந்நிலத்திலிருந்து வரும் நெல்லைக் கொண்டோ வருவாயைக் கொண்டோ இக்கோயில் இறைவனுக்கு சிவனடியார்களுக்கு நாள்வழி முறைமை அரிசிசோறு, அளிக்கவும் விஞ்சனங்களுக்கும், சாத்துப்படிக்கும், பூச்சுப்படிக்கும் அளிக்கப்பட்டன. இககோயிலில் பணிபுரிந்த பட்டர்களுக்கும் நிலம் தானமாகஅளிக்கப்பட்டு, அவர்களும் இக்கோயில்இறைவனுக்கு நெல், பணத்தையும் அளித்துள்ளனர். ஊராரும் இவ்வூரில் தனியாரும், வெளியில் உள்ளோரும் இக்கோயில் இறைவனுக்கு கொடைகள் அளித்தனர்.

மற்றொரு கல்வெட்டில் சூர நாட்டிலுள்ள சுழிவரகண்டன் அகஸ்தீஸ்வரம் உடைய நாயனார்க்கு குளம் தேவதானமாக அளித்த செய்தி காணப்படுகிறது 4.

## நிலம்

இக்கோயில் இறைவனுக்கு தென்ன கங்க தேவரும், இவ் வூராரும் நிலம் தேவதான இறையிலியாக அளித்த செய்தி காணப்படுகிறது. இது கொண்டு இந் நாயனார்க்கு நானாழி அரிசியும், தம்பிராட்டி இறைவனுக்கு இருநாழியும், வடுகப் பிள்ளையார்க்கும், குன்றமெறிந்த பிள்ளையாரக்கும் அரிசி அறுநாழியும் ஆக பன்னிரெண்டு நாழி அரிசி ஊரார் அளிக்க வேண்டும் என்று கல்வெட்டு தெரிவிக்கின்றது 5 சாமந்தனார்க் அகம்படி முதல்களில் திருமஞ்சன அழகியானான வீரசிங்க தேவன் இவ்வூர் அகத்தீசுவரமுடைய நாயனார்க்கு வங்காரத் திலுள்ள ஒருமாவரையும், பாதிரம்மன் நிலம் அரைமாவும் ஆக இரண்டு மா நிலத்தை தேவதான இறையிலியாக அளித்த செய்தி கல்வெட்டு மூலம் தெரிய வருகிறது 6.

## நெல்

சோழ பாண்டிய வளநாட்டு, நாட்டுக்கணக்கு திருக்கொட் டியூர் வேட்கோவன் திருமங்கையாழ்வார் திருமலைக்காவல் வேளானும் திருத்தயக்குள திருவுடையான் அதிசெய பாண்டிய பெயரனும் இக்கோயில் விநாயகப் பிள்ளையார்க்கு நாள் ஒன் றுக்கு அமுதுபடிக்கு குறுணி நெல் அளித்த செய்தியும் காணப் படுகிறது 7.

திருச்சுனை கோயில் இறைவனுக்கு துவராபதி வேளார் முதலியான நம்பிசியன் ஆகாரதியாகி முனையைதரையன் ஆகாரதியாகி என்னும் சந்தியை ஏற்படுத்தினான். இந்தச் சந்திக்கு வாளிலார்த்தகம், பிறக்கோமான், அழகப்பெருமாள், ஆட்கொண்டான், திருநீறு பரப்பினன் ஆகியோர் தேவதான மாக நிலம் அளித்தார்கள். இது கொண்டு இவ்விறைவன் உச்சி சந்நிதிக்கும் நானாழி அரிசியும் இரு நாழி அரிசி சோறு சிவனடியார் இருவர்களுக்கு நாள் வழிமுறைமையாக அளிக்க வேண்டுமென்ற செய்தி காணப்படுகிறது 8.

## *ஊரார் அளித்த சாசனம்*

எம்மண்டலமும் கொண்டருளிய சுந்தரபாண்டியன் 14வது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று ஊரார் அளித்த சாசனம் பற்றிக் குறிப்பிடுகின்றது. சுரபி நாட்டிலுள்ள சூழும்அரசர் கண்டன் ஊரார் கேரள வளநாட்டிலுள்ள பிரம்மதேயம் மட்டியூரான நிருபசேகர சதுர்வேதி மங்கலத்து சவன்ன உடையார் சங்கத்தழகரான வைத்தியாதிராஜனுக்கு இவ்வூர் குடிகாட்டு சிறுக்கொல்லன் குளத்திலுள்ள செல்லாண்டி வயக்கல் கொன்றை வயக்கல் ஆகிய இரண்டு நிலங்களையும் விலைக்கு விற்றார்கள். பிறகு வைத்தியாதிராஜன் இந்நிலங்களை அழகப்பெருமாள்விண்ணகர் எம்பெருமானுக்கு காராண்மையாக அளித்தான் 18 அடி கோல் கொண்ட இருநூற்று ஐம்பத்தாறு குழி கொண்ட நிலம் ஒரு மாவுக்கு,கரும்பு,முதற்போகபயிருக்குகடமை அந்தராயம் வினியோகம் சில்வரி, பெருவரி, பொன்வரி, தறி இறைவெட்டி, முட்டாள் ஆகியவை நாட்டுக்காலால் அறுகல நெல்லும்,ஒரு பணமும் அழகப்பெருமானுக்கு அளிக்கவேண்டும். கோடைக்காலத்துப் பயிரான குறுவை, வரகு, தினை போன்ற பயிர்களுக்கு ஒருமாவுக்கு மேற்குறிப்பிட்டவர்களில் நாலில் ஒரு

பங்கை அளிக்கவேண்டும் வழுதிலை, பூசணி, வெள்ளரி, செங் கழுநீர், மஞ்சள், இஞ்சி, கருணை, எள்ளு போன்ற பயிர்களுக்கு மாவுக்கு ஒரு பணம் கொடுக்க வேண்டுமென்றும் சுந்தரபாண்டி, யனின் கல்வெட்டு குறிக்கின்றது 9.

## ஊரார் பட்டர்களுக்கு அளித்த நிலம்

சோழமண்டலத்திலுள்ள சிபராந்தக சதுர்வேதி மங்கலத்து இந்தரநாராயணபட்டற்கு இவ்வூரார் தரிசு நிலத்தை விளை நிலமாக்கிக் கடமை, அந்தராயம் போன்ற வரிகள் இன்றி தர்ம தானமாக அளித்த செய்தி தெரிய வருகிறது 10. மற்றொரு கல்வெட்டு மூலம் துவராதிபதி நாட்டு, எறிபடை. நல்லூரிலிருக் கும் பிள்ளையார் கங்கநான உத்தம நாயகன், சோழமண்டலத்து சிபராந்தகச் சதுர்வேதி மங்கலத்து கண்டெற்ற எச்சநாராயணப் பட்டருக்கு தரிசு நிலத்தை விளை நிலமாக ஆக்கி தர்மதான மாக ஒரு வேலி நன்செய்க்கு ஐங்கலநெல் அளக்க வேண்டு மென்றும் தெரிய வருகிறது 11.

இக்கோயிலுக்கு தனியொருவன் கொடை அளிக்க நினைத் தாலும், இவ்வூரார் அனுமதி பெற்றுத்தான் அளிக்க வேண்டும் ஊராரும் சேர்ந்து இக்கோயிலுக்கு கொடை அளித்தனர். 13ஆம் நூற்றாண்டில் பாண்டியர் காலத்தில் இவ்வூர் சிறந்து விளங் கியது என்பதை இக்கோயில் கல்வெட்டுகளிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

## அடிக் குறிப்புகள்

1 - 3 இச்செய்தியை குறிக்கும் கல்வெட்டுகள் நேரில் படித்து அறியப்பட்டன.

4-11. South Indian Inscriptions Vol. VIII No. 403, 412, 415, 413, 410, 125, 415,

# தஞ்சைப் பெரிய கோயில் பரிவார ஆலயத்துப் பிள்ளையார்

இரா. ப. கருணானந்தன் எம். ஏ., டி. இ. ஏ
தஞ்சாவூர்

கருவறையைச் சுற்றியுள்ள திருச்சுற்றில் பரிவார ஆலயங்கள் அமைப்பது பண்டைய மரபு. நார்த்தாமலை விசயாலய சோழீச்சுரம் முதலான முற்காலச் சோழர் கோயில்களில் பரிவார ஆலயங்கள் இருப்பது அறியப்பெற்றுள்ளன. பரிவார ஆலயங்களை அஷ்டபரிவாரக்கோயில் என எறும்பூர்க் கல்வெட்டு கூறுகிறது. பிள்ளையார், முருகன், சூரியன், சந்திரன் சேட்டாதேவி, சண்டேசுவரர், பைரவர் முதலியோரை அஷ்ட பரிவார தேவதைகள் என அறிஞர்கள் முடிவு செய்துள்ளனர்.1 முற்காலச் சோழர் கோயில்களில் பிள்ளையாரை அர்த்த மண்டபச் சுவர் தெற்குக் கோட்டங்களிலும், திருச்சுற்றின் தென் மேற்கு மூலையில் பரிவார ஆலயத்திலும் அமைக்கும் வழக்கம் காணப்படுகிறது.

தஞ்சைப் பெரியகோயில் திருச்சுற்று மாளிகையை எடுப்பித்தவன் இராசராசனுடைய படைத்தலைவர்களுள் ஒருவனாகிய கிருஷ்ணன் இராமனான மும்முடிச்சோழ பிரம்மராயன் என்பான்.2 இத் திருச்சுற்றுமாளிகையில் வேறு எந்த கோவிலிலும் இல்லாத அளவிற்குச் சுமார் 36 பரிவார ஆலயங்கள் உள்ளன.3 இப்பரிவார ஆலயங்களுள் தென்மேற்கு மூலையில் பரிவார ஆலயத்துப் பிள்ளையார் கோயில் உள்ளது. திருச்சுற்று மாளிகையை எடுப்பித்த கிருஷ்ணன் இராமனே இப்பரிவார ஆலயங்களையும் அமைத்திருக்கலாம் எனலாம்.

## கல்வெட்டுகள்

பரிவார ஆலயத்துப் பிள்ளையாரைப் பற்றி சுமார் 8 கல்வெட்டுகள் உள்ளன. அவற்றுள் 7 கல்வெட்டுகள் மட்டுமே பதிக்கப்பட்டுள்ளன [4] முதல் ராசேந்திர சோழனின் மூன்றாம் ஆட்சியாண்டைச் சேர்ந்த பதிப்பிக்கப் பெறாத கல்வெட்டு ஒன்று பரிவார ஆலயத்துப் பிள்ளையார் கோயிலின் முன்புறத்து அதிட்டானப் பகுதியிலிருந்து அறியப்பெற்றுள்ளது [5] ஒரு கல்வெட்டைத் தவிர மற்ற எழு கல்வெட்டுகளும் அரசன் பெயரைத் தெரிவிக்கின்றன. இவற்றுள் 5 கல்வெட்டுகள் இராசராசனின் ஆட்சியாண்டு 29ல் வெளியிடப்பெற்றவை இவற்றுள் இரண்டு கல்வெட்டுகள் இதே ஆண்டை இராசேந்திரனின் ஆட்சியாண்டு 3 எனவும் தெரிவிக்கின்றன. எனவே இருவருடைய ஆட்சியாண்டையும் ஒரே ஆண்டைச் சேர்ந்தது எனக் கொள்ளலாம். இராசேந்திரனின் ஆட்சியாண்டு 3 என வரும் கல்வெட்டுகளும் இரண்டு உள்ளன. கல்வெட்டுகளில் ஆண்டு 29 வது வரை, ஆண்டு 3வது வரை குடுத்தன என வருவதால் இவ்வாட்சியாண்டு தொடங்கி கல்வெட்டுகள் பொறிக்கப்பட்ட சமயம் வரை கொடுக்கப்பெற்ற கொடையைப் பற்றியவை எனப் பொருள் கொள்ளலாம்.

பரிவார ஆலயத்துப் பிள்ளையாரைப் பற்றிய எட்டுக் கல்வெட்டுகளும் பிள்ளையார் கோயில் அதிட்டானப் பகுதி மேற்படிப் பிள்ளையார் கோயிலுக்கு அருகிலுள்ள தூண்கள் முதலியவற்றிலேயே பொறிக்கப் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. பிள்ளையாரைப் பற்றிய கல்வெட்டுகள் யாவும் பிள்ளையார்க்கு வழங்கப் பெற்ற பலவகைக் கொடைகளைப் பற்றியே பேசுகின்றன.

## பிள்ளையார் சொல்லாட்சி

ஆலயத்துப் பிள்ளையார் கணபதியார், பரிவார ஆலயத்துப்பிள்ளையார் கணபதியார், உடையார் கோயிலில் ஆலையத்துப்பிள்ளையார் கணபதியார், உடையார் ராஜராஜீஸ்வரமுடையார் கோயிலில் பரிவாராலயத்துப் பிள்ளையார் கணபதியார், கணபதியார் என்றவாறு பிள்ளையாரைப்பற்றிய சொல்லாட்சி கல்வெட்டுகளில் காணப்படுகிறது ஆலயத்துப் பிள்ளையார் என்பதும் பரிவாரஆலயத்துப் பிள்ளையார் என்பதும் ஒருவரையே குறிக்கும் ஆலயத்துப் பிள்ளையார் என்னும்சொல்லாட்சி கோட்டத்துப் பிள்ளையாரைக் குறிப்பிடாது எனலாம்.

பெரும்பாலும் பிள்ளையார் என்னும் சொல்லாட்சி தனித்து வராது 'பிள்ளையார் கணபதியார்' எனச் சேர்ந்தே வருகிறது. உடையார் ராஜராஜீஸ்வரமுடையார் கோயிலில் பரிவார ஆலயத்துப் பிள்ளையார் கணபதியார் எனக்கூறி கோவிலுக்குள் உள்ள பரிவார ஆலயங்களுள் ஒன்று இப்பிள்ளையார் கோயில் எனக் கல்வெட்டு தெளிவாகச் சுட்டுகின்றது.

## கொடை கொடுத்தோர்

தஞ்சைப் பெரிய கோயில் பரிவார ஆலயத்துப் பிள்ளையார்க்காக இராசராசனையும் சேர்த்து அறுவர் கொடை கொடுத்துள்ளனர். இராசராசன் கொடுத்த கொடை பற்றி இரண்டு கல்வெட்டுகளும் பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூர்யனான தென்னவன் மூவேர்தவேளான் வழங்கியகொடை பற்றி மூன்று கல்வெட்டுகளும் பேசுகின்றன. பரிவார ஆலயத்துப் பிள்ளையார்க்கு அதிகமான கொடைகளை வழங்கிய தென்னவன் மூவேந்தவேளானைக் கல்வெட்டுகள் 'ராஜராஜீஸ்வரம் உடையார்க்கு ஸ்ரீகார்யம்செய்கின்ற பொய்கைநாடுகிழவன் ஆதித்தன் சூர்யனான தென்னவன் மூவேந்தவேளான்' என அழைக்கின்றன. கோவில் ஸ்ரீ காரியம் செய்யும் பணியைப்

பொறுப்பாக ஏற்றுள்ள இவன் முதன்மூலக் கடவுளாகிய பிள்ளையார்க்கு மிகுதியான கொடைகள் வழங்கியது குறிப்பிடத்தக்கது.

பெரியகோயில் ஸ்ரீ காரியக் கண்காணி நாயகம் செய்தவனும் இராசராசனின் பணிமகன் ஒருவனும், புரவுவரித் திணைக்களத்து வரிப்பொத்தகநாயகன் ஒருவனும், தஞ்சாவூர்ப் புறம்படி மடிகையில் இருந்த வியாபாரி ஒருவனும் பரிவார ஆலயத்தில் பிள்ளையார்க்காகக் கொடைகள் வழங்கியுள்ளனர்.

## *அமுது செய்ய வாழைக்கனி*

இராசராசசோழன், ஆலயத்துப் பிள்ளையார் நாள்தோறும் வாழைக்கனி அமுது செய்து அருள்வதற்காக ஏற்பாடு செய்துள்ளான். இச்செய்திபற்றிய கல்வெட்டு மேலைத்திருச்சுற்றில் பிள்ளையார் கோயிலுக்கு அருகில் உள்ளது. இக்கல்வெட்டு ''இராசராசதேவர் ஆலையத்துப் பிள்ளையார் கணபதியார்க்கு வாழைப்பழம் அமுது செய்தருள உடையார் பண்டாரத்து பொலிசையூட்டுக்கு வைத்தருளின காசும், இக்காசு பொலிசையூட்டுக்குக்கொண்ட அங்காடிகளும் கல்லில் வெட்டியது' எனத் தொடங்குகிறது.

ஆலயத்துப்பிள்ளையார் திருவமுதுக்குக்கு நாள்தோறும் 150வாழைப்பழங்கள் வழங்கப்பெறுதல் வேண்டும் என்பது இராசராசனின் விருப்பம். நாள் ஒன்றுக்கு 150 பழங்கள் என்றால் ஓராண்டிற்கு 54 000 பழங்கள் (எனவே ஓராண்டுக்கு 360 நாட்கள் எனக் கணக்கிடப்பட்டுள்ளது.) அப்போதைய காசு 1 க்கு வாழைப்பழம் 1200 எனில் 54,000 பழத்திற்குக் காசு 45 ஆகிறது. எனவே ஆண்டு ஒன்றுக்கு வட்டியாக (பொலிசை) 45 காசு வருவதற்காக இராசராசன் உடையார் பண்டாரத்தில்

காசு 1க்கு ஆண்டு 1க்கு அரைக்கால்காசு வட்டியாகக் கொண்டு 360 காசுகளை வைத்துள்ளான். இம் 360 காசுகளை, தஞ்சாவூரைச் சேர்ந்த 4 வணிகக் குழுவினர் உடையார் பண்டாரத்திலிருந்து பெற்று, மேற்படி பெற்ற காசுகளின் வட்டித் தொகைக்கு ஏற்றவாறு வாழைப்பழங்களை நாள்தோறும் பண்டாரத்தில் செலுத்தியுள்ளனர்.

இக்கல்வெட்டு தனித்தனியாக ஒவ்வொரு வணிகக் குழுவினர் பெற்ற காசுகளையும், அதற்குரிய பொலிசைத் தொகையினையும், அதனால் நாள்தோறும் வழங்க வேண்டிய வாழைக் கனிகளின் எண்ணிக்கையினையும் மிகத் தெளிவாக வரையறுத்துக் கூறுகிறது.

1) தஞ்சாவூர்ப் புறம்படி நித்தவினோத பெருந் தெருவில் நகரத்தார் :
   1. கொண்ட காசு 60
   2. காசு ஒன்றுக்கு ஆண்டுக்கு அரைக்கால் காசு பொலிசையாக பொலிசைக் காசு $7\frac{1}{2}$க்கு
   3. நிசதம் உடையார் பண்டாரத்தில் இடக்கடவ வாழைப் பழம் 25 (எனவே ஓராண்டுக்கு 9,000 பழங்கள்)

2) தஞ்சாவூர்ப் புறம்படி மும்முடிச் சோழப் பெருந் தெருவில் நகரத்தார் :
   1. கொண்ட காசு 120
   2. மேற்சொன்னபடி பொலிசைக் காசு 15
   3. எனவே வழங்க வேண்டிய வாழைப்பழம் 50 (எனவே ஓராண்டுக்கு 18.000 பழங்கள்)

3) தஞ்சாவூர்ப் புறம்படி வீரசிகாமணிப் பெருந் தெருவில் நகரத்தார் :

கொண்ட காசு 120. பொலிசை 15 காசுக்கு நாள் தோறும் 50 பழம்

4) தஞ்சாவூர்ப் புறப்படி திரிபுவன மாதேவிப் பேரங்காடி நகரத்தார் :

கொண்ட காசு 60. பொலிசை 7½ காசுக்கு நிசதம் வழங்கவேண்டியது 25பழம். பிள்ளையார்க்கு நாள்தோறும் அமுதுக்கு வழங்கவேண்டிய 150வாழைப்பழத்தைக்கொடுக்க கும் பொறுப்பை ஒருவரிடமே தராமல் 4 வெவ்வேறு தெருவில் உள்ள 4 வெவ்வேறு வணிகக் குழுவினரிடம் இராசராசன் ஒப்படைத்துள்ள மதிநுட்பம் வியந்து பாராட்டுவதற்கு உரியது. நகரத்தார் நாள்தோறுமவாழைப்பழத்தை உடையார் பண்டாரத்தில் (தஞ்சைப் பெரிய கோயிலில இருந்த கருவூலத்தில்) ஒப்படைக்க வேண்டும் எனவும் ஆணையிடப்பட்டுள்ளது.

இராசராசசோழன் பரிவார ஆலயத்துப் பிள்ளையார்க்காக 25 கழஞ்சு, காலே எழுமா நிறையுடைய பொன்னால் ஆன பாகுவலயம் (தோள் அணி) ஒன்றையும். 25 கழஞ்சு நிறையுடைய பொன்னால் ஆன மற்றொரு தோள் அணியையும் வழங்கியுள்ளான் 7.

## தென்னவன் மூவேந்த வேளான் வழங்கியவை

தஞ்சைப் பெரிய கோயிலில் இராசராசன், அவன் மனைவி லோகமாதேவி, மெய்ப்பொருள் நாயனார், சிறுத்தொண்ட நாயனார் முதலிய நான்கு செப்புப்படிமங்களை எழுந்தருளச்செய்தவன். பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளான் ஆவான் 8.

## செம்பும் தராவும் வெண்கலமும்

1) செப்புதளிகை 2) வட்டில் 3) 101 பலம் நிறையுடைய தராத்தாரைக் கெண்டி 4) நூற்றுப்பலம் நிறையுடைய தராப் பெட்டகம் 5) 75 பலம் நிறையுடைய வெண்கலத் தளிகை 6) நாற்பலனே கைசு நிறையுடைய வெண்கலக் கைச் சொலம் 7) செப்புத் திருமேனிப் பிள்ளையார்க்கு ஒரு பலனே கைசு நிறையுடைய வெண்கலத் தட்டம் என ஒவ்வொன்றிலும் ஒவ்வொன்றினைத் தென்னவன் மூவேந்தவேளான் பிள்ளையார்க்காக வழங்கியுள்ளான் 9 செம்பு, தரா, வெண்கலம் முதலியவற்றால் ஆன இப்பொருள்கள் அனைத்தும் ஆடவல்லான் என்னும் துலாக்கோலால் நிறை எடுக்கப்பெற்று வழங்கப்பெற்றுள்ளன. கல்வெட்டுச் சிதைவின் காரணமாக இவன் வழங்கிய இத்தகைய பொருள்களின் பெயர்கள் சிலவற்றை அறியுமாறு இல்லை.

## பொன்னும் மணியும்

பரிவார ஆலயத்துப் பிள்ளையார்க்காகத் தென்னவன் மூவேந்தவேளான் வழங்கியுள்ள பொன்னும் மணியும் மிகச் சிறப்பு வாய்ந்தவை. பொன்னை ஆடவல்லான் என்னும் கல்லால் நிறைசெய்தும், ரத்தினங்களைத் தட்சிணமேரு விடங்கன் என்னும் கல்லால் நிறை எடுத்தும் வழங்கியுள்ளான். இக்கொடையைப் பற்றிக் கூறும் கல்வெட்டு மூவேந்தவேளான் வழங்கிய ஒவ்வொரு பொருளிலும் எத்துனை, எத்துனை மாணிக்கக் கற்கள், பளிங்கு, வயிரம் முதலானவற்றைப் பதித்து வழங்கியுள்ளான் எனத்தெளிவாக வரையறுத்துக் கூறுகிறது10.

(1) கோம்பின் கொள்கை ஒன்று- கொம்பின் கொள்கை என்பது யானைத் தந்தத்தால் செய்யப்பட்ட அணிவகைகளுள் ஒன்று. 11 இதில் தடவிக் கட்டின (பதித்த) மாணிக்கம் 8, தடவிக் கட்டின பளிங்கு 2, பளிங்கு வயிரம் 14, முத்து வட்டம், ஒப்புமுத்து, குறுமுத்து சப்பத்தியும் ஆக முத்து 119 பதித்துள்ள கொம்பின் கொள்கை ஒன்றை வழங்கியுள்ளான். இதனுடைய எடை பொன்னும் அரக்கும் உட்பட 14 கழஞ்சு முக்காலே மஞ்சாடி எனவும், விலை காசு 23 எனவும் கல்வெட்டு தெரிவிக்கிறது. (2) திருப்பொற் பூ ஒன்று- இதில் தடவிக் கட்டின பளிங்கு ஒன்று பிஞ்சு நிறை ஆறு மஞ்சாடியும் உட்படப் பொன் எண் கழஞ்சு அரையே மஞ்சாடி. குன்றிக்கு விலை காசு 18. (3) கும்பத்தகடு ஒன்று- இதில் தடவிக்கட்டின பளிங்கு ஒன்று ஆகும் இதனுடைய நிறை ஆறு மஞ்சாடி. பொன்னின் நிறை இரு கழஞ்சே நாலு மஞ்சாடி. குன்றிக்கு விலை காசு 4. (4) திருநயநம் ஒன்று (கண்மலர்)- இதில் கட்டின நீலக்கல் ஒன்று ஆகும். பிஞ்சு நிறை நாலு மஞ்சாடியும் குன்றியும் உட்படப் பொன் அரைக் கழஞ்சே 3 மஞ்சாடி. ஒரு மாவுக்கு விலை காசு $1\frac{1}{2}$. (5) மாப்பழமாகச் செய்த தகடு ஒன்று- பொன் முக்கழஞ்சு (6) திருக்கைய்க் காறை ஒன்று- பொன் அறுகழஞ்சே கால். (7) திருக்கைய்க் காறை ஒன்று- பொன் அறுகழஞ்சே மஞ்சாடி. (8) மத்தகத் தகடு (பிள்ளையாரின் நெற்றியில் சூட்டும் அணி ஒன்று- பொன் பதின் கழஞ்சு. பரிவார ஆலயத்துப் பிள்ளையாரை விழாக் காலங்களில் அழகுபடுத்தி கண்டு மகிழ்வதற்காக மூவேந்த வேளான் இவற்றை வழங்கியுள்ளான் எனலாம்.

## புதுக்கல் வெட்டு

பரிவார ஆலயத்துப் பிள்ளையாரைப் பற்றிய பதிப்பிக்கப் பெறாத கல்வெட்டு ஒன்று மத்திய தொல்பொருள் ஆய்வுத்

துறையினரால் கோவிலைத் தூய்மைப்படுத்தும்போது வெளிப் படுத்தப்பெற்றுள்ளது. இக்கல்வெட்டு பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளான் பிள் ளையார்க்கு பெருச்சாளி வாகனம், பூதம், பத்மபீடம் முதலிய வற்றைச் செய்து வழங்கியமை பற்றித் தெரிவிக்கிறது.

1. பெருச்சாளி வாகனம் : இதனுடைய உயரம் பாதாதி கேசாந்தம் ஒன்பதிற்று விரல் உயரம், நீளம் முக்கால் முழமே ஒருவிரல் நீளம். இப்பெருச்சாளி வாகனம் செம்பினால் நின்ற வடிவில் செய்து வழங்கப்பட்டுள்ளது. 2. பீடம் ஒன்று : ஐவிரலரை உயரம், எழுவிரல் அகலம், அரை முழமே நால் விர நீளமுடைய பீடம் இது. 3. பூதம் ஒன்று : பாதாதி கேசாந் தம் எண்விரல் உயரமுடைய, இரண்டு கைகளுடன் கூடியபூதம் 4 பத்மபீடம் ஒன்று : தாமரை வடிவிலான இருக்கை இது. மூவிரலே ஒருதோரை உயரமும் 9½விரல் சுற்றும் உடையது இது' இவை அனைத்தும் உடையார் கோயில் முழத்தால் அளவீடு செய்யப்பெற்று வழங்கப் பெற்றுள்ளன. கணபதியின் ஆயுதங் களில் ஒன்றாகப் பூதம் என்று கூறப்படுகிறது. இது வீர கணபதியின் கையில் காட்டப்பட்டிருக்கும். இதனை ஏவிப் பகைவர்களை விழுங்கச் செய்வது வழக்கம் என்று சொல்லப் படுகிறது.12 தென்னவன் முவேந்தவேளான் செம்பினால் செய்து வழங்கியுள்ள பூதம் இத்தகைய பூதமாக இருக்கலாம்

## ஏனையோர் வழங்கியவை

இராசராசனுடைய பணிமகனாகிய சத்திரிய சிகாமணி வள நாட்டுச் சேற்றூர்க் கூற்றத்து மருதத்தூர் மருதத்தூருடையான் மதுராந்தகன் பராந்தகன் என்பான். 1) முத்துப்பதித்தசுட்டி ஒன்றினையும் 2) திருப்பொற்பூ ஒன்றினையும் 3) பொன்னால் செய்யப்பட்ட திருப்பட்டம் ஒன்றினையும் 4) பதின் முக்கழஞ்சு நிறையுடைய பொன்னால் ஆன பூணூல் ஒன்றினையும் செய்து வழங்கியுள்ளான்.13 இராசராசனுடைய மற்றுமொரு பணிமக

னாகிய புரவுவரி திணைக்களத்து (வருவாய்த்துறை) வரிப் பொத்தக நாயகன் பாண்டிய குலாசனி வளநாட்டுப் புறக் கிளியூர் நாட்டுக் காமதமங்கலமுடையான் காஞ்சன் கொண் டையன் என்பான் 29 பலம் எடையுடைய வெண்கலத் தளிகை ஒன்றை வழங்கியுள்ளான்.14

தஞ்சாவூர்ப் புறம்படி மடிகையைச் சேர்ந்த நாராயணன் கரம்பை செட்டி என்னும் வணிகன் இரு பளிங்குகள் பதித்த சங்கிட்டு அடைத்த கற்கண்டு ஒன்றினையும், 9 கழஞ்சு 3 மஞ் சாடி நிறையுடைய பொன்னால் செய்யப்பெற்ற திரல்மணிவடம் ஒன்றினையும் செய்து வழங்கியுள்ளான்.15 தஞ்சைப் பெரிய கோயிலில் இராசராசன் ஆட்சி காலத்தில் ஸ்ரீகாரியக் கண் காணி நாயகம் செய்தவன் பாண்டி நாடான ராஜராஜ மண் டலத்துத் திருக்கானப்பேர்க் கூற்றத்துப் பாளூர்ப் பாளூர் கிழவன் அரவணையான மாலரிகேசவன் என்பான். இவன் பரி வார ஆலயத்துப் பிள்ளையார்க்காகப் பித்தளையினால் 69 பலம் எடையில் ஈழப்பரிசுஎண் சதுரமாகப்படிக்கம் ஒன்றினைச்செய்து வழங்கியுள்ளான் என்று மற்றுமொரு கல்வெட்டு தெரிவிக் கிறது 16

## *பிள்ளையார் இருப்பிடம்*

தஞ்சைப் பெரிய கோயில் திருச்சுற்று மாளிகையின் தென் மேற்கு மூலையில் கிழக்கு நோக்கிய நிலையில் பரிவார ஆல யத்துப் பிள்ளையாரின் கோவில் உள்ளது. திருச்சுற்றில் உள்ள சுமார் 36 கருவறைகளில் சில சதுர வடிவிலும், சில நீண்ட வடிவிலும் இருக்க பிள்ளையாரின் கருவறை சதுர வடிவில உள்ளது. பரிவார ஆலயங்களில் ஒரு குறிப்பிட்ட 7 கருவறை களுக்கு மட்டும் விமானம் போன்ற அமைப்பு உள்ளது. ஆனால் பிள்ளையார் பரிவார ஆலயத்தின் மேல்பகுதியில் விமானம்

போன்ற அமைப்பு இல்லை. மற்ற பரிவார ஆலயங்களைப் போலப் பரிவார ஆலயத்துப் பிள்ளையார் கோவிலுக்கும் திருச் சுற்றுத் தளத்திலிருந்து ஏறிச் செல்ல வசதியாக படிகட்டு அமைப்பும் சோழர் காலத்திலேயே அமைக்கப்பட்டுள்ளது 17

பரிவார ஆலயத்துப் பிள்ளையார் கோவிலுக்குள் தற்போது பிற்காலத்தைச் சேர்ந்த பிள்ளையார் சிற்பமே உள்ளது. பரி வார ஆலயத்திற்காக இராசராசன் காலத்தில் செய்யப்பட்ட பிள்ளையார் சிற்பம் பின்னமுற்ற நிலையில் தெற்குப் பிரகாரத் தில் வெளியில் கிடந்ததை மத்திய தொல்பொருள் ஆய்வத் துறையினர் பெரிய கோயிலுக்குள் அமைத்துள்ள அருங்காட் சியகத்தில் வைத்துப்பாதுகாத்து வருகின்றனர். தஞ்சைப் பெரிய கோயில் அருங்காட்சியகத்திற்குள் செல்கின்றவர்கள் 94 செ.மீ உயரமும் உள்ள பரிவார ஆலயத்திற்குரிய பிள்ளையாரைக் கண்டு களிக்கலாம் 12

இப் பிள்ளையார் வலக்காலைக் குத்திட்டு தாமரைப் பீடத் தின்மீது பெரிய தொந்தியுடன் அமர்ந்துள்ளார். 5 கரண்டங் கள் கொண்ட கரண்ட மகுடம் தலையை அணி செய்கிறது. 4 இவரது 4 கைகளும் பின்னமாக உள்ளன. பின்னிரு கை களில் அங்குசம், பாசம் இருந்திருக்க வேண்டும். யானை முகத் தும்பிக்கையும் உடைந்துள்ளது. முறம் போன்ற காது. காது களில் செவிப்பூக்கள் சொருகப்பட்டுள்ளன. தொந்தியின் மீது உதரபந்தம். தொந்திக்குழி நன்கு காட்டப்பட்டுள்ளது தோள் அணி, பட்டையான பூனூல், கைக்கடகம், காலில் சிலம்பு அணிந்துள்ளார். பெரிய கழுத்தணி ஒன்றும் காணப்படுகிறது. கீழே இடப்பக்கமாகத் திரும்பி பிள்ளையாரைப் பார்த்துத் தலையைத் தூக்கிய நிலையில் பெருச்சாளி வாகனம் பீடத் தில் வடிக்கப்பட்டுள்ளது.

தஞ்சைப் பெரிய கோயிலில் அமைந்துள்ள மற்ற பரிவார ஆலயங்களைவிட அதிகமான அளவில் கொடைபெற்ற பெருமையுடையவர் பரிவார ஆலயத்துப் பிள்ளையார். இராசராசனும் இராசராசனின் பணியாளர்களும், தஞ்சை வணிகரும் கொடைகள் வழங்கும் வண்ணம் சிறப்புப் பெற்றவர் இப்பிள்ளையார். பெருவுடையாரைப் போன்று கொடையாளர்களால் அணிகலன்கள், கவசங்கள், பரிகலன்கள் (வழிபாட்டிற்குரிய பாத்திரங்கள்) வாகனங்கள், திருவமுது முதலியன பெற்ற பேருடையவர் இப்பிள்ளையார். எனவே இராசராசசோழன் ஆட்சிக் காலத்தில் தஞ்சைப் பெரிய கோவிலில் அமைந்த மற்ற பரிவார தேவதைகளைவிட பரிவார ஆலயத்துப் பிள்ளையாரின் வழிபாடு பன்மடங்கு சிறப்புற்றுத் திகழ்ந்தது எனலாம்

## அடிக் குறிப்புகள்

1) முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் (1966) பக்கம் 279-281 S. R. பாலசுப்பிரமணியம்

2) SII Vol II Nos: 31, 33, 45

3) வடக்குத் திருச்சுற்று மாளிகையில் 9 அறைகள், மேற்கு திருச்சுற்று மாளிகையில் 9 அறைகள், தெற்கில் 8 அறைகள், கிழக்கில் 10 அறைகள் எனத் திருச்சுற்று மாளிகையில் 36 அறைகள் காணப்படுகின்றன. ஆலயத்து உமாபரமேஸ்வரியார்க்கு வடகிழக்கு முலையில் ஓர் அறை, எண்திசைக் காவலர்க்கு 8 அறைகள், அஷ்டபரிவார தேவதைகளுக்கு 7 அறைகள் (சண்டீச்சுரரைத் தவிர்த்து) என 16 அறைகளைக் கணக்கில் கொண்டால் மீதமுள்ள 20 அறைகள் எந்தத் தேவதைகளுக்காக எடுக்கப்பட்டன என்பது ஆய்வுக்குரியது.

4) SII Vol II Nos: 36, 37, 85, 86, 87, 88, 89

5) புதுக் கல்வெட்டு வாசகம்— (1) ஸ்ரீகார்யம் செய்கின்ற பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூர்யனான தென்னவன் மூவேந்தவேளான் உடையார். (2) ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு மூன்றாவது வரை உடையார் கோயிலில் ஆலயத்துப் பிள்ளையார் கணபதியார் (3) க்கு வாஹநம் பெருச்சாளியாகச் செய்து குடுத்து உடையார் கோயிலில் முழத்தால் அளந்து கல்லில் வெட்டியது பாதாதி (4) கேசாந்தம் ஒன்பதிற்று விரல் உசரத்து முக்கால் முழமே ஒருவிரல் நீளத்து ...க்குக் கொண்டு செம்பினால் செய்து பண் (5) ணி நின்றதாகச் செய்து குடுத்த பெருச்சாளி ஒன்று இது ஏறி நின்ற ஐவிரலரை உசரத்து எழுவிரல் அகலத்து அரை முழ (6) மே நால்விரலரை நீளத்து பீடம் ஒன்று இது பண்ணு வானாகச் செய்த பாதாதி கேசாந்தம் எண்விரல் உசரத்து இரண்டுகை (7) யுடையதாகச் செய்த பூதம் இது ஏறி நின்ற இதனொடுங் கூடச் செய்த மூவிரலே ஒருதோரை உசரத்து ஒன்பதரை (8) விரல்ச் சுற்றுடைத்தாகச் செய்த பத்மபீடம் ஒன்று. அனைவரும் அறிந்து கொள்ளும் வகையில், கல்வெட்டுகளின் இடையே கையாளப்பட்டுள்ள கிரந்த எழுத்துக்கள் நீக்கப்பெற்று அதற்குரிய தமிழ் எழுத்துக்களில் இக்கல்வெட்டு கொடுக்கப்பெற்றுள்ளது.

6) SII Vol II No : 37

7) SII Vol II No : 86

8) பிற்காலச் சோழர் சரித்திரம் (1974) சதாசிவப் பண்டாரத்தார் p 141–142

9) SII Vol II No : 85

10) SII Vol II No : 86

11) தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகளின் உள் அருஞ்சொற் பொருட் குறிப்பு (1970)

12) கணபதி (திருவாவடுதுறை ஆதீனம் வெளியீடு 1956) பக்கம் 104

13) SII Vol II No : 87

14) SII Vol II No : 88

15) SII Vol II No : 89

16) SII Vol II No : 36

17) பரிவார தேவதைகளின் வழிபாடு குறைந்து பிள்ளையார் முருகன் வழிபாடு மிக்க பிற்காலத்தில் முருகனுக்கும் பிள்ளையார்க்கும் முறையே நாயக்கர், மராட்டியர் காலத்தில் பெரிய கோயிலுக்குள் தனித்தனியே கோவில்கள் அமைக்கப்பட்டுள்ளன. மராட்டிய மன்னரால் அமைக்கப்பட்ட பிள்ளையார் கோயிலும் திருச்சுற்றின் தென்மேற்கில் தான் உள்ளது. இப்பிள்ளையார் கோவிலிலிருந்து முற்றிலும் மாறுபட்டது, திருச்சுற்று மாளிகையில் அமைக்கப்பட்டுள்ள பரிவார ஆலயத்துப் பிள்ளையார் கோயில்.

18) S. R. Balasubramaniam Middle Chole Temples p 24

நன்றி : இக்கட்டுரை ஆக்கத்திற்கு ஆலோசனைகள் வழங்கி தஞ்சை மாவட்டப் பதிவு அலுவலர் திருமிகு கி. ஸ்ரீதரன் M. A. அவர்களுக்கு நன்றி உரியது.

# எறும்பூர்

ச. செல்வராஜ் எம். ஏ.
சிதம்பரம்

தென்னாற்காடு மாவட்டத்தில் சோழர்கள் பல இடங்களில் நூற்றுக்கு மேலான பெரிய கோயில்களைக் கட்டிக் கோயிற் கலையை வளர்த்துச் சிறப்பு செய்துள்ளான். அவ்வாறு கட்டிச் சிறப்பு பெற்றதுதான் எறும்பூர் கடம்பவன ஈஸ்வரன் கோயில் ஆகும். இக்கோயில் அமைந்த நிலே, சிற்பச் சிறப்பு, கல் வெட்டு கூறும் சமுதாயக் கட்டிடக்கலே, அவ்வூரின் தொன்மை ஆகியவற்றை இக்கட்டுரை விரித்துக் கூறுகின்றது.

## அமைவிடம்

இவ்வூர் தென் ஆற்காடு மாவட்டத்தில் சிதம்பரம்–விருத் தாசலம் சாலையில் 24 கி.மீ தொலைவில் அமைந்து உள்ளது சேத்தியா தோப்பில் இருந்து 7 கி மீ தொலைவில் காணப்படு கின்றது. இவ்வூரின் தெற்குப் பகுதியில் கிழக்கு முகமாக கடம் பவனேஸ்வரர் கோவில் அமைந்துள்ளது.

## ஊரும் பெயரும்

எறும்பூர் என்பது தற்பொழுது இவ்வூருக்குவழங்கிய பெய ராகும் ஆனால் பழைமையான கல்வெட்டுக்களிலும், பிறசான் றுகளிலும் காணும் போதும் அவற்றில் இவ்வூரின் பெயர் விக்

கிரம சோழ சதுர்வேதி மங்கலம் என்கின்ற உறுமூர 1 என்று குறிப்பிடப்படுகின்றது. காலவாரியாகத் தொடர்ந்து வரும் கல்வெட்டுக் குறிப்பிக்களிலும் உறுமூர் என்பதே இவ்வூரின் பெயராக நிலைபெற்று வந்திருக்கின்றது. உறுமூர் என்பதே தற்பொழுது எறும்பூர் என்று மக்கள் வழக்கில் மருவிய நிலையில் வழங்கப்பட்டு வருகின்றது.

## கடம்பவனேஸ்வரர் கோயில்

கிழக்கு நோக்கி அமைந்துள்ள இத்திருக் கோயில் சிறிய கருவறையையும், அர்த்தமண்டபத்தையும் கொண்டு விளங்குகின்றது. இவை கற்களால் எழுப்பப்பட்டுள்ளன. இதன் இடது புறம் கல்யாணசுந்தரி அம்மன் ஆலயம் அமைக்கப்பட்டுள்ளது. கற்றளியாக அமைத்த கோயில் விமானம் தற்பொழுது சுதையால் மாற்றியமைக்கப்பட்டுள்ளது. இக் கோயிலின் பல பகுதிகள் காணப்பெறவில்லை. கல்வெட்டுச் செய்திகளை ஒப்புநோக்கும் பொழுது கோயிலின் அமைப்பில் மாற்றங்கள் நிறைந்துள்ளது தெரிகின்றது.

## கோயிலின் காலம்

இக் கோயிலின் வெளிச் சுவர்களில் 21 கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இவற்றில் காலத்தால் பழைமையான கல்வெட்டு "மதிரை கொண்ட கோப்பரகேசரி"யின் கல்வெட்டு ஆகும். மதிரையை ஆட்சி புரிந்த பாண்டியர்களை போரில் வெற்றி பெற்று அதன் விளைவாக மதிரை கொண்டதனால் மதிரை கொண்ட கோப்பரகேசரி என்ற பட்டத்தை அடைந்தவன் முதலாம் பராந்தகன் ஆவான். இம் முதலாம் பராந்தக சோழனின் காலத்தினைச்சார்ந்த நான்குகல்வெட்டுகள் காணப்படுகின்றன. இதனைக் கொண்டு நோக்கும்போது இக்கோயில்

இம் மன்னன் காலத்தது என்று கூறலாம். இதனைத் தெளிவாக்கும் வகையில் முதற்பராந்தக சோழனின் இருபத்தெட்டாவது ஆட்சியாண்டில் இக்கோயில் கற்றளியாக்கப்பட்டதை தெரிவிக்கும் கல்வெட்டு ஒன்று இக்கோயிலில் காணப்படுகிறது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மதிரை கொண்ட கோப்பரகேசரி வர்மற்கு யாண்டு இருபத் தெட்
2. டாவது வடகரை நல்வயலூர்க் கூற்றத்து தேவதானம் உறுமூர்ச் சிறுத்திருக்கோயில்
3. பெருமானடிகளுக்கு ஸ்ரீ விமானக் கற்றளி எடுப்பித்து அஷ்டபரிவார கோயில்
4. செய்வித்து உடையார் சோழப் பெருமானடிகள் ஸ்ரீ பராந் தக வேளாரக்கு இளங்கோவ
5. ன் குணவன் அபராஜிதன் விண்ணப்பம் செய்ய"

என்று முதலாம் பராந்தக சோழனின் 28ஆம் ஆட்சி ஆண்டில் உறுமூர் சிறுதிருக்கோயில் பெருமானடிகளுக்கு இளங்கோவன் குணவன் அபராஜிதன் என்பான் ஸ்ரீவிமானம் கற்றளியாக எடுப்பித்ததையும், எட்டு பரிவாரக் கோயில்கள் அமைத்ததையும் குறிப்பிடுகின்றது.3 இதை நோக்கும்போது பராந்தகன் காலத்திலேயே இக்கோயில் கற்றளியாக விமானம் அமைத்து அர்த்த மண்டபத்தையும் கட்டி, எட்டு பரிவார தேவதைகளுக்கும் கருவறையை சுற்றி சிறிய கோயில் எழுப்பப்பட்டது இக்கல்வெட்டு மூலம் தெரிகின்றது. எனவே இக்கோயிலின் காலம் முதலாம் பராந்தகன் காலம் என்பதில் ஐயமில்லை. இங்குள்ள முதலாம் பராந்தகனின் கல்வெட்டுகளைக் கொண்டு பராந்தகனின் 5ஆம் ஆண்டில் நிறைவு பெற்று இருத்தல் கூடும் எனலாம்.4

## தேவகோட்ட சிற்பங்கள்

இத்திருக்கோயிலில் கருவறையை சுற்றியுள்ள மூன்று தேவக் கோட்டங்களில் தஞ்சிணமூர்த்தி, சிவன், பிரம்மன் ஆகியோரது சிற்பங்கள் காணப்படுகின்றன. தெற்கு தேவக் கோட்டத்தில் அமைந்துள்ள சிற்பம் தட்சினாமூர்த்தி உருவமாகும். இடதுகாலை மடக்கி வலது காலின் மேல் அமர்ந்த நிலையிலுள்ளது விரிந்த சடை முடிகள் பின் பகுதியில் தொங்கியவாறு காணப்படுகின்றன. பட்டையான முப்புரிநூல் வலது கையின் மேல் செல்கின்றது, இது இதன் பழமையை உணர்த்துகின்றது. இதன் பின் கரங்களில், அக்கமாலையும், நெருப்பும், முன் கரங்களில் சின் முத்திரையையும் சுவடியும் காணப்படுகின்றன. அமர்ந்துள்ள இதன் இருக்கையின் கீழே பாம்பு, சிங்கம், மான் ஆகிய உருவங்கள் காணப்படுகின்றன. இச் சிற்பம் முற்காலச் சோழர் சிற்பங்களுக்குரிய அழகுடனும், பொலிவுடனும் விளங்குகின்றது.

## மேற்கு தேவ கோட்டத்திலுள்ள உருவம்

இதை இவ்வூர் மக்கள் அருணாசலீஸ்வரர் என்று அழைக்கின்றனர். தாமரை பீடத்தில் யோகநிலையில் அமர்ந்துள்ளவாறு காணப்படுகின்றது. சடா மகுடம் புனைந்து அரைவட்ட குடை கீழ் அமர்ந்துள்ளது. முன்கைகள் இரண்டையும் யோக நிலையில் கால்களின் மேல் வைத்தவாறு உள்ளது.

## வடக்கு தேவகோட்டத்திலுள்ள உருவம்

இங்குள்ள பிரம்மனின் மூன்று முகங்கள் தெளிவாக்த்தெரிகின்றன. சடைமுடி தரித்த நிலையில் தாமரை

பீடத்தில் அமர்ந்து யோக நிலையில் பின்கையில் அக்கமாலையும் கமண்டலமும் பிடித்த நிலையில் இவ்வுருவம் காணப்படுகின்றது

## பரிவார தேவதைகள்

இக்கோயிலில் காணப்படும் கல்வெட்டுகளில் குறிப்பிட்டுள்ள செய்திகளை ஆய்வு செய்யும் போது உறுமூரில் எழுந்தருளியுள்ள பெருமானடிகள் சிறுதிருக்கோயிலைக் கற்றளியாக மாற்றி அமைத்தும், பின்னர் அஷ்ட பரிவார தேவதைகளுக்கும் சிறிய கோயில் எடுப்பித்துச் சிறப்பு செய்யப்பட்டிருக்க வேண்டும்.5 ஆனால் இக்கோயிலின் கர்பகிரகத்தின் மேலே எழும்பியுள்ள விமானத்தைத்தவிர அஷ்டபரிவார தேவதைகளுக்கு கருவறையை சுற்றி தற்போது ஏந்தவித சிற்றாலயமும் காணப்படவில்லை. இக்கோயிலை சுற்றி ஆய்வு செய்த போது வேறு ஏதும் தடயங்கள் கிடைக்கவில்லை. கால வெள்ளத்தில் இவை அழிந்துபட்டிருக்கலாம்.

## கல்வெட்டு கூறும் செய்திகள்

இங்கு காணப்படும் கல்வெட்டுகள் இக்கோயில் எடுப்பித்த செய்தியையும், இக்கோயில் வழிபாடு சிறப்புற நடைபெற மக்கள் தானங்களையும், அந்த தானங்களைப் பாதுகாக்கும் சபைகளைப் பற்றிய செய்திகளையும் தெரிவிக்கின்றன.

## அரசர்கள்

முதலாம் பராந்தகன், சுந்தரசோழன், இராஜராஜன், இராஜேந்திரன், போன்ற சோழ மன்னர்கள் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன. நாட்டுப் பிரிவுகள்: தொண்டை மண்டலம்,

வடகரை விருதுராஜ பயங்கர வளநாடு, வடகரை ராஜேந்திர சிம்மவளநாடு, ராஜாதிராஜ வளநாடு, போன்ற பெரும் நாட்டுப் பிரிவுகள் குறிப்பிடப்படுகின்றன. 'மேற்கா நாடு' பாண்டி நாடு, கோனாடு, போன்ற பிற நாட்டுப் பிரிவுகளும் இங்குள்ள கல்வெட்டுகளில் வருகின்றன. நல்வயலூர் கூற்றம், அறும்பூர் கூற்றம், போன்ற பிரிவுகளும் விக்கிரமசோழ சதுர்வேதி மங்கலம், வானவன் மாதேவி சதுர்வேதி மங்கலம்,6 ஆனைவரி, உறுமூர், கொள்ளிடம், பொய்கை, அரசூர், ஒழுகரை போன்ற ஊரின் பெயர்களும் இடம் பெறுகின்றன.

## வரிகள்

அச்சோறு,8 குடிமை, பாடிக்காவல்,9 சில்வரி,10 போன்ற வரிகள் பழக்கத்தில் இருந்து வந்துள்ளதை இங்குள்ள கல்வெட்டுகளின் மூலம் அறியமுடிகின்றது.

## பெண்டிர் அளித்த கொடை

விசநல் துருவங்கி என்பவள் இக்கோயிலில் விளக்கு எரிக்க வேண்டி தினமும் ஓர் உழக்கு எண்ணெய் ஊற்றுவதற்காக 8 கழஞ்சு பொன்னும் (ஆபரணம்) 20 கலம் நெல்லும் இச்சிறுத் திருக்கோயிலுக்கு அளித்துள்ளாள். இதனைச்சீரான முறையில் தொடர்ந்து செய்தல்பொருட்டுகவிசியன் நானூற்றுவன் நாக்ன் என்ற கோவில் பணியாளரிடம் பொறுப்பை ஒப்படைத்து விளக்கை எரிக்கச் செய்துள்ளாள். இவன் தினமும் ஓர் உழக்கு எண்ணெய் மேற்படி பொருளில் இருந்து வரும் பொருளை கொண்டு விளக்கிற்கு அளிக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்யப் பெற்றது.11

அருப்பான் பெண்டாட்டி பிச்சையன் ஆருவங்கி என்பவள் ஓர் விளக்கு எரிப்பதற்காக 90 ஆடுகள் தானமாக அளித்து

விளக்கெரிக்க வைத்துள்ளார் 12. இது போன்று பெண்கள் கோ விலுக்குத் தானம் அளித்து சிறப்பு செய்தமை சமுதாய நிலை யை விளக்குவதாகும்.

*ஊறுமூர் சபை*

கொடை அளித்தல் தனித்தும், கோயில் பணியாளருக்கு சார்த்தி விடுதலும், இங்கு நடைமுறையில் இருந்து வந்திருக் கின்றது. அதுபோல இவ்வூரில் சபை ஒன்று அவ்வூரின் பெயரிலேயே உறுமூர் சபை13 என்று நிறுவப்பட்டு செயல்பட் டுள்ளது. இச் சபையின் வசம் சில கொடைகளை ஒப்படைத்து அந்த கொடையை எந்த காரியத்திற்காக அளித்தனரோ அதை சபையோர் தன் சொந்தப் பொறுப்பேற்று கவனித்து நிறை வேற்றியும் வந்துள்ளனர். அது போன்று சபையிடம் கொடுக் கப்படும் நிலங்களுக்கு வரிச் சலுகைகளும் கொடுக்கப்பட்டு உள்ளது.

ஆதித்தன் கன்னன் கன்னன் தேவர் என்பவர் இக் கோயிலில் விளக்கெரிக்க கொடுத்த ஆடு 90 ஆகும் இவை சபையோரால் பெறப்பட்டு தினமும் அதிலிருந்து பெறப்படும பொருளில் இருந்து ஓர் உழக்கு எண்ணெய் இட்டு விளக் கெரித்துள்ளனர். இது உறுமூர் சபையின் மேற்பார்வையில் நடைபெற்றுள்ளது.14

மேலூர் உறுமூர் சபையின் கீழ் ஒப்படைக்கப்பட்ட கொ டையை பற்றி கூறும் போது அரிதன் கன்னன் கன்னன் என்பவர் ஏழுமா நிலத்தை பெருமான்டிகளுக்கு திருவமுது படைப்பதற்காக அளிக்கின்றார் 15. இதை சபை தன் வசம் பெற்று அதை பிறருக்கு குத்தகை விட்டு அவன் அதை உழுது பயிர் செய்து தினமும் நாழி அரிசியால் திருவமுது இறை

வனுக்கு படைத்தல் வேண்டும். இது போன்று ஓர் ஒழுங்கு முறையை அமைத்து செயல்படச் செய்து சபை தன் கட்டுப் பாட்டிற்கு மக்களை அழைத்துச் சென்றுள்ளது. வில்லங் காட் டூரில் வசித்துவரும் குறும்பன் சிறுகன் என்பவன் விளக்குத் தாங்கி ஒன்றும் அதன் வைத்து விளக்கு எரிப்பதற்கு 10ஆடு களையும் அளித்துள்ளான். இது உறுமூர் சபையுடன் இணைக் கப்பட்ட கொடையாகும்.16

கோயில் எடுப்பித்த செய்தியை கூறும் கல்வெட்டு சிறப்பு வாய்ந்த ஒன்று ஆகும். இக்கோயிலில் இசைக் கருவிகள் வாசிக்கப்பட்டு வந்துள்ளது. அதை பாதுகாப்பதற்கும் அதை உபயோகிப்பவர்களுக்கும் வருடம் ஓர் தொகையை அளித்து பெருமைபடுத்தி வந்துள்ளது. இசைக் கருவிகள் தொடர்பாக 5 கழஞ்சு பொன் அரையன் விச்சாதிரையன் என்பவர் அளித்த செய்தி கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றது.17 இவை அனைத் தையும் நோக்கும் போது உறுமூர்பராந்தகன் காலத்தே மிகவும் சிறப்புபெற்ற ஊராக விளங்கிருக்க வேண்டும் என்று கூறலாம்.

1. SII Vol. XIX No. 135
2. ARE 378/1913
3. ARE 384/1913
4. S. R. Balasubramaniam Three early Dated chola sculptures of Erumpur" Lalith Kalá Acadamy No. 13
5. ARE 384/1913
6. ARE No. 378/1913
7. ARE No. 389/1913
8. ARE No. 389/1913
9. ARE No. 397/1913
10. ARE No. 398/1913
11. SII Vol. XIX No. 394
12. ARE No. 394/1913
13. SII Vol XIX No. 135
14. SII Vol XIX No. 135
15. SII Vol XIX No. 49
16. SII Vol XIII No. 206
17. ARE No. 385/1913

# அலரி தின்று சாதல்

அலரி விதை விஷமுடையது. இதை கோயிலில் பூத்தொடுக்கும் பணியாளர் ஒருவர் உண்டு இறந்து விட்டார். அவர் அப்படி தற்கொலை செய்து கொண்ட தற்கு ஏதோ தவறான காரணம் இருந்திருக்க வேண்டு மெனச் சந்தேகம் தோன்றியது. மன்னன் கண்ட கோபாலனது ஆணை பிறப்பிக்கப்பட்டு விசாரணை நடந்தது. குற்றவாளிகள் கண்டுபிடிக்கப்பட்டு அவர் களுக்குத் தண்டனை வழங்கப்பட்டுள்ளது. இதை ஆந் திரமாநிலம், குட்டப்பா மாவட்டம் குண்டலூர் தமிழ்க் கல்வெட்டு தெரிவிக்கின்றது. இது கி. பி. 1236ல் நடந்த நிகழ்ச்சியாகும். – SII Vol XXIII 620

# தமிழகத்தில் பெருங்கற்கால ஓவியங்கள்

கே. எஸ். சம்பத் எம் ஏ.,
சென்னை

எழுத்தறிவில்லாத முந்தைய காலத்தில் மனிதன் தன்னுடைய எண்ணங்களையும், உணர்வுகளையும் மற்றவர்களுக்கு உணர்த்த சைகைகள் மூலமாக தெரியப்படுத்தினான். பின்னர் ஓவியங்கள் மூலமாக தங்களுடைய எண்ணங்களை மற்றவர்களுடன் பகிர்ந்து கொண்டான்.

குறிப்பாக தமிழகத்தில் இவ்வோவியங்கள் பெரும்பாலும் பெருங்கற்காலத்தின் தொடர்புடையவைகளாய் உள்ளன. முதன் முதலில் தமிழகத்தில் இவ்வகையான ஓவியம் மல்லப்பாடியில் சென்னை பல்கலைக்கழகத் தொல்லியல் துறையினரால் கண்டறியப்பட்டது. பின்னர் தென்னாற்காடு மாவட்டம் கீழ்வாலையில் சில ஆசிரியர்களால் இத்தகைய ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. தொடர்ந்து தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை கோவை, மதுரை, நீலகிரி, தருமபுரி போன்ற மாவட்டங்களில் இவ்வகை ஓவியங்களை கண்டுபிடித்தது. இவ்வோவியங்களைப் பற்றி அவ்வப்போது ஆய்வாளர்கள் ஆய்வுரைகள் வழங்கியுள்ளனர்.

## மல்லப்பாடி ஓவியங்கள்

மல்லப்பாடி ஓவியத்தில் வீரன் ஒருவன் குதிரையில் அமர்ந்து ஈட்டி எரிவது போன்ற காட்சி வரையப்பட்டுள்ளது.

## கீழ் வாலை

தென்னார்க்காடு மாவட்டத்தில் அமைந்துள்ள இவ்வூரில் பாறைகளில் சிகப்பு வண்ணத்தில் மனிதஉருவங்களும், விலங்கினங்களின் உருவங்களும் வரையப்பட்டுள்ளன. மேலும் சில குறியீடுகளும் காணப்படுகின்றது.

## செத்தவரை

தென்னார்க்காடு மாவட்டத்தில் அமைந்துள்ள அய்யனார் மலையில் உள்ள பாறைகளில் சிகப்பு வண்ணத்தில் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளது. இங்கு மனிதர்கள் விலங்குகளை வேட்டையாடுதல், மற்றும் மான் ஆகியன சித்தரித்துக் காட்டப் பட்டுள்ளது.

## புறாக்கல்

தென்னார்க்காடு மாவட்டத்தில் உதயத்தூருக்கு அருகில் அமைந்துள்ள உயரமான பாறையில் சிகப்பு வண்ணத்தில் அழகிய புலி, மான் போன்ற உருவங்களும் மற்றும் குறியீடுகளும் காணப்படுகின்றது. .

## பாடியேந்தல்

தென்னார்க்காடு மாவட்டத்தில் திருக்கோயிலுக்கு அருகில் உள்ள பாடியேந்தலில் ஒரு குன்றின் குகைச் சுவரிலும், விதானத்திலும் வெண்மை மற்றும் சிகப்பு வண்ணத்தில் சில உருவங்கள் காணப்படுகின்றது.

## ஆலம்பாடி

தென்னாக்காடு மாவட்டத்தில் ஆலம்பாடி என்னும் பகுதியில் க்றபாறையின்மீது சிகப்புவண்ணத்தில் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. இவ்வோவியங்களில் மரன் மற்றும் செடி கொடிகளுக்கு இடையே மறைந்துள்ள மான், காளைமாடு, பன்றி போன்றவிலங்குகளின் உருவங்கள்வரையப்பட்டுள்ளன, இங்கு காணப்படும் ஓவியத்தின் மீது பின்னர் வேறு ஓவியம் மீண்டும் (Over laping) வரையப்பட்டுள்ளது.

## கொல்லூர்

தென்னார்காடு மாவட்டம் திருக்கோயிலுக்கு அருகில் கொல்லூர் என்னும் ஊரில் சிகப்பு வண்ணத்தாலான ஓவியங்கள் காணப்படுகிறது. இவ்வோவியங்களால் பெரும்பாலும் வரைகோடுகள் போன்று பல அமைப்புக்களால் காணப்படுகிறது. மேலும் இப்பகுதிக்கு அருகில் பெருங்கற்காலச் சின்னங்கள் காணப்படுகின்றன.

## வேட்டைக்காரன் மலை

கோயம்புத்தூர் மாவட்டம் வெள்ளெஞ்சன் பாளையம் என்னும் ஊருக்கு அருகில் அமைந்துள்ள வேட்டைக்காரன் மலையில் வெள்ளை வண்ணத்திலும் மங்கலான சிகப்பு வண்ணத்திலும் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன, இங்குள்ள ஓவியங்களில் குதிரையின்மீது அமர்ந்து ஈட்டி எரிதல், நடனமாடுதல் மற்றும் தாய் தெய்வ வழிபாடு போன்ற உருவங்கள் இங்கு காணப்படுகின்றன.

## மசினகுடி சீகூர்

நீலகிரி மாவட்டத்தில் மசினகுடி என்னும் ஊருக்கு அருகில் அமைந்துள்ள சீகூர் [காட்டு மலைப் பகுதியில் உள்ள கற்பாறையில் வெண்மை நிறத்தில் ஒவியங்கள் தீட்டப்பட்டுள்ளன இவ்வோவியங்களில் மயில் மீது நிற்கும் உருவங்கள், துதிக்கை தூக்கிய யானை மீதுள்ள மனிதன் போன்றவை காணப் படுகின்றது.

## கொணவக்கரை

நீலகிரி மாவட்டம் கோத்தகிரிக்கு அருகில் உள்ள கொணவக்கரை என்னும் பகுதியில் ஓவியங்கள் காணப்படுகின்றன. இவ்வோவியங்கள் வெண்ணிறத்தில் தீட்டப்பட்டுள்ளன. இதில் பசு, கன்று, பேய் போன்ற உருவங்களும் சில குறியீடுகளும் குறிப்பிடத்தக்கதாகும்.

## சிறுமலை

மதுரை மாவட்டத்தில் உள்ள இம்மலையின் மீது உள்ள பாறையில் வெண்மை மற்றும் சிகப்பு நிறத்தில் தீட்டப்பட்டுள்ள ஓவியங்கள் காணக்கிடைக்கின்றது. இவ்வோவியங்களில் மனித உருவங்களும், விலங்கினங்களும் காணப்படுகின்றன.

## சென்னராயன் பள்ளி

வட ஆற்காடு மாவட்டத்தில் குடியாத்தம் என்னும் ஊருக்கு அருகில் அமைந்துள்ள சென்னராயன் பள்ளி என்ற பகுதியில் குதிரை வீரன் போராடுதல், வேட்டையாடுதல் மற்றும் சில விலங்கு உருவங்களும் தீட்டப்பட்டுள்ளன.

### மகாராசக்கடை

தருமபுரி மாவட்டத்தில் கிருஷ்ணகிரிக்கு அருகில் உள்ள சில பெருங்கற்கால நினைவுச் சின்னங்களில் வெண்ணிறத்தில் பல்வேறு ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன.

### மல்லச்சமுத்திரம்

தரும்புரி மாவட்டத்தில் கிருஷ்ணகிரிக்கு அருகில் அமைந்துள்ள பெருங்கற்கால ஈமச்சின்னங்களில் (கல்பதுக்கைகள்) வெண்மை நிறத்தில் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. இவ்வோவியங்களில் வீரர்கள் போரிடுவதைப் போன்றும், மற்றும் விலங்குகளின் உருவங்களும் காணப்படுகின்றது.

தமிழகத்தில் உள்ள இவ்வோவியங்கள் பெரும்பாலும்சிகப்பு மற்றும் வெண்மை நிறத்திலேயே காணப்படுகின்றன. மற்றும் இவ்வோவியங்கள் காணப்பெறும் பகுதிகளில் பெருங்கற்காலச் சின்னங்களான ஈமச் சின்னங்களும் கருப்பு சிகப்பு நிறமான ஓவியமும் கிடைத்துள்ளன.

இக்கால மக்கள் தலைவன் ஆணைக்கு கட்டுப்பட்ட கூட்டு வாழ்க்கை வாழ்ந்தவர்களாக இருந்தனர். விலங்குகளை வேட்டையாடுவது சிறப்பாக கருதப்பட்டது. போரிடுவதில் ஆர்வம் காட்டினர். ஆண் பெண் சேர்ந்து குழுவாக நடனமாடுதல், மீன் பிடித்தல் போன்றவற்றில் நாட்டம் கொண்டனர். பேய், பிசாக்களில் நம்பிக்கை கொண்டு அதற்காக பூசை, விழா எடுத்தல் போன்றவை நடத்தி இருக்கக்கூடும். தாய் தெய்வம், முருகக் கடவுள் வழிபாடு சிறப்பிடம் பெற்றிருக்க வேண்டும். ஒரு சில வண்ணங்களைக்கொண்டு அழகுற ஓவியம் வரையும் ஆற்றல் பெற்றிருந்தனர். பாறை ஓவியங்களில் காணப்படும் சில உருவங்கள் பானை ஓடுகளிலும் வரையப்பட்டுள்ளமை இங்கு குறிப்பிடத்தகுந்த ஒன்றாகும். எனவே இக்காலப் பண்பு அக்காலத்தில் அனைத்து மக்களிடமும் நிறைந்து இருந்தது என்பது தெரிகிறது. மேலும் தமிழ்நாட்டில் காணப்பெறும் பாறை ஓவியங்களில் பல வெளிநாட்டில் காணப்படும் பாறை ஓவியங்களைப் பெரிதும் ஒத்துள்ளன.

பாறை ஓவியங்களின் ஆடை, அணிகலன்கள் ஆயுத அமைப்பு போன்றவை மனிதனின் ஆரம்பகால வளர்ச்சியினை காட்டுவனவாக உள்ளன. தமிழகத்தில் கண்டறியப்பட்டுள்ள ஓவியங்கள் உள்ள பகுதிக்கு அண்மையிலே பெருங்கற்கால நினைவுச் சின்னங்கள், சில புதிய கற்காலக் கருவிகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவ்வோவியங்களில் தீட்டப்பட்டுள்ள உருவங்களில் உள்ள ஆயுதங்கள், இரும்பின் பயன்பாடு போன்றவை இவற்றின் காலத்தை கணிக்க ஓரளவு உதவி புரிகின்றன.1

மேலும் தருமபுரி மாவட்டம் மல்ல சமுத்திரத்தில் பெருங்கற்கால கல் திட்டைகளிலேயே இத்தகு ஓவியங்கள் வரையப்பட்டிருப்பது சிறப்பாகும். எனவே இவ்வோவியங்கள் கி. மு. 5 ஆம் நூற்றாண்டு முதல் கி. பி. 2ஆம் நூற்றாண்டு வரை நிலவியிருந்த பெருங்கற்காலத்தைச் சேர்ந்தது என்பதை தெளிவாகக் கூறலாம்.

பொன்.அரசு: "தமிழகத்தில் வரலாற்றுக்கு முற்பட்ட கால ஓவியங்கள்" (தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்ற 'தமிழ்நாடு மற்றும் கேரள மாநிலங்களின் தொல்லியல்' கருத்தரங்கில் படிக்கப்பட்ட கட்டுரை - 1984)

---

## மனைவியின் சீதனத்தை செலவு செய்யலாமா ?

கூடாது என்ற மரபு சோழர் காலத்தில் இருந்திருக்கிறது அகளங்கரையன் என்பவர் தன் மனைவிக்குச்சீதனமாக (ஸ்திரிதனம்) அவளது தந்தையால் வழங்கப்பட்டதைச் செலவு செய்து விட்டார். இது அச்சமுதாயத்தில் தவறென உணர்த்தப்பட்டது. எனவே அதற்கு ஈடாகப் பின்னர் தனது சொந்த நிலங்கள் சிலவற்றைத் திருப்பித் தந்துள்ளார். இதை மயிலாடுதுறை வட்டம் மங்கநல்லூரில் உள்ள விக்கிரம சோழன் காலக் கல்வெட்டு தெரிவிக்கிறது,

ARE 39/1924-29

# கல்வெட்டுத் துளிகள்

வெ. இராமமூர்த்தி எம்.ஏ.
இராமநாதபுரம்

## நாய்க்கும் கூட ஒரு செப்பேடு

களவாகளைக கொன்ற நாய்க்கு ஒரு கல்வெட்டு. கீழைச் சேரியிலே கோழிக்கு ஒரு கல்வெட்டு — இப்படி விலங்கினங்களுக்கும் பிராணிகளுக்கும் வரலாற்றைப் படைத்து மகிழ்ந்திருக்கிறார்கள் தமிழர்கள்.

அந்த வகையில் ஒரு நாய்க்காக ஜாதகம் என்று கூறப்படும் எதிர்காலக் கணக்கியலைப் போட்டு அதற்கொரு செப்பேட்டையும் இந்தத் தமிழகம் வழங்கியிருக்கிறது.

திருநெல்வேலி மாவட்டம் மன்னார் கோவிலில் ஏறத்தாழ 80 ஆண்டுகளுக்கு முன்பாக வாழ்ந்தவர் இராமானுஜ ஆச்சாரியார். இவரிடம் அம்பாசமுத்திரம் அருகேயுள்ள ஊர்க்காடு என்ற ஊரைச் சேர்ந்த சமீன்தார் அவருடைய எதிர்காலக் கணக்கியலைஏளனப்படுத்துகின்ற வகையில்வருங்காலம்கூறும்வல்லவரே

"நம்முடைய சமீனில்வளரும் நாய் எத்தனை குட்டி போடும் என்று உம்மால் சொல்ல முடியுமா? அவ்வாறு நீங்கள் சொல்வவைப் போல நாய் குட்டி போட்டால் ஆண்டொன்றுக்கு 12 கோட்டை நெல் தருகின்றேன், என்று கூறினார்

இந்த அறைகூவலை ஏற்றுக் கொண்ட கணியன் இராமானுஜ ஆச்சாரியார், " ஜமீன்தார் அவர்களே உங்களுடைய நாய்

ஆறு குட்டி போடும்.போட்ட குட்டியில் ஒன்றை அது தின்று விடும் .எஞ்சியிருக்கும் 5 குட்டிகளில் 2பெண் 3ஆண் ஆண் குட்டிகள் கறுப்பு வெள்ளை நிறத்திலும் பெண் குட்டிகள் மாநிறத்திலும் இருக்கும்" என்று கூறினார்'

அவர் சொன்னதைப் போலவே நடந்தது .ஆனால் ஜமீன்தாரே தான் கொடுத்த வாக்குறுதிப்படி ஆண்டிற்கு 12 கோட்டை நெல் தரமுடியாது என மறுத்து விட்டார் .

ஆனால், இந்நிகழ்ச்சியை வாய்மொழியாக மட்டுமல்லாமல் ஜமீன்தார் செப்பேட்டிலும் பொறித்து ஆச்சாரியாரிடம் கொடுத்திருந்தார். இந்த வழக்கு திருநெல்வேலி ஆங்கிலக்கலெகடரிடம்சென்றது .வழக்கை தீரஆய்ந்த ஆங்கிலேயக் கலெக்டர்கணியன்இராமானுஜஆச்சாரியாருக்குசெப்பேட்டுவாசகங்களின்படி ஆண்டிற்கு 12 கோட்டை நெல் கொடுக்க வேண்டுமென்று ஆணையிட்டு தீர்ப்பெழுதினர்.

இந்தத் தீர்ப்பின்படி ஆண்டுக்கு 12 கோட்டை நெல் இராமானுஜ ஆச்சாரியாரின் பரம்பரையைச் சேர்ந்த ஸ்ரீ மணவாள மாமுனிவரின் பாலூராரள் கோழடத்தைச் சேர்ந்த திருவேணி சம்மந்தத்தார்கள் இன்றளவும் பெற்று வருகின்றார்கள்.

## வரதட்சணை வாங்குவதும் கொடுப்பதும் குற்றம்

விஜயநகரர் காலத்தில் பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டாரிடம் அதிகம் வரதட்சணைவாங்கினர். கி. பி. 1379 இல் நம்பிரவி செட்டியார் தன் மகள் வயிற்றுப் பேரனை மணம் செய்விப்பதற்காக பெண் வீட்டாருக்குப் பங்களிப்பு என்றதனது கிராமத்தையே கொடுத்திருக்கிறார். இது ஒரு உதாரணம் தான் இது போல் மணமகனுக்குக் கொடுக்கவேண்டிய வரதட்சிணைக் கொடுமை தாங்க முடியாத பிராமணர்கள் கி. பி. 1426ல் "பொன் வாங்கிப் பெண் கொடுத்தால், பொன் கொடுத்து மணம் முடித்தால் இராச தண்டத்துக்கு உட்படுவதுடன், பிராமணத்திற்கும் புறம்பாக்கப்படுவர்" என்ற சபைத் தீர்மானம் ஒன்று நிறைவேற்றியிருக்கிறார்கள். விரிஞ்சிபுரம் கல்வெட்டு இதை விளக்குகிறது. *

# தொல்லியலும் இரசாயனமும்

எம். எஸ். அசோகத்தீன் எம் எஸ். சி.
சென்னை.

தொல் பொருள் ஆய்வு என்பது ஒரு முன்னேற்றம் அடைந்த அறிவியல். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் புதைந்துபோன பொருட்களை வெளிக்கொணர்ந்து அவற்றை அறிவியல் முறையில் தூய்மை செய்து பாதுகாக்கும் முறையே தொல்லியல் இரசாயனமாகும்.

**கீழ்க்கண்ட அறிவியல் முறைகளைக்கொண்டு தொல் பொருட்களின் காலம் உறுதிப்பாடு பகுப்பு வேறுபாடு கள் முதலியவற்றைக், கணிக்கமுடியும்.**

1. ஸ்கேனிங் எலக்ட்ரான் மைக்ராஸ் கோப்
2. எக்ஸ்-ரே- பரிசோதனை முறை.
3. கரி-14 காலக்கணக்கீட்டு முறை.
4. அனல் ஒளி வீச்சு முறை.
5. அணுச் சிதைவு பாதை முறை.
6. புளோரின் - 19 முறை.
7. காந்த ஈர்ப்பு முறை
8. மின்தடை முறை.

9 அல்ட்ரா வைலட் ஸ்பெக்டோ ஸ்கோபி.

10. இன்பிரா – ரெட் ஸ்பெக்ட்ரா ஸ்கோபி.

## பழம் பொருட்கள் ஏன் சிதைவடைகின்றன ?

தட்பவெப்ப நிலையில் ஏற்படும் மாற்றங்களால் பழம் பொருட்கள் காலத்தால் சிதைந்து அழியக்கூடியவை. அவற்றிற்கு முறையாக பாதுகாப்பு அளிக்காவிட்டால் விரைவில் சிதைந்துவிட வாய்ப்புண்டு இந்த அழிவிற்குச் சுற்றுப்புற சூழ்நிலைகளே முக்கிய காரணம் வகிக்கின்றன. காற்று, ஈரம் முதலியனவும் தொல்பொருட்கள் அழிவிற்குத் தூண்டுகோளாக அமைகின்றன. பல வேறுபட்ட தட்பவெட்ப நிலைகளின் காரணமாகவும் தொல்பொருட்கள் சிதைவடைகின்றன.

சில கழிவுப் பொருட்களான தூசி, புகை, கரிமம் முதலியனவும் தொல் பொருட்கள் சிதைவடையக் காரணமாக அமைகின்றன.

தொல்பொருட்கள் கடற்கரை ஓரங்களில் இருக்குமாயின் கடற்காற்றில் உள்ள உப்புக்களும், மேற்படி பொருட்களை விரைவில் சிதைத்து விடுகின்றன.

## தொழிற்சாலை கழிவுப் பொருட்கள்

துணி, தாள். தோல் முதலியவற்றினால் எழுதப்பட்ட ஆவணங்கள் தொழிற்சாலைகள் உள்ள பகுதிகளில் இருக்குமாயின் தொழிற்சாலை கழிவுப் பொருட்களான

சல்பர்டையாக்சைடு காற்றில் கலந்து, பின்னர் சல்பியூரிக் திரவமாக மாறி மேற்படி ஆவணங்களை அரித்து விடுகின்றன.

## பூமியிலிருந்து தொல் பொருட்களை வெளிக் கொணரும் போது ஏற்படும் மாற்றம்

பூமிக்கடியில் இருக்கும் ஒருபுதைப்பொருள் புதையுண்ட பகுதியில் இருக்கும் தட்பவெப்ப நிலையை ஏற்றுக்கொண்டு பலநூறு ஆண்டுகள் கெடாமல் இருக்கிறது. அதை தோண்டி வெளியே கொண்டு வரும்போது வெளியே உள்ள தட்ப வெப்ப நிலையில் ஏற்படும் திடீர் மாற்றத்தால் மேற்படி பொருட்கள் விரைவில் சிதைவடைகின்றன.

அருங்காட்சியகங்ககளின் தட்ப வெப்ப நிலைகளை முறைப் படுத்துவதனால் அருங்காட்சியகங்களில் உள்ள தொல் பொருட்களின் தன்மையை கெடாதவாறு பாதுகாக்க முடிகிறது.

## பழம் பொருட்களைப் பாதுகாத்தலும் தூய்மை செய்தலும்

பழம்பொருட்களை அறிவியல் முறையில் தூய்மை செய்ய பல முறைகளை நடை முறையில் கையாண்டு வருகிறோம். அவற்றுள் இரும்பு, கற்சிற்பங்கள் முதலிய வற்றைத் தூய்மை செய்யும் முறைகளைப் பற்றி மட்டும் இங்கே காணலாம்.

**இரும்பு:**

இரும்பாலான ஆயுதங்கள் மற்றும் பொருட்களின் தன்மைக்கேற்ப சில முறைகளை மாற்றிக் கையாள வேண்டும்.

துருவேறிய இரும்பு பொருட்களை 10 விழுக்காடு அக்சாலிக் திரவத்தைக் கொண்டு துருவை அகற்றலாம்.

இரும்பாலான பழம் பொருளில் துரு மிகக்குறைவாக இருக்குமேயானால் கீழ்க்கண்ட முறையை மேற்கொள்ளலாம்.

இரும்பு பொருட்களை மெல்லிய அலுமினியத்தகட்டால் சுற்றி 5 விழுக்காடு சோடியம் ஹைட்ராக்சைட் கரைசலில் மூழ்க விட வேண்டும். அவ்வாறு செய்வதால் அலுமினியம், சோடியம் ஹைட்ராக்சைடு கரைசலில் கரைந்து நேசண்ட் ஹைடரஜன் உற்பத்தியாகிறது. இந்த ஹைடரஜன் மேற்படி பொருட்களில் உள்ள துருவை இரும்பாக மாற்றி விடுகிறது. இதனால் அப்பொருளில் உள்ள துரு முழுவதும் அழிந்து விடுகிறது.

இரும்பு பொருட்களில் அளவுக்கு அதிகமாக துருப் பற்றியிருந்தால் கீழ்க்கண்ட முறையை மேற்கொள்ளலாம்.

இரும்புத்தொட்டி ஒன்றில் 5 விழுக்காடு சோடியம் ஹைட்ராக்சைடு கரைசலை ஊற்றி, பின் துருவேறிய பழம்பொருளில் எதிர் மின்வாய் முனையையும், நேர்மின்

முனையை இரும்பு தொட்டியிலும் இணைத்து மின் சாரத்தைப் பாய்ச்ச வேண்டும். எதிர்மின் முனையின் இணைப் பினால் ஹைட்ரஜன் உற்பத்தியாகி இரும்புப் பொருட்களில் உள்ள துருக்கள் மென்மை அடைகின்றன பிறகு இரும்பு பொருட்களை வெளிக்கொணர்ந்து துருக்களை அகற்றலாம்,

**பாதுகாப்புப் பூச்சு**

இரசாயன முறையில் தூய்மை செய்யப்பட்ட பழம் பொருட்களை வாலை வடிநீரில் சுத்தம் செய்து நன்கு உலரவிடவேண்டும். பின்னர் மூன்று விழுக்காடு கொண்ட மெழுகை பென்சின் திரவத்தில் கரைத்துப் பாதுகாப்புப் பூச்சாகப் பூசலாம் அல்லது இரண்டு விழுக்காடு பாலி வினைல் அசிடேட்டை பெரலின + அசிட்டோன கரைசலில் கரைத்தும் பாதுகாப்புப் பூச்சாக பூசலாம்.

**கற்சிற்பங்கள்**

கற்சிற்பங்களில் கரிமக் கரைகள் படிந்து இருந்தால் அவைகளை கார்பன் டெட்டராக் குளோரைட் + பென்சின் + லிசப்பால் கரைசலைக் கொண்டு சுத்தம் செய்யலாம்,

பாசி, காலான் போன்ற கரைகள் வளர்ந்து இருந்தால் அவைகளை அமோனியா, பார்மால்டி ஹையடடு, தைமால் போன்ற கரைசலைக் கொண்டு நீக்கி விடலாம் பின்பு லிசப்பால் சோப்பு கரைசலால் சுத்தம் செய்யலாம்

**உப்புகள் அகற்றும் முறை**

கற்சிற்பங்களில் உப்புகள் புகுந்து கொள்வதால் அவை நீர் வரண்ட காலத்தில் படிகங்களாக மாறுகின்றன. ஈரப்பத மான காற்றுள்ள காலத்தில் அவை மீண்டும் கரையும். இவ்வாறு நிகழ்வதால் கற்சிற்பங்களின் வலு குறைகிறது. ஆகையால் உப்புகளைக் கரைத்து நீக்க, ஓடும் தண்ணீரிலிட்டு வைத்திருத்தல் வேண்டும். பின்னர் வாலைவடிநீரைக் கொண்டு கழுவி சுத்தம் செய்ய வேண்டும். வடிதாள் காகிதக் கூழை கற்சிற்பங்களில் பூசியும் அதில் உள்ள உப்பை அகற்றலாம். அவ்வாறு பூசுவதால் முதலில் காகிதக் கூழில் உள்ள நீர் கற்சிற்பங்களில் புகுந்து உப்புகளைக் கரைக்கும். பின்னர் நீர் நீராவியாக மாறும்போது உப்புகள் கரைந்து காகிதக் கூழில் பற்றிக் கொள்ளும். இவ்வாறு பலமுறை காகிதக் கூழை, பூசிப்பூசி உப்புகளை அகற்றிவிடலாம். பின்னர் சுத்தம் செய்யப்பட்ட இக்கற்சிற்பங்களைப் பெட்ரோல் + மெழுகுக் கரைசலைக் கொண்டு பாதுகாப்பு பூச்சுப் பூச வேண்டும்.

இவ்வாறு பழம் பொருட்களை அறிவியல் முறையில் சுத்தம் செய்து பாதுகாப்புப் பூச்சு பூசிவிடுவதால் மேலும் பொருட்கள் அழிந்து விடாமல் பாதுகாக்கலாம்

# தொல்பழங்கால ஓவியக்கலை

கே. முரளிதரன். D. F. A.
சென்னை.

ஆரம்ப நிலையில் வாழ்ந்த மனிதனின் உள்ளத்தில் பதிந்திருந்த கலையுணர்வு அக்கால ஓவியங்களாக உருப் பெற்றன. எழுத்தறிவு அற்ற அந்நிலையிலேயே தனது எண்ணத்தை வெளிப்படுத்த அவன் மேற்கொண்ட சிறந்த முயற்சியாக இது அமைந்தது இக்கலை இனம், நாடு என்ற பாகுபாடின்றி எல்லோராலும் புரிந்து கொள்ளக் கூடியதாகவும், மொழி, எழுத்துக்களுக்கு முன்னோடியாகவும் திகழ்ந்தது

விலங்குகளை வேட்டையாடுவதை முக்கியத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்த இவர்கள் அவற்றின் உருவங்களைத் தாங்கள் தங்கிய பகுதிகளில் வரைய ஆரம்பித்தனர். இதனால் தான் இவர்கள் வரைந்த ஓவியங்கள் பெரும்பாலும் விலங்கு களை வேட்டையாடுவதைக் குறிப்பதாகவே காணப்படு கின்றன.

தொல்பழங்கால ஓவியங்கள் வரையப்பட்டதன் நோக்கம் குறித்து பல்வேறு கருத்துக்கள் கூறப்படுகின்றன இயற்கை யிலேயே கலை ஆர்வம் உள்ள மனிதர்களின் கலை வெளிப் பாடுதான் இந்த ஓவியங்கள் என்று சிலர் கூறுகின்றனர். அவர்களது குடியிருப்புகளுக்கு முன்னால் திரிந்து கொண் டிருந்த விலங்குகளின் உருவங்களைப் படமாக வெளிப்படுத்த

வேண்டும் என்ற உள்நோக்கத்தில் வரையப்பட்டிருக்கின்றன, என்றும் சிலர் கூறுகிறார்கள். அழகான இயற்கைக் காட்சிகளை நேசித்த இவர்கள் தங்களுடைய கருவிகளையும், குகைகளையும் அழகு செய்ய வேண்டும் என்ற எண்ணம் காரணமாக ஓவியங்களை வரைந்திருக்கலாம் என்றும் சிலர் கருதுகின்றனர். இவை வேட்டையாடுவதில் ஏற்பட்ட வெற்றியின் நினைவுச்சின்னம் என்றும் கூறுகிறார்கள். தொடர்ந்து உணவுப் பொருட்கள் கிடைக்க வேண்டும் என்ற நம்பிக்கையை உறுதி செய்வதற்கான மந்திரவேலையாக இருக்கலாம் என்றும் கூறப்படுகிறது. தனது உள்ளத்தில் உதித்த கருத்தை வெளிப்படுத்துவதற்காக அந்நாளில் ஓவியக்கலை பெரிதும் பயன்பட்டிருக்கிறது

அண்மையில் தொல்பழங்கால ஓவியங்கள் பல கண்டு பிடிக்கப்பட்டு வருவது ஆய்வாளர்களின் கவனத்தைக் கவர்ந்து வருகின்றது தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் தொல் பழங்கால ஓவியங்கள் பல வடிவங்களில் வரையப்பட்டிருப்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இந்த ஓவியங்கள் கருஞ்சிவப்பு, இளஞ்சிவப்பு, மற்றும் வெண்ணிறங்களில் வரையப்பட்டிருக்கின்றன.

வேட்டையாடித் திரிந்த மனிதன் இந்த ஓவியங்களை வரைவதற்கு மூலப்பொருட்களை எங்கிருந்து பெற்றான்? பன்னெடுங்காலமாக அழியாத தன்மை அவற்றிற்கு எவ்விதம் உண்டானது என்பது குறித்து ஆய்ந்த ஒரு முடிவு இன்னும் வரையறுக்கப்படவில்லை. இவற்றின் தன்மை குறித்து இன்றளவும் அறிஞர்கள் வியப்புற்று வருகின்றனர்.

இந்த ஓவியங்களை ஊன்றி கவனித்தால் கற்கால மனிதனின் எண்ணத்திற்கு வடிகாலாகப் பயன்பட்ட இவற்றை

வரைவதற்குப் பயன்படுத்தக் கூடியதும், இயற்கையாகக் கிடைக்கக் கூடியதுமான பல வண்ணகாவிப் பொருட்களையும் சுண்ணாம்புப் பொருட்களையும் அதிக அளவில் பயன்படுத்தி இருப்பதனை அறியலாம்.

தொல்பழங்கால ஓவியங்கள் வரையப்பட்டுள்ள இடங்களில் இப்பொருட்கள் சிறுசிறு குவியலாக காணப்படுவது இக்கருத்தை உறுதி செய்கின்றது மிகவும் எளிதாகக் கிடைக்கக்கூடிய இவ் வண்ணங்களில் மூலப் பொருட்களை நன்றாக அரைத்து நுண்ணிய தூளாக்கி எலும்பாலான குழாய்களில் வைத்திருந்தனர். இந்த தூளோடு வேட்டையாடப்பட்ட விலங்குகளிடமிருந்து எடுக்கப்பட்ட ஒரு வகை கொழுப்புப் பொருட்களைக் கலந்து பூசுவதற்கு உரிய பல வண்ணங்களை உருவாக்கினர். இந்த வண்ணங்கள், இவை தீட்டப்பட்ட பாறைகளைப் போலவே நிலைத்து நிற்பவையாகத் திகழ்கின்றன. இதில் பயன்படுத்தப்பட்ட விலங்கின் கொழுப்பின் தன்மையே இந்த ஓவியங்கள் நீடித்து நிற்பதற்குக் காரணமாகத் திகழ்ந்திருக்க வேண்டும்.

காவிக் கட்டிகளைத் தவிர மாங்கனீசிய ஆக்ஸைடும் இவ்வோவியங்கள் வரையப் பயன்படுத்தப் பட்டிருக்கிறது. சுடப்பட்ட எலும்புகளில் இருந்து கிடைத்த கறுப்புக்கரியைக் கொண்டும் இத்தகைய ஓவியங்கள் வரையப்பட்டிருக்கின்றன. ஆனால் இந்த கறுப்புக் கரி 'கார்பன்' தன்மையுடையதால் இவை அதிக நாட்கள் நீடித்து இருப்பதில்லை. இவை தவிர தாவரங்களின் சாறுகளும் கூட இந்த ஓவியங்கள் வரைவதற்குப் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும்.

முதலில் வண்ணத்தூள்களை மிருகக் கொழுப்போடுக் கலந்து. ஒரு கலவையை சூடு படுத்தினார்கள். அதன்பிறகு இந்தக் கலவையின் சூடு குறைவதற்கு முன்னர் பாறையின் மேற்பரப்பில் கோடுகளாக வரையப்பட்ட உருவங்களின் மீது பூசினர். வண்ணத் தூள்களோடு கொழுப்பு கலந்து பயன் படுத்தும் அறிவு இங்கு குறிப்பிடத்தகுந்த ஒன்றாகும்.

வண்ணங்களைத் தீட்டுவதற்கு இவர்கள் பல்வேறு முறைகளைப் பயன்படுத்தி இருக்கக் கூடும் என்று தெரிகிறது. அக்காலத்தில் நிலவிய தட்பவெட்ப நிலை காரணமாக மிருகங்கள் அடர்ந்த ரோமங்களைக் கொண்டிருந்தன. எளி தாகக் கிடைக்கும் ரோமங்கள் இந்த ஓவியங்கள் வரைவதற்கு தூரிகைகளாகப் பயன்பட்டிருக்க வேண்டும். பறவைகளின் இறகுகள், மட்டைகள், தோல் போன்றவையும் தூரிகை களாகப் பயன்பட்டிருக்க வேண்டும். இவை தவிர கரங்களா லும் இந்த ஓவியங்கள் தீட்டப் பட்டிருக்கக் கூடும்.

இவ்வோவியங்களைப் பாறைகளில் தீட்டுவதற்கு முன் வெளிக்கோடுளை வரைந்து அதன் பிறகு விரும்பிய வண்ணத்தைக் குழைத்துப் பூசி இருக்க வேண்டும் என்று தெரிகிறது. மேலும் தமிழகத்தில் சில பகுதிகளில் காணப் படும் ஓவியங்களின் வெளிக்கோடுகள் சிவப்பு வண்ணத்தில் தீட்டப்பட்டுள்ளன அவற்றுள் சில உருவங்களின் உள் பகுதி முழுவதும் வெண்ணிறத்தால் நிரப்பப்பட்டுள்ளமை இங்கு குறிப்பிடத் தகுந்த ஒன்றாகும் இவை தவிர வெளிக்கோடு களும் சில உறுப்புகளைக் காட்டும் உட்கோடுகளும் சிவப்பு வண்ணத்தில் தீட்டப்பட்டிருக்கின்றன. இவை அப்பகுதியில் வாழ்ந்த மனிதன் அங்கு கிடைக்கும் மூலப் பொருட்களைக் கொண்டு ஓவியங்கள் வரைந்து தங்கள் கலைக் கருத்தை வெளிப்படுத்தியுள்ளனர் என்பதைக் காட்டுகின்றன.

குகைகளின் சுவர்களில் ஓர் ஓவியத்தின் மீது மற்றொரு ஓவியம் வரையப்பட்டிருப்பது ஆய்விற்கு உரிய ஒன்றாகும். இது தொடர்ந்து இந்த குகைகளில் மனிதர்கள் புழங்கியதைக் காட்டுகின்றது. மேலும் இந்த குகைப்பகுதி அக்காலத்தில் வேட்டைக்குத் தேவையான விலங்குகள் அதிக அளவில் கிடைக்கும் பகுதியாகவும் இருந்திருக்க வேண்டும் என்றும் தெரிய வருகிறது இந்த குகைகளில் வேட்டையாட விரும்பும் விலங்கின் உருவத்தை வரைந்து சென்றால் அந்த மிருகம் வேட்டையில் கிடைக்கும் என்ற நம்பிக்கையின் காரண மாகவும் இங்கு ஒன்றின் மீது ஒன்றாக ஓவியங்களை வரை யப்பட்டிருக்கலாம் இது தவிர இந்த குகைகள் ஓவியங்கள் வரையும் பயிற்சித் தளமாகவும் இருந்திருக்கலாம் என்று கருத முடிகிறது.

இந்த ஓவியங்கள் இருளான சில குகைகளிலும் காணப் படுகின்றன. இந்த இடத்தில் ஓவியங்கள் வரைவதற்கு விலங்கு மற்றும் மனிதனின் மண்டையோட்டில் விலங்குகளின் கொழுப்பை எண்ணெயாகக் கொண்டு எரிக்கப்பட்ட விளக்கு களின் வெளிச்சம் பயன்படுத்தப் பட்டிருக்கவேண்டும். மேலும் அந்த குகைகளில் உள்ள ஓவியங்களைக் கண்டு களிப்பதற்கும் இத்தகைய விளக்குகள் பயன்படுத்தப்பட்டன.

இந்த தொல் பழங்கால ஓவியங்களின் எளிமை, நீடித்து நிலைக்கும் தன்மை, காட்சிகளின் தொகுப்பு, கலைத்தன்மை போன்றவை இன்றைய உலகின் தலைசிறந்த ஓவியர் களையும் கவர்ந்திழுப்பதில் வல்லவையாய் விளங்குகின்றன.

# தமிழகத்தில் ரோமானியர் சில புதிய செய்திகள்

து. துளசிராமன், M. A.,
சென்னை.

யவனர்கள் என்பது ரோமானியர் மற்றும் கிரேக்கரைக் குறிக்கும். கிறித்துவ சகாப்தத்திற்கு முன்பிருந்தே ரோமானியர்கள் தமிழகத்துடன் வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் யவனர் கப்பல்கள் தென்னகத் துறைமுகங்களுக்கு அடிக்கடி வந்தன யவனர்கள் செங்கடலுக்கு இட்ட பெயர் எரித்திரியக் கடல் என்பது அவர்கள் அரபுக்கடல், இந்துமாக்கடல், வங்காளக்குடாக் கடல் ஆகியவற்றையும் எரித்திரியக்கடல் என்றே அழைத்தனர். பிளினி, பெரிப்ளஸ் [1] என்ற நூலின் ஆசிரியர், தாலமி போன்றவர்கள் தென்னாட்டில் குறிப்பாக தமிழகத்தின் துறைமுகங்கள் மற்றும் அந்நாளைய தலைநகரங்கள் ஆகியவற்றைப்பற்றி வரைந்து வைத்துள்ள குறிப்புகள் சிறப்பானவையாகும்.

சங்க இலக்கியங்களில் யவனர்கள் பற்றிய பல குறிப்புகள் காணப்படுகின்றன இதுவல்லாமல் தமிழகத்தின் பல பகுதிகளில் அகஸ்டஸ், டைபீரியஸ் கையஸ், கிளாடியஸ், நீரோ, வெஸ் பேசியன், டொமிடியன், நெர்வா போன்ற ரோமானிய மன்னர்களின் காலத்திய தங்க வெள்ளிக் காசுகள் கிடைத்துள்ளன. இவை, தமிழகத்துடன் ரோமானியரின் தொடர்பு குறித்த நேரிடையான சான்றுகளாக விளங்குகின்றன.

1945 ஆம் ஆண்டில் புதுவைக்கு அருகிலுள்ள அரிக்கமேடு[2] என்னும் இடத்தில் நடைபெற்ற அகழ்வாய்வில் ரோமானியர் தமிழகத்தில் ஏற்படுத்தியிருந்த குடியிருப்புப் பகுதி வெளிக் கொணரப்பட்டது. தொடர்ந்து தமிழகத்தில் மேற்கொள்ளப் பட்ட தொல்லியல் ஆய்வுகளில் கி. பி. முதல் - இரண்டாம் நூற்றாண்டுகளில் ரோம் நாட்டில் புழக்கத்திலிருந்த மட் பாண்டங்கள் அதிக அளவில் கிடைத்து வருகின்றன. இவை மூலம் ரோமானியர்கள் தமிழகத்துடன் கொண்டிருந்த வணிக கலாச்சார உறவுகள் பற்றிய பல சிறப்பான செய்திகளை அறிய முடிகிறது. இத்தகைய செய்திகள் குறித்து அவ்வப் போது அறிஞர்கள் தம் ஆய்வுக் கட்டுரைகள் மூலம் எழுதி வருகின்றனர். அண்மையில் தமிழகத்தில் இராமநாதபுரம் மாவட்டம் அழகன்குளத்தில் மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வு குறித்தும், பெரியார் மாவட்டம் கொடுமணல் என்னும் ஊரில் நடைபெற்ற அகழ்வாய்வு குறித்தும் சில செய்திகளை இக் கட்டுரையில் காணலாம்.

## அழகன்குளம்

இவ்வூர் இராமநாதபுரம் மாவட்டத்தில் இராமநாதபுரத் திற்குக் கிழக்கே 28 கி மீ தூரத்தில் அமைந்துள்ளது. அழகேந்திரன் என்னும் அரசன் இப்பகுதியை ஆண்டதால் இவ்வூர் 'அழகேந்திர மங்கலம்' என்று அழைக்கப்பெற்று பின்னர் அழகன்குளம் என மருவி வழங்கப்பட்டது, என இவ்வூர் மக்கள் கூறுகின்றனர். 'நாலு மந்திரக் கும்மி' என்னும் பிற்கால இலக்கியம் அழகேந்திரனைப்பற்றி விரித் துரைக்கிறது.

இங்கு மேட்டுப்பகுதியில் இவ்வூர் மக்களால் கடலை, என் போன்ற தோட்டப் பயிர்கள் பயிர் செய்யப்படுகின்றன.

இதன் தென்பகுதி ஓரளவு சமன் செய்யப்பட்டு, அதில் ஓர் உயர்நிலைப்பள்ளி கட்டப்பட்டுள்ளது. இவ்வாறு சமன் செய்யப்பட்ட பகுதிகளில் பண்டைய கட்டடப்பகுதிகள் சில வெளிப்படுத்தப்பட்டுள்ளன. இவையாவும் மழை, காற்று போன்ற இயற்கையின் செயல்களால் மிகவும் பாதிக்கப்பட்டுள் ளன. இங்குள்ள செங்கற்கள் $38 \times 23 \times 6\frac{1}{2}$ செ மீ அளவுள்ளன.

இங்கு மேற்கொண்ட கள ஆய்வில் ரோமானிய நாட்டில் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்னர் புழக்கத்திலிருந்த சிறப் பான பானை ஓடுகளான ரௌலட்டட் மற்றும் அரிட்டையின் இனப் பானை ஓடுகள் அதிக அளவிற்கு கிடைக்கின்றன. இவை பெரும்பாலும் கிண்ணம் மற்றும் தட்டுகள் வடிவிலா னவை. மேலும், குறுகிய கழுத்துப்பகுதியும், தோளில் இரண்டு கைப்பிடிகளும், அகன்ற உடல் பகுதியும், கூர்மையான அடிப் பகுதியும் கொண்ட சாடிகளில் ரோமானியர்கள் தம் நாட்டு மதுவை தமிழ் நாட்டுக்குக் கொண்டுவந்தனர். இவை 'ஆம்போரா' சாடிகள் என அழைக்கப்பட்டன. இச்சாடியின் பகுதிகள் சிலவும் இங்கு கிடைத்துள்ளன[3].

இவற்றோடு உள்நாட்டைச்சேர்ந்த கருப்பு சிவப்பு வண்ண ஓடுகள், பளபளப்பான கருப்பு வண்ண ஓடுகள், சிவப்பு வண்ண கெண்டிகளின் பகுதிகள் போன்றவை கிடைத்துள்ளன.

இயற்கையாகக் கிடைக்கும் களிமண்ணை நீருடன் நன்கு கரைத்து, மெல்லிய துணியில் வடித்து இறக்கிய களிமண் குழம்பினை வெய்யிலில் காயவைத்து, பிறகு அதனை மீண் டும் தண்ணீரில் கரைத்து அந்த குழம்பினைத் துணியின்

வழியாக ஊற்றி வடித்து நிழலில் காயவைத்து ஓரளவிற்கு கெட்டியான பக்குவத்தில் அக்களிமண்ணை சக்கரத்தில் வைத்து மட்கலன்கள் வனைந்தனர் சக்கரத்திலிருந்து இறக்கப்பட்ட கலன்களின் உட்பகுதியில் கருப்பு வண்ணமும் வெளிப்புறத்தில் சிவப்பு வண்ணமும் தீட்டியுள்ளனர்.[4] தட்டு வடிவிலான கலயங்களில் உட்பகுதியின் அடியில் மூன்று முதல் ஏழு வட்டங்களாக சிறுசிறு புள்ளிகள் குத்தி அலங்காரம் செய்யப்பட்டது. இந்த அலங்காரத்திற்கு 'ரௌலட்டட் அலங்காரம்' என்று பெயர். எனவே, இவை ரௌலட்டட் இனக் கலன்கள் என அழைக்கப்பட்டன.

மேற்கூறிய முறையில் களிமண்ணோடு இளஞ்சிவப்பு வண்ணக்காவியைக் கலந்து 'அரிசோ' (இத்தாலியில் உள்ள ஓர் இடம்) என்னும் இடத்தில் வாழ்ந்த குயவர்களால் வனையப்பட்ட மட்கலன்கள் 'அரிட்டையின் இனக்கலன்கள்' என்று அழைக்கப்பட்டன.

**சங்குகள்**

கோட்டைமேட்டுப் பகுதியில் ஏராளமான பெரிய சங்குகளும், வளையலுக்காக அறுக்கப்பட்ட சங்குகளும், சங்கு வளையல் துண்டுகளும் கிடைக்கின்றன. அக்காலத்தில் தமிழகத்திலிருந்து ஏற்றுமதியான பொருட்களில் சங்கு வளையல்கள் சிறப்பான இடம் வகித்துள்ளன. சங்க காலம் பாண்டியரின் துறைமுகப்பட்டினமாகத் திகழ்ந்த கொற்கை சங்கு வளையல்களின் ஏற்றுமதியில் சிறப்பிடம் பெற்றுத் திகழ்ந்துள்ளது. கொற்கையில் நடைபெற்ற அகழ்வாய்வுகள் சங்குகள் அறுத்து வளையல்கள் செய்யும் தொழிற்கூடம்

இருந்ததை உறுதி செய்கின்றன.[5] அழகன்குளம் கொற்கைக்கு அருகிலேயே உள்ளதால் இப்பகுதியிலும் சங்கு வளையல் செய்யும் தொழிற்கூடம் இருந்திருக்க வேண்டும் இந்தக் கருத்தினை இங்கு ஏராளமான அளவில் கிடைக்கும் சங்கு வளையல் துண்டுகளும், அறுக்கப்பட்ட சங்குகளும் உறுதி செய்கின்றன. இது அக்காலத்தில் அழகன் குளத்திலிருந்து ஏற்றுமதியான பிற பொருட்களோடு சங்கு வளையல்களும் முக்கிய இடத்தினைப் பெற்றுத் திகழ்ந்திருக்க வேண்டும் என்பதைக் காட்டுகிறது.

### மணிகள்

பல வண்ணக்கற்களாலான மணிகள் இம்மேட்டுப் பகுதியிலிருந்து சேகரிக்கப்பட்டுள்ளன. இவை நீள் வட்ட சுழற்சி[6] நீள் வட்ட உருளை,[7] நீள் உருளை வட்ட வடிவ[8] கழுத்தில் பள்ளமான வரி கொண்ட,[9] இருபுறமும் முனை அற்ற நீள் உருளை வடிவம்[10] போன்ற பல வடிவங்களில் காணப்படுகின்றன. மேலும், முழுவதும் செய்து முடிக்கப்படாத மணிகளும் உடைந்த துண்டுகளும் கிடைக்கின்றன. இவை, படிகக்கல் (Crystal), மங்கிய சிவப்புக்கல் (Carnelian) சோப்புக்கல் (Soap Stone), வரியோடிய கருப்புக்கல் (Banded agate) செவ்வந்திக்கல் (Amethyts) போன்ற கற்களால் செய்யப்பட்டுள்ளன. இங்கு மணிகள் செய்யும் உற்பத்திக் கூடம் இருந்திருக்க வேண்டும். மேலும் சங்கு, மணிகள், கண்ணாடி மணிகள் போன்றவையும் இங்கு கிடைத்துள்ளன. இவையாவும் அரிக்கமேடு அகழ்வாய்வில் கிடைத்த மணிகளைப் பெரிதும் ஒத்துள்ளன. ரோமானியர் பளிங்குக்கல் (Rock-Crystals), இளம் பச்சை மரகதக்கல் (Beryls) போன்ற பல்வகைக் கற்களாலான மணிகளை விரும்பி வாங்கிச் சென்றனர் எனக் கூறப்படுகிறது.

**காசுகள்**

இம்மேட்டுப் பகுதியில் மண் தோண்டிய போதும், மழை அரிப்பின் போதும் கிடைக்கும் காசுகள் இவ்வூர் மக்களால் சேகரிக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது இப்பொழுதும், இம் மேட்டில் மழை பொழிந்து நின்றவுடன் ஊர் மக்கள் மணிகள், காசுகள் போன்றவற்றைச் சேகரிக்கின்றனர். இவ்வூரில் திருமணம் நிச்சயம் செய்யும் போது தங்கம், வெள்ளி மற்றும் சீர்வரிசைகளுடன் இம்மேட்டில் கிடைக்கும் 'காலக்காசுகள்' என்று அழைக்கப்படும் பழைய காசு ஒன்றையும் தட்டில் வைத்து நிச்சயம் செய்யும் பழக்கம் நிலவி வருகிறது.

**கடற்கரை**

இங்குள்ள கடற்கரைப்பகுதி தோணிகள் வந்து தங்குவதற்கு ஏற்ற வகையில் ஆங்காங்கே தரைப்பகுதி பிளந்து காணப்படுகிறது. இங்கு பெரும்பாலான நாட்களில் கடலில் அலை ஏதும் இன்றி அமைதியாக இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். அழகன்குளத்திற்கு சுமார் 2 கி மீ. தூரத்திலுள்ள ஆற்றங்கரை என்னும் இடத்திற்கருகில் வைகை நதி கடலோடு கலக்கிறது இதன் மூலம் உள்நாட்டுடன் படகு போக்குவரத்து நடத்தவும் இந்த இடம் ஏற்றதாக திகழ்ந்திருக்க வேண்டும்.

**அழகன்குளம்-சாலியூரா**

பொதுவாக, துறைமுகப்பட்டினங்கள் யாவும் பெயர் பெற்ற பெரிய ஆறுகளின் முகத்துவாரங்களில் (கடலோடு கலக்கும் இடத்தில்) அமைந்திருந்தன. இதனால் கடல் மூல

மாக துறைமுகங்களில் வந்திறங்கும் பொருட்களை ஆறுகளின் வழியாகப் படகுகள் மூலம் உள்நாட்டு வாணிபத்திற்கு எடுத்துச் செல்ல வாய்ப்பு உண்டு.

குறிப்பாக பேரரசுகளின் தலைநகரங்களுக்கு அருகே பாயும் ஆறுகள், கடலுடன் கலக்கும் இடங்களில் பெரும் பாலும் துறைமுகங்கள் அமைக்கப் பெற்றிருந்தன. எடுத்துக் காட்டாக, சங்ககாலச் சோழர்களின் தலைநகரமாக விளங்கிய உறையூருக்கு அருகில் பாயும் காவிரியாறு கடலில் கலக்கும் இடத்தில் காவிரிப்பூம்பட்டினம் என்னும் சிறந்த துறைமுகம் அமைந்திருந்தது. சேரர்களின் தலைநகரமான வஞ்சி (கண்ணனூர்) அருகே பாய்ந்து செல்லும் பேரியாறு மேலைக் கடலில் கலக்கும் இடத்தில் மூசிறித் துறைமுகம் அமைந்திருந்தது. பாண்டியர்களின் தலைநகரமாகிய மதுரைக்கு அருகே பாயும் வைகையாறு கடலுடன் கலக்கும் இடத்திலும் ஒரு துறைமுகப்பட்டினம் இருந்திருக்க வேண்டும். அழகன் குளம் கோட்டைமேடு கள ஆய்வில் கிடைத்த தொல் பொருட்களும், இம்மேட்டின் அமைப்பும், இங்கு ஒரு கோட்டையும் நகரமும் இருந்திருக்க வேண்டும் என்பதை உறுதி செய்கின்றன. இதனால் அழகன்குளமும் சங்க காலத்தில் வைகையாற்றின் முகத்துவாரத்திற்கு அருகில் பாண்டியர்களின் முக்கிய துறைமுகமாக விளங்கியிருக்க வேண்டும் என்று கருதலாம்.

பாண்டியர்கள் ரோமானியருடன் நெருங்கிய உறவு கொண்டிருந்தனர். பாண்டிய அரசன் ஒருவன் அகஸ்டஸ் சீசர் என்னும் ரோமானிய பேரரசரின் அரசவைக்குத் தூதுக் குழு ஒன்றை அனுப்பினான் என ஸ்ட்ராபோ குறிப்பிடுகிறார். [11] அக்காலத்துப் பாண்டிய மன்னர்கள் யவனர்

கொண்டு வந்த மதுவை அருந்தினார்கள்[12] மதுரைக் கோட்டை வாயில்களில் யவன வீரர்கள் காவல் இருந்தனர்.[13] பாண்டியன் நெடுஞ்செழியனின் போர் பாசறையை யவன வீரர்கள் காவல் புரிந்தனர்.

இவ்வாறு பாண்டியர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த யவனர்கள், வாணிகத்தின் பொருட்டு கொண்டு வந்த பொருட்களைத் தலைநகரமான மதுரைக்கு ஆற்றின் வழியாக எளிதாகவும் வேகமாகவும் கொண்டு வரலாம். அதே போன்று உள்நாட்டுப் பொருட்களை ஏற்று மதிக்காக துறைமுகத்திற்கு ஆற்றின் வழியாக எடுத்துச் செல்லலாம். எனவே, பாண்டியர்கள் அழகன்குளத்தில் ஒரு துறைமுகப்பட்டினத்தை ஏற்படுத்தியிருந்தனர் என்பதை தொல்லியல் சான்றுகள் உறுதி செய்கின்றன.

சங்ககாலப்பாண்டிய நாட்டில் கொற்கையும் சாலியூரும் மிகச்சிறந்த துறைமுகப்பட்டினங்களாக விளங்கியிருக்கின்றன. இதில் கொற்கை தாமிரவருணி ஆறு கடலோடு கலக்கும் இடத்திற்கு அருகில் அமைந்திருந்தது தற்போது இது நெல்லை மாவட்டம் திருவைகுண்டம் வட்டத்தில் ஒரு சிற்றூராகக் காணப்படுகிறது. இங்கு தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை அகழ்வாய்வு மேற்கொண்டு பல அரிய தொல்பொருட்களை வெளிக் கொணர்ந்துள்ளது.

நெல்லினூர் என்பது கிழக்குக் கடற்கரையோரம் பாண்டிய நாட்டில் இருந்த ஒரு துறைமுகப்பட்டினம். இங்கு "நாவாய்களிலிருந்து பண்டங்களை இறக்குமதி செய்தபோது

முரசு முழங்கிற்று. கப்பல்கள் துறைமுகத்தில் தங்கியிருந்த காட்சியானது வெள்ளத்தை முற்றுகை செய்யும் மலை போலத் தோன்றிற்று. இப்படிப்பட்ட வணிக வளமுள்ள நெல்லினூரைக் கொண்ட பாண்டிய நெடுஞ்செழியன்"[14] என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது.

சால் என்பதற்கு நெல் என்ற பொருளும் உண்டாகையால் நெல்லூரும் சாலூரும் ஒன்றே என அறிஞர்கள் கூறுகின்றனர்[15] இத்தகைய சிறப்பான துறைமுகமாக விளங்கிய சாலூர் தற்போது எங்குள்ளது என்பது சரியாகக் குறிக்கப் படவில்லை.

கி பி இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த தாலமி என்னும் எகிப்து நாட்டைச் சேர்ந்த பூகோள வல்லுனர் தமிழகத்தின் கிழககுக் கடற்கரையோரம் உள்ள துறைமுகப் பட்டினங்களையும் உள்நாட்டில் இருந்த சிறந்த நகரங்களையும் குறித்துள்ளார். இதில் பாண்டிய நாட்டிலுள்ள சாலூர் என்னும் துறைமுகம் கொற்கைக்கு வடக்கே இருப்பதாகக் கூறுகிறார்.[16] மேலும் 'சாலூர் இலங்கையின் வட முனைக்கு நேர் எதிரில் கிழக்குக் கடற்கரையோரம் உள்ளது. இங்கு எப்பொழுதும் கப்பல்கள் நிறைந்திருந்தன. இக்கப்பல்களிலிருந்து விலையுயர்ந்த பொருட்கள் இறக்குமதி செய்யப்பட்டன' என வார்மிங்டன் என்னும் அறிஞர் குறிக்கிறார்.[17] அழகன்குளம் இலங்கையின் வடமுனைக்கு எதிராக அமைந்துள்ளது.

கொற்கைக்கு வடக்கே சுமார் 80 கி. மீ. தூரத்தில் அழகன்குளம் அமைந்துள்ளது, இங்குள்ள கோட்டைமேடு

பண்டைய ரோமானியரின் சான்றுகளைத் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது. மேலும் பாண்டிய நாட்டுத் தலைநகரான மதுரைக்கு அருகில் பாய்ந்து வரும் வைகையாறு அழகன்குளத்திற்கு அருகில் ஆற்றங்கரை என்னுமிடத்தில் கடலுடன் கலக்கிறது. எனவே, மதுரைக்காஞ்சி சிறப்பித்துக் கூறும் பாண்டிய நாட்டுத் துறைமுகப்பட்டினமாகிய நெல்லினூராகிய சாலூர் அழகன்குளம் கோட்டைமேட்டுப் பகுதியிலிருந்து வைகையாறு கடலுடன் சேரும் ஆற்றங்கரை வரை பரவியிருந்திருக்கலாம். இக்கருத்து உறுதிப்படுவதற்கு இவ்விடத்தில் மேற்கொள்ளவிருக்கும் அகழ்வாய்வுகள் சரியான சான்றுகளை அளிக்கக்கூடும்.

### கொடுமணல்

கொடுமணம் என்னும் ஊரில பொன் நகைகள் விற்கப்பட்டன என பதிற்றுப்பத்து கூறுகிறது.[18] இந்த கொடுமணம் தற்போது பெரியார் மாவட்டத்தில் நொய்யலாற்றின் வடகரையில் கொடுமணல் என்னும் சிற்றூராக விளங்குகிறது. இவ்வூருக்குக் கிழக்கே நந்தன்மேடு என்னும் பரந்தமேடு உள்ள இடத்தில் அன்றைய கொடுமணம் அமைந்திருந்தது என்பதற்கு இம்மேட்டில் மேற்கொள்ளப் பட்ட களஆய்வில்[19] கிடைத்த தொல்பொருட்கள் சான்று பகர்கின்றன.

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை மேற்கொண்ட கள ஆய்வில் வெண் படிகக்கற்களான நுண் கற்கருவிகளும் வண்ண அலங்காரக் கோடுகள் தீட்டப்பட்ட கருப்பு, சிவப்பு வண்ண மட்கலங்களும் சங்கு வளையல் துண்டு

களும் பல வண்ணக் கற்களாலான மணிகளும் ரோமானிய பானை ஓடுகளான ரௌலட்டட் மற்றும் அரிட்டைமின் இனப் பானை ஓடுகளும் கிடைத்துள்ளன.[20] இங்கு ரோமானியர் பானை ஓடுகள் கிடைத்திருப்பதைக் கொண்டு, இவ்வூரில் செய்யப்பட்ட பல வண்ண கல்மணிகள் பதிக்கப்பெற்ற பொன் அணிகளுக்காக ரோமானிய வணிகர்கள் அடிக்கடி இவ்வூருக்கு வந்திருக்கின்றனர் எனத் தெரிகிறது. ரோமானியர்கள் பளிங்குக்கற்கள், இளம்பச்சை மரகதக்கற்கள் போன்றவற்றை மிகவும் விரும்பினர் இவ்வகைக் கற்கள் கொடுமணலிலும் அதற்கு அருகிலுள்ள படியூரிலும் அதிக அளவில் கிடைக்கின்றன.[21] இங்கு பெருங்கற்சின்ன கல்பதுக்கைகளும் காணப்படுகின்றன.

அண்மையில் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் கொடுமணலில் உள்ள நந்தமேட்டில் அகழ்வாய்வு மேற்கொண்டது.[22] இந்த ஆய்வில் கி.மு மூன்றாம் நூற்றாண்டு முதல் கி.பி. நான்காம் நூற்றாண்டு வரையிலான கால கட்டத்தைச் சேர்ந்த தொல்பொருள்கள் கிடைத்துள்ளன. மேலும் கி.மு மூன்றாம் நூற்றாண்டு முதலே இவ்விடத்துடன் ரோமானியர்கள் தொடர்பு கொண்டிருந்தனர் எனக் கூறப்படுகிறது. இதனால் நம் நாட்டுடன் ரோமானியர் கொண்டிருந்த வணிகத் தொடர்பின் ஆரம்ப காலம் பற்றிய வரலாறு மாறுபடக்கூடும்.

## தமிழகத்தில் ரோமானியர் தொல்பொருட்கள் கிடைத்த இடங்கள்

| வ. எண். | ஊர் | மாவட்டம் | கிடைத்த ரோமானியத் தொல்பொருட்கள் |
|---|---|---|---|
| 1. | அரிக்கமேடு⊗ | பாண்டிச்சேரி | மட்பாண்டங்கள், காசுகள் |
| 2. | அழகன்குளம் | இராமநாதபுரம் | மட்பாண்டங்கள் |
| 3. | உறையூர்⊗ | திருச்சிராப்பள்ளி | மட்பாண்டங்கள் |
| 4. | கத்தாங்கண்ணி | கோயம்புத்தூர் | காசுகள் |
| 5. | கரிவலம் வந்தநல்லூர் | திருநெல்வேலி | காசுகள் |
| 6. | கருக்காகுறிச்சி | புதுக்கோட்டை | காசுகள் |
| 7. | கரூர்⊗ | திருச்சிராப்பள்ளி | மட்பாண்டங்கள், காசுகள் |
| 8. | கலயம்புத்தூர் | மதுரை | காசுகள் |
| 9. | காஞ்சீபுரம்⊗ | செங்கற்பட்டு | காசுகள் |
| 10. | காவிரிப்பூம்பட்டினம்⊗ | தஞ்சாவூர் | மட்பாண்டங்கள் |
| 11. | குளத்துப்பாளையம் | கோயம்புத்தூர் | மட்பாண்டங்கள் |
| 12. | காரைக்காடு⊗ | தென் ஆற்காடு | மட்பாண்டங்கள் |

| வ. எண். | ஊர் | மாவட்டம் | கிடைத்த ரோமானியத் தொல்பொருட்கள் |
|---|---|---|---|
| 13. | கொடுமணல்⊗ | பெரியார் | மட்பாண்டங்கள் |
| 14. | கொற்கை⊗ | திருநெல்வேலி | மட்பாண்டங்கள் |
| 15. | செங்கமேடு⊗ | தென் ஆற்காடு | மட்பாண்டங்கள் |
| 16. | தஞ்சாவூர் | தஞ்சாவூர் | காசுகள் |
| 17. | தொண்டமாநத்தம் | தென் ஆற்காடு | காசுகள் |
| 18. | நத்தமேடு⊗ | தென் ஆற்காடு | காசுகள் |
| 19. | பெண்ணாறு | கோயம்புத்தூர் | காசுகள் |
| 20. | மாமல்லபுரம் | செங்கற்பட்டு | காசுகள் |
| 21. | மதுரை | மதுரை | காசுகள் |
| 22. | மாம்பலம் | சென்னை | காசுகள் |
| 23. | மேல்சாத்தமங்கலம்⊗ | பாண்டிச்சேரி | மட்பாண்டங்கள் |
| 24. | வசவசமுத்திரம்⊗ | செங்கற்பட்டு | மட்பாண்டங்கள் |
| 25. | வெள்ளலூர் | கோயம் புத்தூர் | காசுகள் |

⊗அகழ்வாய்வு செய்யப்பட்ட இடங்கள்.

அடிக்குறிப்புகள்

(1) 'பெரிப்ளஸ்' என்றால் கரையோரக் கடற்பயணம் என்று பொருள்.

(2) R. E. M. Wheeler : Arikamedu : An Indo-Roman trading station on the Eastcoast of India-Ancient India No. 2 (1946) pp. 17-124.

(3) இந்நூலின் வேறொரு பகுதியில் வெளியாகியுள்ள இதன் படம் பார்க்கவும்.

(4) டாக்டர் வீலர் ரௌலட்டட் மட்கலன்களின் உட்புறம் கருப்பு வண்ணமும் வெளிப்புறம், சிவப்பு வண்ணமும் கவித்து வைத்து சுடும்முறையால் ஏற்பட்டது என்று கூறுகிறார். ஆனால் அழகன்குளத்தில் கிடைத்துள்ள பானை ஓடுகளில் கறுப்பு சிவப்பு வண்ணங்கள் பூசப் பட்டிருப்பது தெளிவாகத் தெரிகிறது. Dr. Wheele op.cit. pp.40–41

(5) DAMILCA, Vol.I (1970) pp-50-54, Ed. R.Nagaswamy

(6) Spheriod

(7) Long Barrel elliptical

(8) Long cylindrical circular

(9) Barrel groove (10) Long-barrel truncated

(11) K. K. Pillay., 'A Social History of the Tamils' p.92.

(12) புறம். 56. வரி. 18-21

(13) சிலப்பதிகாரம், ஊர்காண்காதை, வரி 66-67

(14) மதுரைக்காஞ்சி-வரி. 75-88

(15) மயிலை. சீனி. வேங்கடசாமி, பழங்காலத்தமிழர் வாணிகம் (1974) சங்ககாலம் பக். 97—98.

(16) J. W. Mccrindle., Ancient India by Ptolemy pp. 58—59.

(17) E. H. Warmington., The Commerce between the Roman Empire and India (1974) p.62

(18) பதிற்றுப்பத்து, 8ஆம்பத்து, 4:5 – 6

(19) இங்கு தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையும் ஈரோடு கலைமகள் கல்வி நிலையமும் களஆய்வு மேற்கொண்டன.

(20) புலவர் செ. இராசு, 'பெரும்புகழ்க் கொடுமணம்' ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு விழாமலர் (1981) பக் 495-397.

(21) R.Nagaswamy., 'Roman Sites in Tamilnadu: Recent Discoveries in MADHU – Recent Researches in Indian Archaeology and Art history.

(22) Indian Express, Dated 25 6—85

# மண்மூடிக்கிடக்கும் சிங்கபுரம் (கலசபுரம்)

இரா. முத்து எம். ஏ.,
இராமேஸ்வரம்.

தமிழ் மண்ணில் எத்தனையோ நாகரீகங்கள் அரும்பி மலர்ந்து கருகிவிட்டது போல, எத்தனையோ பேரரசுகள் பிறந்து, விரிந்து இறந்து விட்டது போல் சிங்கபுர நாகரிகமும், சிங்கபுரஅரசும் சிறுகக் கட்டி பெருக வாழ்ந்து விரைவாக மறைந்து விட்டன. அந்த நாகரிகம் செல்வாக்கு பெற்றதற்கும் அந்த அரசு செழுமை அடைந்ததற்கும். காரணமாகயிருந்த மன்னர்கள் பலர். அந்த தலைநகரமிருந்த இடமே தெரியாது மண்ணோடு மண்ணாக மறைந்து போனது. மன்னர்கள் வாழ்ந்த மாளிகை இடிபாடுகளுக்கு இடையில் ஒரு குடிசை கூட இல்லாத அடர்ந்த காடாகத் தான் இன்று காட்சி அளிக்கின்றது உறையூர் பெரு நகர் மண்காற்றினால் மறைந்து போனது போல் தடையமே தெரியாமல் மறைந்துபோனது. ஆனால் இங்குள்ள கிராமங்கள், கோவில்கள், செங்கற்கள் மண்பாண்டங்கள் எலும்புக்கூடுகள், முதுமக்கள் தாழிகள், கட்டடங்கள், இடத்தின் பெயர்கள் இதன் சிறப்பை நினைவு படுத்தச் செய்கின்றன.

## சிங்கபுரத்தின் தொன்மை

புதுக்கோட்டை சமஸ்தானத்தின் கீழைத்திசையில் ஒரு கல்தொலைவில் வடக்கே மணிபல்லவச்சாலைக்கும் தெற்கே, திருவாங்குளச்சாலைக்கும் உட்பட்ட பகுதியான சிங்கபுர

பெருநகர், இது எட்டுகல் தொலைவு பரவிகிடந்துள்ளது. இவற்றை முத்தரையர்களின் முன்னோர்கள் ஆண்டு வந்துள்ளனர். இவற்றில் இன்று நமக்குப் புறச்சான்றுகளாக கிடைப்பவை, இங்குள்ள **பொற்பனைக்கோட்டை, மணி பல்லவப்பொய்கை, வெண்மணிக்கோட்டை, புலியாண்டு, குரங்கு கோட்டை,** சோழர்களின் தொன்மைமிகு கோவிலுள்ள **திருக்கட்டளை கிராமம். இராசராசன் பெருவழி, இராஜேந்திரன் பெருவழி** போன்றவை இவைபோன்ற வரலாற்றுச் சான்றுகள் எத்தனையோ உண்டு சிங்கபுரத்தைச் சார்ந்த குரங்குக்கோட்டையும். திருக்கட்டளையையும், நடுவண் அரசு தொல்பொருள் துறையினர் பாதுகாத்து வருகின்றனர்.

**சோழர்களின் பாதுகாப்பு நகர்**

கரிகால் பெருவளத்தான் இளையவனாக இருந்த காலத்து பகைவர்களால் சிறையில் அடைக்கப்பட்டு அச்சிறையிலிருந்து தப்பிச் சென்று பின்னர் படையுடன் வந்து காவிரிப்பூம்பட்டினத்தின் ஆட்சியைக் கைப்பற்றினான் என்னும் செய்தியை "கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப்பாலை என்னும் நூலின் (வரி 220-236) வாயிலாக அறிகின்றோம். கரிகாலன் எங்கு சென்றான்? அவன் அடைக்கலம் புகுந்த நகர் எது? படை கொடுத்துதவியவர் யார்? என்ற வினாக்களுக்கு வரலாற்றில் மயக்கம் ஏற்படுகின்றது

கரிகால் பெருவளத்தான் எதிரிகளிடமிருந்து தப்பி சோழ நாட்டின் தெற்கு எல்லையாக அமைந்த

வெள்ளாற்றின் வடக்கே அண்மையிலுள்ள சிங்கபுரத்தில் வந்து தங்கினான். பின்னர் சிங்கபுரமன்னனின் உதவி பெற்று பகைவர்களை வென்று காவிரிப்பூம்பட்டினத்தைத் தன்னாட்சிக்கு உட்படுத்தினான் என்று கொள்வது ஆய்வுக்குரிய ஒன்றாகும்.

காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த வணிகர்கள் (நகரத்துச் செட்டியார்கள் காவிரிப்பூம்பட்டினம் கடல் கொண்ட பின்னர் அவர்கள் புதுக்கோட்டை வெள்ளாற்றின் தெற்குக் கரையில் குடியேறி இருப்பதிலிருந்து சிங்கபுரம் (புதுக்கோட்டை) காவிரிப்பூம்பட்டினத்தோடு தொடர்பு கொண்டது என்று தெரிகின்றது.

சிலப்பதிகாரத்தின் தலைவன் கோவலன், கொலையுண்ட பின், கண்ணகியிடம் மதுராபுரி காவல் தெய்வம் "கண்ணகி நான் சொல்வதைக் கேள்! கோவலன் சென்ற பிறவியில் சிங்கபுரத்து வணிகனை, ஒற்றன் என்று கூறி காட்டிக்கொடுத்தான் அதன் பயனாக சிங்கபுரத்து வணிகன் வெட்டுண்டு உயிர் நீத்தான். அந்த ஊழ்வினைப் பயனாக இப்பிறவியில் கோவலன் கள்வன் என்று ஊழ்வினை உருத்தி கொலையுண்டு, சிங்கபுரத்து வணிகனின் மனைவி பிரிவுத்துயரால் வருந்தியதுபோல உனக்கும் ஊழ்வினை உருத்தியது" என்றது.

சிலம்பில் கோடிட்டுக்காட்டப்படும் சிங்கபுரம், இச்சிங்கபுரமாக இருந்திருக்கலாம் என்று கொள்வது ஆய்வு நோக்கில் தெரியவருகின்றது. ஆனால் சிங்கபுரத்திற்கு நகரத்தார்கள் வருகிறபோது சிங்கபுரம் என்ற நகர் இயற்கையின் சுழற்சியால் மண்மாரி பொழிந்து மறைந்துபோயினது.

**காராளன் ஆண்ட சீமை**

இச்சிங்கபுரப்பகுதியில் வாழும் மக்கள் காராளன் சீமை என்று இன்றும் இப்பகுதியை அழைப்பதை நாம் கேட்கலாம்.

**புதையுண்ட நகர் – அரண்மனை மாளிகைகள்**

**பொற்பனைக்கோட்டை**

இன்று நமக்குக் காட்சிப் பொருளாக விளங்கும், மறைந்து கிடக்கும் பண்மேட்டின் மீது முனீஸ்வரன் கோயில் உள்ளது. ஒரு காலத்தில் இரண்டு கல் சுற்றளவு உள்ள அரண்மனை இங்கு இருந்துதிருக்கின்றது. கோட்டையின் நான்கு மூலை களிலும் இருந்த காவல் தெய்வம் இன்றுமுள்ளது. ஆனால், அரண்மனை மாளிகை முழுவதும் மண்மூடிக் கிடக்கின்றது. இக்கோட்டையின் செங்கற்களும், கட்டட அமைப்பு, மண்பாண்டம், பானை ஓடுகள் (Pottery) காவிரிப்பூம்பட்டி னத்தில் அகழ்ந்து எடுக்கப்பட்ட புத்தவிஹார கட்டடத்தி லுள்ள செங்கற்களிலும், கட்டிட அமைப்பும் ஒத்திருப்பது ஆய்வுக்குரிய ஒன்றாகும்.

**குரங்குக் கோட்டை**

சோழர்களின் மிகத் தொன்மையான சுந்தரேஸ்வரர் கோயில் சிங்கபுரப்பகுதியைச் சேர்ந்தத் திருக்கட்டளை கிரா மத்தில் உள்ளது. இக்கோவில் நடுவண் அரசு தொல்பொருள் துறையினரால் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. இக்கோவி லுக்குச் செல்லும் வழியில்தான் குரங்குக்கோட்டையுள்ளது. இவற்றில் நடுவண் அரசு தொல்பொருள் துறையினரால்

அகழ்ந்து எடுக்கப்பட்ட முதுமக்கள் தாழி, புதுக்கோட்டை அருங்காட்சியகத்தில் காட்சிப் பொருளாகவுள்ளன.

**புலியரண்டு**

இப்பெயரைக் கொண்டே சோழர்களின் சின்னம் நினைவுக்கு வருகின்றது புலிக்கொடியை உடைய சோழ மன்னர்கள் இப்பகுதியை ஆட்சி செய்தார்கள் என்பது தெளிவாகின்றது சோழர்கள் ஆட்சிக்குட்பட்டிருந்த சிங்க புரம் மண்மாரி பொழிந்து மறைந்த பின்னர் எஞ்சியிருந்த சிற்றரசுகளுக்கும் (முத்தரையர்) கி. பி. 850ல் பிற்காலச் சோழப் பேரரசை உருவாக்கிய விசயலாயனுக்கும் நடந்த போரில் சிங்கபுரம் அழிவுற்றிருக்கலாம் இப்பகுதியில் வாழும் முத்தரையர் மக்கள் தங்களின் பட்டப் பெயராக 'இம்மண்ஆண்டான்' என்று பெயரிட்டு அழைப்பது. ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளக் கூடியதாகும் இன்று இப்பகுதி முழுவதும் முத்தரையர்களே அதிகமுள்ளனர்.

---

**தற்கொலை**

பொது நலனுக்கு இன்று உண்ணாவிரதம் இருக்கின்றோம். அன்று உயிரையே கொடுத்துள்ளார்கள்' திருப்பரங்குன்றத்தில் வைராவி குட்டி மகன் முகமதியர் படை மதுரையைத் தாண்டி திருப்பரங்குன்றம் வராது இறைவன் காக்க வேண்டுமெனப் பிரார்த்தித்து கோபுரத்தின் மீது ஏறி கீழே குதித்து உயிர்ப்பலி கொடுத்துள்ளான். இது நடந்தது 600 ஆண்டுகளுக்கு முன். இன்றும் திருப்பரங் குன்றக் கோபுரத்தில் இது பற்றிய கல்வெட்டுள்ளது.

# கட்டாணைபருமர்

இரா. செல்வராசு, எம். ஏ.,
கோவை

தருமபுரிப் பகுதியில் நூற்றுக்கணக்கான நடுகற்கள் இதுவரையில் படியெடுத்து வெளியிடப்பட்டுள்ளன. வெளியிட்டும் வெளியிடப்படாததுமான நடுகற்கள் எட்டில் கட்டாணைபருமர் என்ற ஒரு மன்னனின் பெயர் காணப்படுகிறது.[1] இந் நடுகற்களின் வாயிலாக இம் மன்னன் கங்க மரபைச் சார்ந்தவன் என்பதை அறிய முடிகிறது.[2] இவனுடைய 47 வது ஆட்சியாண்டு நடுகல் கிடைப்பதைக் கொண்டு இவன் இப்பகுதியை 50 ஆண்டுகள் வரை ஆட்சி புரிந்தவன் எனலாம்.

கட்டாணைபருமர் யார் என்று அறிவதில் பல்வேறு ஆய்வாளர்கள் பல மாறுபட்ட கருத்துக்களைக் கூறியுள்ளனர். கட்டாணை என்பது இவனுடைய இயற்பெயரா? அல்லது சிறப்புப் பெயரா? என்று அறிவதில் சிக்கல் இருப்பினும் பொதுவாக இது இவனுடைய இயற்பெயராகவே இருக்க வேண்டும் என்று யூகிக்க முடிகிறது.

நடன காசிநாதன் அவர்கள் முதலில் இரண்டாம் சிவமாறனையே கட்டாணைபருமர் என்று கூறி, பின்பு ஒரு கட்டுரையில் ஸ்ரீ புருஷனே கட்டாணைபருமர் என்று உறுதி செய்கிறார்.[4] B R. கோபால் அவர்களும் கங்க மன்னனாகிய ஸ்ரீபுருஷனையே கட்டாணைபருமர் என்று கூறுகிறார்[5] மற்றும் சிலர் இராஷ்டிரகூட மன்னனாகிய

முதலாம் கிருஷ்ணனையும் (கி பி 756 — 775) மேலைச் சாளுக்கிய வேந்தனான முதலாம் கீர்த்தி வர்மனையும் (கி பி. 566—597) கட்டாணைபருமரோடு ஒப்பிட்டு இவர்களே கட்டாணைபருமர் என்று கூறியுள்ளார்.

இரண்டாம் சிவமாரவர்மன் கி பி. 788 முதல் 845 வரை கங்க நாட்டை ஆண்டவன். ஸ்ரீ புருஷனின் மகன் இரண்டாம் சிவமாறனின் நடுகல்லிலும், கட்டாணைபருமருடைய நடு கல்லிலும் புறமலை நாட்டை ஆண்டுவந்த கந்தவாண்ணதி அரைசர் குறிப்பிடப்படுவதைக் கொண்டு இரண்டாம் சிவ மாறனே, கட்டாணைப்பருமர் என்று முடிவு கூறியுள்ளார். இக்கருத்து ஏற்றுக் கொள்ள கூடியதாக இல்லை. கட்டாணை பருமரின் நடுகற்களில் வரும் இந்த கந்தவாண்ணதி அரை சர் சிவமாறனுடைய நடுகற்களில் மட்டுமின்றி பல்லவ மன்ன னரான ஈசுவர பருமனின் இரண்டாம் ஆட்சி யாண்டு நடு கல்லிலும் வருகிறார். ஈசுவரபருமன் பல்லவமன்னன் இரண்டாம் மகேந்திரவர்மனின் சமகாலத்தில் (கி.பி. 660-670) ஆட்சி புரிந்தவன் ஆவான்.[7] அவ்வாறெனில் ஈசுவர பருமனின் காலம் கி. பி. 660 ஆகும். இவனுடைய இரண்டாவது ஆட்சியாண்டு நடுகல்லில் கந்தவாண்ணதி அரசர் வருவதால் இவருடைய காலம் கி பி. 662 எனக் கொள்ளலாம். சிவமாறனின் 47வது ஆட்சியாண்டு நடு கல்லிலும்[8] வாண்ணதி அரசர் வருவதால் கி. பி. 662 முதல் 835 வரை புறமலை நாட்டை ஆட்சி புரிந்தான் என்று தவறான முடிவு ஏற்படுகிறது. ஒருவன் 170 ஆண்டுகள் உயிர்வாழ்வதும் ஆட்சி புரிவதும் இயலாத செயலாகும்.

நடன. காசிநாதன் அவர்கள ஸ்ரீ புருசனை—கட்டாணை பருமர் என்று கூறுவதும். ஏற்கக் கூடியதாக இல்லை.

ஸ்ரீ பிரிதி கொங்கனி " 9 என்ற அடைச்சொல் ஸ்ரீ புருஷனுக்கு மட்டுமே வருகிறது என்றும், போத்தன் கோட்டை நடுகல்லிலும் ஸ்ரீ பிரிதி கொங்கனி கட்டாணைப் பருமர் என வருகிறது என்றும் ஆதலால் ஸ்ரீ புருஷனும் கட்டாணை பருமரும் ஒருவர் என்பது இவரது ஆய்வாகும் மேலும் ஸ்ரீ புருஷனுடைய கல்வெட்டுக்களில் கட்டானோ என்றச் சொல் பயின்று வருகிறது. கட்டானோ என்ற சொல் கன்னடச் சொல்லாகும், இதன் தமிழ் வடிவமே கட்டாணை என்று கூறுகிறார்.[10]

இச்சான்றுகள் வலிமையானவையாக இல்லை. முதலில் ஸ்ரீ பிரிதிவிகொங்கனி என்ற அடைச் சொல் ஸ்ரீ புருஷனுக்கு மட்டுமின்றி முதலாம் சிவமாறனுக்கும் வருகிறது.[11] மேலும் வடஆற்காடு மாவட்டத்தில் கிடைத்த ஒரு கல்வெட்டில் ஸ்ரீ பிரிதி கங்க மகனார் என்று வருகிறது.[12] இக் கல்வெட்டு செய்தியைக் கொண்டு பொதுவாக கங்க மன்னர்கள் தங்களைச் சிறப்பித்துக் கொள்ளவே 'ஸ்ரீ பிரிதி' என்று கல்வெட்டுக்களில் பொறித்துக் கொண்டனரே தவிர, எந்த ஒரு குறிப்பிட்ட மன்னரையும் குறிப்பிடப் பயன் படுத்தவில்லை என்பது தெளிவாகிறது.

ஸ்ரீ புருஷன் கி. பி 725 முதல் 788 வரை ஆட்சி செய்தவன் ஆவான் இவனுடைய 21வது ஆட்சி ஆண்டில் கங்க நாட்டை 'மாவலி வாணராயர்" ஆட்சி செய்திருக் கின்றார்.[13] இவர் முதலாம் சிவமாறன் (670 –713 கி.பி.) காலத்திலும் கங்க நாட்டையாட்சி செய்திருக்கின்றார்[14] ஆனால் தருமபுரி பகுதியில் கிடைத்த கட்டாணை பருமரின் நடுகற்களில் கங்க நாட்டை ஆள்வது இந்த

மாவலிவாணராயர் அல்ல. இவருக்குப் பதிலாக பெரும் வாணதி அரையர் ஆவார்[15] ஸ்ரீ புருஷனும் கட்டாணை பருமரும் ஒருவரே என்றால் கங்க நாட்டை இருவேறான வர் ஆளுவது ஏன்?

ஸ்ரீ புருஷன் கட்டாணைபருமர் அல்ல என்பதற்கு மேலும் ஒரு சில சான்றுகளைக் காணலாம். ஸ்ரீ புருஷனை இரண்டாம் நந்திவர்மன் கி. பி. 760ல் நடை பெற்ற போரில் தோற்கடித்து, இவன் ஆளுகைக்குட்பட்ட பகுதிகளைப் பிடித்து, பாணமன்னனுக்கு கொடுத்தான்.[16] இப்போர் இரண்டாம் நந்திவர்மனின் 58வது யாட்சி யாண்டில் நடைபெற்றதாகும். மேற்படிச் செய்தியை மெய்ப்பிப்பது போன்று ஸ்ரீ புருஷனின் கல்வெட்டுக்கள் தருமபுரி, வ. ஆ மாவட்டங்களில் 21வது ஆட்சியாண்டுக்குப் பிறகு கிடைக்கப் பெருமையால், இப்பகுதி ஸ்ரீ புருஷனின் ஆட்சிப் பிடியிலிருந்து நழுவி இருக்கலாம் அதனால் தான் இக்காலத்தில் இவனுடைய கல்வெட்டுக்கள் கிடைக்கவில்லை போலும் ஆனால் அதே சமயத்தில் கட்டாணைபருமருடைய 34 வது ஆட்சியாண்டு முதல் 45வது ஆட்சியாண்டு வரை 5 நடுகற்கள் தருமபுரி பகுதியில்கிடைத்துள்ளதை நோக்கினல்[17] ஸ்ரீ புருஷனும் கட்டாணைபருமரும் வேறு வேருனவர்களே தவிர ஸ்ரீ புருஷன். கட்டாணை பருமராக இருக்க முடியாது.

தருமபுரி பகுதியில் கட்டாணை பருமருடைய எட்டு நடுகற்களும், ஸ்ரீ புருஷனுடையதாக நான்கு நடுகற்களும் இதுவரையில் கிடைத்துள்ளன. கட்டாணைபருமரின் 37வது

ஆட்சியாண்டில் புறமலை நாட்டை கந்தவாண்ணதி அரசர் ஆள்வது முன்பே குறிப்பிடப்பட்டது இக்காலத்தில் அருட்டிறையார் என்பார் தொறு கவர்ந்து செல்லும் பொழுது போரில் இறந்தார்[18] இது நடுகல் தரும் செய்தி யாகும். இதன் வாயிலாகப் புறமலை நாட்டைக் கந்த வாண்ணதி அரசர் ஆட்சி செய்தவர் என்பதை அறியலாம். அவர் கட்டாணை பருமரின் மேலரசு ஆட்சியை ஒப்புக் கொண்டவர் என்பதையும் அறியலாம். ஆனால் ஸ்ரீ புருஷன் 16 வது ஆட்சியாண்டில் மேற்புறமலை நாட்டை அமரடக்கி யார் ஆள்கிறார்[19] மற்றொரு ஆட்சியாண்டு உடைந்த நடு கல்லில் புறமலை நாட்டை பிருணிதுவியார் ஆள்கிறார். ஸ்ரீ புருஷனும் கட்டாணைப்பருமரும் ஒருவரேயென்றால் ஒரேகாலக்கட்டத்தில் புறமலை நாட்டை இரு வேறு குறு நில மன்னர்கள் ஆள்வது எப்படி?

மேற்படிச் சான்றுகளைக் கொண்டு கட்டாணைபருமர் ஸ்ரீபுருஷன் அல்ல என்பதைத் தெளிவாகத் துணிந்து கூறலாம்.

கட்டாணைபருமர் கங்க மன்னன் முதலாம் சிவமாறனாக இருக்கலாமா என்ற ஒரு கேள்வி எழுகிறது. கட்டாணை பருமர் முதலாம் சிவமாறனாகவும் இருக்க முடியாது. காரணம் முதலாம் சிவமாறனுடைய 22வது ஆட்சியாண்டில் கங்க நாட்டை மாவலி வாணராயர் ஆட்சி செய்கின்றார்.[21] ஆனால் கட்டாணைப் பருமரின் 10வது யாட்சி யாண்டில் பெரும் பாணதி அரையர் ஆட்சி செய்கின்றார்[22] கட்டா ணைபருமர், முதலாம் சிவமாறன் எனில் கங்க நாட்டை இவ்விருவர் காலத்திலும் ஒரு மன்னனே ஆட்சி செய்திருக்க வெண்டும். அவ்வாறு இல்லாததினால் முதலாம்



சிவமாறன் கட்டாணைப் பருமராக இருக்க முடியாது. மேலும் சிவமாறன் காலத்தில் கங்கநாட்டை ஆண்ட மாவலி வாணராயர் தொடர்ந்து ஸ்ரீ புருஷனின் 21வது ஆட்சி ஆண்டு நடுகல்லில் வருவதைக் கொண்டும், மேற்படி கருத்தை உறுதி செய்யலாம்[23]. மாவலி வாணராயரின் முதலில் முதலாம் சிவமாறன் காலத்தில் கங்க நாட்டை ஆண்டான் பின்பு இவனுக்குப் பின் வந்த கட்டாணைபருமரின் காலத்தில், மாவலியை அகற்றி விட்டு பெரும்பாணதி அரையரை கங்கநாட்டு ஆட்சியில் அமர்த்தினான். பின்பு இப்பெரும்பாணதி அரையன் ஸ்ரீபுருஷனின் 10வது ஆட்சி ஆண்டிலும் தொடர்ந்து ஆட்சி புரிந்தான், பின்பு என்ன காரணத்தினாலோ முதலாம் சிவமாறன் காலத்தில் கங்க நாட்டை ஆண்ட மாவலி வாணராயரே ஸ்ரீபுருஷனின் 21 வது ஆட்சி ஆண்டில் கங்க நாட்டை அளும்படி செய்துள்ளான்.

கட்டாணை பருமர், முதலாம் சிவமாறனோ, ஸ்ரீ புருஷனோ அல்லது இரண்டாம் சிவமாறனோ இல்லையென்றால் இக் கட்டாணைபருமர் என்பவர் யார்? என்பதை அறிய வேண்டும் கட்டாணைபருமர் என்ற பெயர் இயற்பெயராகவே இருத்தல் வேண்டும். இவன் பெயராலேயே அமைந்த ஊரே இன்றைய "காட்டரசம பட்டியாகும்"[24] இவன் முதலாம் சிவமாறனின் மகனாக இருக்கலாம். இவ்வாறு முடிவு செய்வதற்கு காரணம் முதலாம் சிவமாறனின் காலத்தில் புறமலை நாட்டை ஆட்சி செய்கின்ற கந்த வாண்ணதி அரைசரே, தன்னுடைய தள்ளாத வயதிலும் கட்டாணைபருமரின் காலத்திலும் ஆள்வதை காணும் பொழுது, கட்டாணைபருமர் முதலாம் சிவமாறனின் மகனாகத்தான் இருக்க வேண்டும் முதலாம் சிவமாறனின் பேரனான ஸ்ரீ புருஷன், கட்டாணைபருமரின் மகனாகவோ அல்லது

சமகாலத்து மன்னனாகவோ இருக்கலாம், இக் கட்டாணைப் பருமரின் காலம் கி பி 720 முதல் கி பி 770 வரை ஆகும்.

**அடிக்குறிப்புகள்**

1. கட்டாணைபருமரின் நடுகற்கள், ராமகிருஷ்ணம்பதி, கைலாவரம், படுத்தான் கொட்டாய் — தலா ஒரு நடு கல்லும், மற்றும் சந்தூரில் 5 நடுகற்களும் இது வரையில் கண்டறியப்பெற்றுள்ளன.
2. South Indian Studies — Ed. Dr. R. Nagaswamy, First edition — 1978 Page 85.
3. கொங்கு — அறிவியல் வரலாற்று திங்களிதழ் மூன்றாம் தொகுதி — 1973 ஜூன், புலவர் செ இராசு. பக்கம் 115
4. South Indian Studies — Page 85.
5. "Hero Stones Inscription from Dharumapuri District" — Paper read at the South Indian history Congress, Madurai 1980. — By Dr. M.D. Sampath — Page 4.
6. தருமபுரி கல்வெட்டுகள் (முதல் தொகுதி) பொறுப்பாசிரியர் இரா. நாகசாமி, தமிழ்நாடு தொல் பொருள் ஆய்வுத்துறை, சென்னை 1975. பக்கம் — 21, 22 கல்வெட்டு தொடர் எண் 1974/67.
7. தருமபுரி கல்வெட்டுகள் முதல் தொகுதி — முன்னுரை.
8. தருமபுரி கல்வெட்டுகள் — பொறுப்பாசிரியர் இரா. நாகசாமி. (முதல் தொகுதி) பக்கம் 7.
9. Ep. Carnatica Vol III - Institute of Karnataka Studies, University of Mysore 1974. Introduction
10. Ep. Carnatica Vol III - Naluru Gu- 88. Introduction -

South Indian Studies -- P, 85.

11. Ep. Carnatica Vol V. Introduction

12. வ.ஆ. மாவட்டத்திலுள்ள சொரகொளகத்தூரில் உள்ள ஒரு நடுகல்.

13. இந்நடுகல் தருமபுரி வட்டத்திலுள்ள இண்டூர் கிராமத்தில் உள்ளது.

14. தருமபுரி கல்வெட்டுகள் முதல் தொகுதி, 1975 பக்கம் 75. தொடர் எண் 1972/17.

15. தருமபுரி கல்வெட்டுகள் — பக்கம் 96, 1972/41.

16. "A history of South India" — Fourth Edition Nilakanta Sastri — Page 156.

17. மேற்படி 5 நடுகற்களும் தருமபுரி மாவட்டத்திலுள்ள சந்தூரில் கண்டறியப்பெற்றவை ஆகும்.

18. தருமபுரி கல்வெட்டுகள் முதல் தொகுதி, 1979, பக்கம் 26. தொடர் எண் 1973/5.

19. தருமபுரி கல்வெட்டுகள், முதல் தொகுதி, 1975, பக்கம் 62, தொடர் எண் 1974/74

20 தருமபுரி கல்வெட்டுகள், முதல் தொகுதி, 1975, பக்கம் 47, தொடர் எண் 1973/18.

21. தருமபுரி கல்வெட்டுகள் முதல் தொகுதி, 1975, பக்கம் 75, தொடர் எண் 1972/16.

22 தருமபுரி கல்வெட்டுகள் — முதல் தொகுதி, 1976, பக்கம் 96, தொடர் எண் 1971/41

23. தருமபுரி கல்வெட்டுகள் பக்கம் 75.

24. காட்டரசம் பட்டி — தருமபுரி மாவட்டத்தில் உள்ள ஒரு கிராமம் ஆகும் கட்டாணைபருமரின் பெயராலேயே உருவாக்கப்பட்ட ஒரு கிராமம். "கட்டி அரசின் பட்டியே" — காட்டரசம்பட்டியாக மாறியதாகலாம்.

# கோட்டாற்றுச் சிற்பிகள்

பெ. கௌதமபுத்திரன், எம். ஏ,
பி. எல். ஐ எஸ்
நாகர்கோவில்

கோட்டாறு என்ற ஊர்ப்பகுதி கன்னியாகுமரி மாவட்டத்தில் நாகர்கோயிலுக்கு அருகில் அமைந்துள்ள பகுதியாகும். இவ்வூர் வரலாற்றில் மிகச் சிறந்த இடத்தைப் பெற்று வந்திருக்கின்றது முற்காலப் பாண்டியர், சோழர், சேரர் கல்வெட்டுக்களில் இவ்வூர் இடம் பெற்றிருக்கின்றது. மும்முடிச் சோழபுரம்[1] மும்முடிச் சோழநல்லூர்[2] சோழ கேரளபுரம்[3] என்று இவ்வூருக்குப் பல பெயர்கள் இருந்திருக்கின்றன. இது சமயம், அரசியல் ஆகியவற்றில் குறிப்பிடத்தக்க இடத்தைப்பெற்று வந்திருப்பதை சோழபுரம், கோட்டாறு, நாகர் கோயில் முதலிய இடங்களில் காணப்படும் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.

இவ்வூரில் சமண சமயத்தைச் சார்ந்த முனிவர்கள் முற்காலப் பாண்டியர் காலத்தில் வாழ்ந்திருக்கின்றனர்.[4] சோழர்களது படைத்தலைவர்கள் முகாமிட்டுத் தங்கி காவல் பணி புரிந்திருக்கின்றனர்.[5] இதே போன்று இவ்வூரில் கல்வெட்டு பொறிக்கும் கற்சிற்பிகளும் கோயில் திருப்பணி செய்யும் சிற்பிகளும் கூடிவாழ்ந்திருப்பதை கி. பி. 16-ம் நூற்றாண்டு கல்வெட்டுக்கள் சில தெரிவிக்கின்றன.[6] இச்சிற்பிகள் கோட்டாற்றை மையமாகக் கொண்டு அங்கு நிலையாகத் தங்கி கன்னியாகுமரி மாவட்டத்தின் பல பகுதிகளுக்கும் சென்று கோயில்களில் கல்வெட்டுப் பொறிக்கும் பணியிலும், கோயில்கள் கட்டும் திருப்பணியிலும் ஈடுபட்டிருக்

கின்றனர். இச் சிற்பிகளின் அருமை அறிந்தவர்கள் அவர் களை அங்கிருந்து அழைத்துச் சென்று தங்களுக்கு வேண்டிய பணிகளை முடித்து அதற்காக அவர்களுக்கு சிறப்புக்கள் செய்திருக்கின்றனர். கி பி 16-ம் நூற்றாண்டில் கோட்டாற் றில் வாழ்ந்த சிற்பிகளில் தலை சிறந்தவர்களாகக் கொம் மண்டை நயினான்முதலி என்பவனும் தம்புரான் தட்டி என்பவனும் விளங்கியிருக்கின்றனர். கோட்டாற்றில் வாழ்ந்த இச்சிற்பாச்சாரியார்களிருவருக்கும் சிற்பப்புரந்தரன் என்ற பட்டப் பெயர் இருந்திருக்கின்றது.[7]

## கொம்மண்டை நயினான் முதலி

இவன் பரக்கை மதுசூதனப் பெருமாள் கோயில் கல் வெட்டு ஒன்றில் குறிபபிடப்படுகின்றான். இதன் காலம கி. பி. 1544 ஆகும். இக்கோயிலில் இவன் செய்த திருப் பணிக்குப் பரிசாக அக்கோயில் ஸ்ரீகாரியம் செய்கின்றவர்கள் கிழார்மங்கலத்தில் காராண்மைக் காணியாக காணி முக்காணி காலே அரைக்காணி அளவுள்ள நிலத்தை அளித்திருக்கின் றனர். இது அவன் செய்த பணிக்காக 'சிற்பவிருத்தி' என்ற பெயரில் அளிக்கப்பட்டிருக்கிறது மேலும் இக்கோயிலில் இவனுக்கு திருநாள் தோறும் படியும் பரிவட்டமும் கொடுத்து மரியாதை செய்திருக்கின்றனர் [8] கல்வெட்டில் இச்சிற்பி கோட்டாறான மும்முடிச்சோழபுரத்து இருக்கும் சிப்பிகளில் கொம்மண்டை நயினான் முதலியான சிற்பப்புரந்தரன் என்று குறிப்பிடப்படுகின்றான முதலி என்ற பெயர் இவனது குழு வில் இவனது தலைமைத் தன்மையும் சிறப்பு கருதியும் அளிக்கப்பெற்ற பெயராக இருக்கலாம். கல்லில் தொழில் செய்வதில் வல்லவனாக விளங்கியமையால் சிற்பப்புரந்தரன் என்ற பெயரும் பெற்றிருக்கின்றான்

**தம்பிரான் குட்டி :**

இச் சிற்பியும் கொம்மண்டை நயினானைப் போன்றே முதலி என்ற பெயரும் சிற்பப்புரந்தரன் என்ற பெயரும் பெற்று விளங்கியிருக்கின்றான். கி. பி. 1558 இல் ஆதித்ய வர்மனின் ஆணை ஒன்றினை கரிய மாணிக்கபுரத்தில் கல் வெட்டாக பொறித்திருப்பதை அங்குள்ள கல்வெட்டொன்று தெரிவிக்கின்றது.[9] அக்கல்வெட்டில் இவன் "கோட்டாறான மும்முடிச்சோழபுரத்தில் இருக்கும் சிற்பாச்சாரிமாரில் முதலி யான தம்பிரான்குட்டி சிற்பப்புரந்தரன்" என்று குறிப்பிடப் படுகின்றான்.

மேலே கண்ட செய்திகளைக் கொண்டு கோட்டாறு கி.பி 16 ம் நூற்றாண்டில் கற்சிற்பிகள் பலர் குழுவாக சேர்ந்து வாழ்ந்த இடமாக விளங்கியுள்ளது. இதனை மைய மாகக் கொண்டு பல பகுதிகளுக்கு சென்று பல பணிகளை இச்சிற்பிகள் ஆற்றியிருக்கின்றனர் என்று அறிய முடிகிறது

**அடிக்குறிப்புகள் :**

1. T. A. S. Vol. VI p. 114
2, Ibid p 21
3. Ibid
4. S I I Vol. V கழுகுமலைக் கல்வெட்டுகள்
5. K. A. Nilakantasastri., The colas, University of Madras, Madras-p. 456.
6. T. A. S. Vol. VI p. 114.
7. நடன. காசிநாதன் கன்னியாகுமரி மாவட்ட கல்வெட்டு கள் முதல் தொகுதி தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை கல்வெட்டு எண் : 1968/29A, T.A.S. Vol. VI p. 114.
8. கன்னியாகுமரி மாவட்ட கல்வெட்டுக்கள்-முதல் தொகுதி எண் : 1968/29-A
9. கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுகள் - மூன்றாம் தொகுதி கல்வெட்டு எண் : 1968/291.

# தாவளம்

தி. சுப்பிரமணியன் எம். ஏ.
கோயம்புத்தூர்.

போக்குவரத்து வசதிகள் அதிகமில்லாத பண்டைக் காலத்தில் வியாபாரிகளும், பயணிகளும், மக்களும் கால்நடையாகவும், வண்டிகளின் உதவியினாலும் பயணம் செய்துள்ளனர். இத்தகைய வழிப்பயணத்தை மேற்கொள்கின்றவர்கள் இரவு நேரம் வந்துவிட்டாலோ பயணத்தில் களைப்பு ஏற்பட்டாலோ சில குறிப்பிட்ட இடங்களில் தங்கிச் சென்றுள்ளனர். இவ்வாறு தங்கிச் சென்ற இடங்களே பிற்காலத்தில் தாவளங்களாக மாறியிருக்க வேண்டும்.

**சங்ககாலத்தில் தாவளம்**

சங்ககாலத்தைச் சார்ந்த இலக்கியங்களில் பெருவழிகளைப் பற்றிய செய்திகள் பல இடங்களில் வருகின்றன. எனினும் இந்தப் பெருவழிகள் நல்லமுறையில் அமைக்கப்பட்ட வழிகளாகக் குறிப்புக்கள் இல்லை. இத்தகைய பெருவழிகளில் தாவளங்கள் இருந்ததாகச் சங்க இலக்கியங்கள் கூறுவதாகத் தெரியவில்லை. ஆனால் வழிப்பயணம் மேற்கொள்கின்ற வணிகர்களும் மக்களும் சில இடங்களில் தங்கிச் சென்றதாகச் செய்திகள் கிடைக்கின்றன. அகநானூற்றில்[1]

"உமண் சாத்து இறந்து ஒழிகல் அடுப்பில்
நோன்சிலை மழவர் ஊன் புழுக்கு அயரும்"

என்று வருகின்றது உப்பு வணிகர் கூட்டம் சமைத்து உண்டு விட்டுப் போன இடத்தில் கல் வைத்து அமைக்கப்பட்ட

அடுப்பில், வலிய வில்லினை உடைய மறவர்கள் ஊனை வேகவைத்து உண்டனர் என்று தெரிகின்றது.

ஆகவே இந்த இடத்தில் ஒரு கூட்டத்திற்குப்பின் ஒரு கூட்டம் தங்கி, சமைத்து உண்டு சென்றிருக்கின்றனர் என்பது விளங்குகிறது. இதை மற்றும் ஒரு அகநானூற்றுப் பாடல் உறுதிப்படுத்துகின்றது[2] உப்பு விற்கின்ற வணிகர்கள் ஊர் ஊராகச் சென்று வியாபாரம் செய்துள்ளனர். இத்தகைய உமணர் கூட்டங்களில் பெண்களே வியாபாரத்தை மேற்கொண்டு உள்ளனர் இவர்கள் நெல்லுக்கு உப்பை விற்றுக் கொண்டு வழியில் உள்ள ஊர்களிலே தங்கிச் சென்றுள்ளனர் என்பதை அகநானூற்றுப் பாடலில் இருந்து அறியலாம்[3]

பெரும்பாணாற்றுப் படையில், பெருவழியில் எப்பொழுதும் கத்தியை கையில் வைத்துக கொண்டு புல் வேயப்பட்ட குடிசைகளில் இருந்து கொண்டு, சுங்கம் வசூலித்ததாகத் தெரிகின்றது.[4] இத்தகைய பாதுகாவல் நிறைந்த இடங்களில் வணிகர்களும் வழிப்போக்கர்களும் தங்கி சென்றிருக்க வாய்ப்புக்கள் உள்ளன. மதுரைக் காஞ்சியில் காட்டில் தழைகளால் வேயப்பட்ட குடிசைகளில் மானதோலைப் படுக்கையாகப் பயன் படுத்திக் கொண்டும், தழை மாலையை அணிந்து கொண்டும் கடிய சொல்லைப் பேசுகின்ற வீரர்கள் கையில் வில்லை உடையவர்களாகவும் ஆறலைக் கள்வர்களை எதிர்த்து வழிப் போக்கர்களுக்குக் காவலாக வழிகளில் இருந்ததாக கூறுகின்றது.[5] எனவே சங்க காலத்தில் தாவளம் என்று தனி இடமோ, பகுதியோ இருந்ததாகத் தெரியவில்லை. ஆகவே இந்த காலத்தில் சுங்கம் வசூலிக்கப்பட்ட இடங்களையே, தங்குமிடங்களாகக் கொண்டிருக்க வேண்டும் என்று கருதலாம்.

வடஇந்தியாவில் வேதகாலத்தில் வழிப்பயணிகள் இளைப் பாறுவதற்காகவும், உணவுஉண்ணுவதற்கும் பெருவழிகளின்

அருகில் கட்டடங்கள் கட்டப்பட்டிருந்தன. ரிக் வேதம் இதை 'பிரதம்' அல்லது 'பிரபத்' என்று கூறுகின்றது. வழிப் பயணத்தை மேற்கொள்கின்றவர்கள் இளைப்பாறுவதற்கு தங்கும் கட்டடங்கள் கட்டப்பட்டிருந்தது என்றும் அதில ஆண்களுக்கும், பெண்களுக்கும் தனித்தனி இடங்கள் இருந்த தாக 'பிருகத்கதா' கல்பசூத்திர பாஷ்யத்தில் கூறுகின்றது [7] மகத நாட்டில் உள்ளவர்களும் அங்க நாட்டில் உள்ள வர்களும் ஒரு நாட்டில் இருந்து மற்ற நாட்டிற்கு செல்லும் போது எல்லைகளில் உள்ள சத்திரங்களில் தங்கி சென்றதாக ஜாதகக் கதைகள் கூறுகின்றன. இத்தகைய கட்டடங்கள் 'சராய்கள்' என்று அழைக்கப்பட்டன.[8] இந்த சராய்களே பின்னர் சாவடிகள் என்று மருவி வழங்கி வந்துள்ளன.

பிருகத்கதா சுலோக சங்கிரஹத்தில் சாறுதாசன் என்பவ னுடைய கதை கூறப்படுகின்றது.[9] சாறுதாசன் என்பவன் சம்பா நாட்டைச் சார்ந்த வணிகனின் மகன். கடல் வியாபாரம் செய்யும் பொருட்டு கப்பலில் சென்ற போது கப்பல் மூழ்கி யதால் நீந்திக்கரை சேர்ந்தான். அங்கிருந்து சிறிது தூரம் நடந்து சென்று ஒரு ஊரை அடைந்தான். அது பாண்டிய நாடு என்றும் அங்கிருந்து பாண்டிய நாட்டுத் தலைநகர் ஒரு யோசனை தூரம் என்றும் அறிந்து மதுரைக்குச் சென்ற போது வழியில் ஒரு சத்திரத்தைக் கண்டான் அந்தச் சத் திரத்தில் சில அந்நிய நாட்டவர்கள் நாவிதனிடம் சவரம் செய்து கொண்டு இருந்தார்கள். சிலர் உடலின் மேல் எண்ணெயைத் தடவிக்கொண்டு 'மாலிஷ்' செய்து கொண்டி ருந்தவர் என்றும் கூறுகின்றது. அன்று இரவு சாறுதாசன் அந்தச் சத்திரத்தில் தங்கி மறுநாள் மதுரைக்குச் சென்றான். ஆகவே இத்தகைய சத்திரங்களில் வழிப்போக்கர்களுக்குத் தேவையான வசதிகள் செய்து கொடுக்கப்பட்டுள்ளன என்பதையும் அறியலாம். இந்த நூல் கி.பி. 6ம் நூற்றாண்

டைச் சேர்ந்ததாகக் கருதப்படுகின்ற காரணத்தால் தமிழ் நாட்டில் தங்குமிடம் (தாவளம்) பற்றிய குறிப்பு தருகின்ற முதல் நூல் இதுவே ஆகும்.

ஒட்டக்கூத்தரின் உத்தர ராமாயணத்தில் தாவளம் பற்றிய செய்தி காணப்படுகின்றது இதில் "மன்னர்களுக்கெல்லாம் தாவளம் சமைத்து" என்று வருகின்றது [10] மன்னர்களுக்கு தாவளம் சமைப்பதைப் பற்றிக் கூறுகின்ற காரணத்தால், வியாபாரிகளுக்கும் யாத்திரீகர்களுக்கும் இதற்கு முன்பே தாவளங்கள் இருந்திருக்க வேண்டும் என்று கருதமுடிகின்றது. ஆனால் இதுபோன்ற தாவளங்கள் இருந்ததைப் போதுமான தடயங்கள் கிடைக்காத காரணத்தால் உறுதிப்படுத்த முடியவில்லை.

தாவளம் என்ற சொல் 'தாழ்ந்து' என்ற சொல்லில் இருந்து வந்ததாகக் கூறப்படுகின்றது [11] 'தாழ்ந்து' என்றால் இளைப்பாறி என்று பொருள் கொள்ளப்படுகின்றது. ஆகவே தாழ்ந்து (இளைப்பாறி) சென்ற இடம் 'தாவளம்' என்ற காரணப்பெயராக வந்திருக்கலாம். சங்க இலக்கியங்களில் தங்கிச் செல்வதை குறிப்பிடும் போது பொதுவாகத் 'தாழ்ந்து' என்ற சொல்லையே பயன்படுத்தியுள்ளனர்.[12]

**சந்தை**

கென்னத் ஹால் என்பவர் தாவளம் பற்றி கூறும்பொழுது தாவளமும் சந்தையும் ஒன்று என்று குறிப்பிடுகின்றார்.[13] நாடோடிகளாகத் திரிந்து சென்று வியாபாரம் செய்த வணிகர்கள் ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஒன்றாகச் சேர்ந்துள்ளனர். இந்த நேரத்தில் வியாபாரமும் இங்கு நடைபெற்றுள்ளது.

இது மட்டுமின்றி இந்த பகுதியைச் சேர்ந்த பொருட்களும் இங்கு இடம் பெற்றிருக்க வேண்டும். இந்தச் சந்தைகள் பகல் நேரத்தில் கூடி இரவு நேரத்தில் பிரிந்து சென்றிருக்க வேண்டும். ஏனெனில் இந்த இடங்களில் பொருள்களை பாதுகாக்க எந்த வகையான வீரர்களும் இருந்ததாகத் தெரிய வில்லை. இத்தகைய நிலையில் வியாபாரிகள் தங்கள் பொருட் களை வைத்துக்கொண்டு இரவு நேரங்களில் தங்கி இருக்க வாய்ப்பு இல்லை. சந்தைகள் பெரும்பாலும் பரந்தவெளியில் நடைபெற்றிருக்க வேண்டும். எனவேதான் இன்றும் சந்தை கூடுகின்ற இடத்தைக் கூறும்போது "சந்தைவெளி" என்று கூறுகின்றனர்.[14]

### கடிகைத் தாவளம்

பிரான்மலைக் கல்வெட்டிலும் பெரியபாளையம் கல் வெட்டிலும் "64 கடிகைத் தாவளம்" என்று வருகின்றது. வடமொழியில் உள்ள 'கடிகாஸ்தானம்' என்பதே தமிழில் "கடிகைத் தாவளம்" என்று எழுதப்பட்டிருப்பதாகக் கருதப் படுகின்றது.[15] "ஸ்தானம் என்ற சொல் மனுவினுடைய நூலில் வருகின்றது. இதற்கு உரை எழுதிய 'குலுகபட்ட' என்பவர் இதற்கு மூன்று பொருள் தருகின்றார் அவை படை, வணிகர்கள் வாழ்ந்த நகரம், ராஸ்டிரம் ஆகியவைகள் ஆகும்.[16] பல்லவர்களின் செப்பேடுகளில் காஞ்சியில் கடிகை இருந்ததாகவும் [University] இதில் கடம்பவம்சத்தைச் சேர்ந்த மயூரசர்மன் என்ற அரசன் வந்து கல்வி கற்றுச் சென்றதாகவும் கூறப்படுகின்றது இந்த செப்பேடுகளில் கடிகை என்று தனி யாக வருகின்றது.[17] இவற்றில் தாவளம் சேர்ந்து வரவில்லை. எனவே இந்த கடிகை வேறு, கடிகைத் தாவளம் என்பது வேறு என்பது தெளிவாகின்றது கடதா சரிஸ்சாகம் என்ற நூல் தந்த வம்சத்து அரசன் கோசல நாட்டின் மேல் படை எடுத்து சென்றதை கூறுகின்றது. அந்த படைகள் தங்கி இருந்த இடத்தை "கடகா" என்று கூறுகின்றது.[18] ஆகவே

படைகள் தங்குமிடமான கடகா என்பது பின் கடிகை என்று மருவி வருவதற்கு வாய்ப்புகள் உள்ளன. வணிகர் பாதுகாப்பிற்காக வீரர்களை வைத்து இருந்தனர். இத்தகைய வீரர்கள் தங்கி இருந்த இடமாக இவற்றைக் கொள்ளலாம்.

64கடிகைத் தாவளம் என்று கல்வெட்டில் கடிகையும் தாவளமும் சேர்ந்து வருகின்றன. ஆகவே கடிகை என்ற வீரர்கள் தங்கி இருந்த இடமும், வணிகர்கள் தங்கிய தாவளமும் சேர்ந்து கடிகைத் தாவளமாக வருவதற்கு வாய்ப்புள்ளன. இதில் வருகின்ற 64 என்பதை மரபுச்சொல்லாகக் கொள்ளலாம். சங்க இலக்கியங்களில் 'கடி' என்பதற்கு 'காவல்' என்று பொருள் கூறப்படுகின்றது.[19] பிற்காலக் கல்வெட்டுகளில் காவல் பொருந்திய தாவளம் என்று குறிப்பிடுவதற்காக ''கடிகைத் தாவளம்'' என்று வழங்கியும் இருக்கலாம்.

### வணிகர்களும் தாவளமும்

பிரான்மலைக் கல்வெட்டில் 'தாவளத்திலிருந்து தன்மை வளர்த்த செட்டியும் செட்டிவீரப் புத்திரர்களும்' என்று வருகின்றது இதைப் போன்று பெரியபாளையம் கல்வெட்டில் தாவளத்திருந்து குளமை வளர்த்த செட்டியும் செட்டி வீரபுத்திரர்களும்' என்றும் பேரூர் கல்வெட்டில் 'தாவளத்திருந்த வியாபாரி-கோதை குமரனுக்கும்' என்றும் வருகின்றது.[20] இத்தகைய தாவளங்களில் மற்றவர்கள் தங்கினார்களா என்பது தெரியவில்லை. ஆனால் வணிகர்கள் தங்கி உள்ளனர் என்பது தெளிவாகப் புலப்படுகின்றது. செட்டிகள் இத்தகைய தாவளங்களில் இருந்து 'தன்மை' 'குளமை' வளர்த்தனர் என்று கல்வெட்டுகள் கூறுகின்றன. தன்மை என்ற சொல்லுக்கு 'முறைப்படுத்துதல்' என்று பொருள் உள்ளது. குளமை வளர்த்து என்பதும் வாணிபம் ஆகிய குலத்தொழிலை

வளர்த்தனர் என்று பொருள் கொள்ளலாம். எனவே வியாபாரிகள் இங்கு தங்கி வாணிபத்தைப் பெருக்கியதுடன் குலப்பெருமையையும் வளர்த்துள்ளதாகத் தெரிகின்றது. அரசர்கள் மற்றுள்ளவர்களுக்கு தனியாகத் தாவளம் இருந்ததாகக் கல்வெட்டு சான்றுகள் இல்லை. ஆகவே தாவளம் இப்பகுதியில் வணிகர்களுக்காக ஏற்படுத்தப்பட்ட ஒன்று என்று முடிவு கூறலாம்.

### தாவளங்கள்

அதிகப்படியான தாவளங்கள் மரத்தின் பெயரை முதலில் கொண்டு வருகின்றன உதாரணமாக வேம்படித் தாவளம் என்பது வேப்பமரத்தையும், நாவற்தாவளம் என்பது நாவல் மரத்தையும், மஞ்சுபுளித்தாவளம் என்பது புளியமரத்தையும் பெயராகத் தாங்கி வருகின்றன. ஆகவே பொதுவாகத் தாவளங்கள் ஏற்பட்ட இடத்தில் எந்த மரம் அதிகமாக இருந்ததோ அந்த மரத்தின் பெயரிலே அந்தத் தாவளம் வழங்கப்பட்டிருக்கலாம் தர்மபுரி மாவட்டத்தில் கண்டுபிடிக்கப்பட்ட மைல் கல்லில் நாவற்தாவளத்துக்குத் தூரம் கூறப்பட்டு இருக்கின்றது. இநத நாவற் தாவளம் முதலில் தங்குமிடமாக இருந்து பின் ஊராக மாறியிருக்க வேண்டும். திருச்சி பகுதியில் பட்டரைத் தாவளம் என்ற ஒன்று கல்வெட்டில் வருகின்றது. பட்டரை என்பது பலவகையான பொருட்களை வைத்துக் கொண்டு இருக்கும் இடமாகப் பொருள் கொள்ளலாம்.[21] இது மட்டுமின்றி கொங்கு நாட்டில் வண்டித் தாவளம், தாவளம், வேம்படித்தாவளம் ஆகிய ஊர்கள் இன்றும் உள்ளன. இன்றும் கேரளாவில் உள்ள திருவனந்தபுரம் விமான நிலையத்தைக் குறிப்பிடும்போது "திருவந்தரம் தாவளம்" என்று கூறுகின்றனர்.

தாவளங்கள் எப்பொழுது தோன்றின என்று கூறுவதற்கு போதுமான சான்றுகள் கிடைக்கவில்லை. கல்வெட்டில் வரு

கின்ற தாவளங்கள் கி.பி 10ஆம் நூற்றாண்டுக்குப் பின்னரே காணப்படுகின்றன. இதைக் கருத்தில் கொண்டு நோக்கும் போது இதற்கு முன் தாவளமாகப் பயன்படுத்தப்பட்ட இடம் பகுதி எதுவாக இருக்கும் என்று கருத வேண்டியுள்ளது பெரும் வழிகளில் சுங்கம் வசூலிப்பதற்காக வீரர்கள வில்லேந்திய கையுடன் நின்றும், வழிப்போக்கர்களுக்கு உதவியும் உள்ளனர். கள்ளர்களுக்கு அஞ்சிய வணிகர்கள் இத்தகைய வீரர்கள் இருந்த சுங்கம் வசூலித்த இடத்தில் தங்கி இருக்க வேண்டும் பிற்காலத்தில் வணிகர்களுடன் அதிகம் சேர்ந்து வருகின்ற தாவளங்களில் வணிகர் மட்டும் தங்கியிருப்பதாகத் தெரிகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. அகநானூறு பாட்டு : 119 8,9
2. அகநானூறு : 159 வ : 1—4
3. அகநானூறு : 390 வ : 4—10
4. பெரும்பாணாற்றுப் படை வரி ; 80—89
5. மதுரைக்காஞ்சி வரி : 209
6. மோதிசந்திரா, இந்திய வணிகநெறிகள் — ப : 247 249
7. Ibid ப : 300
8. Ibid ப : 114
9. Ibid ப : 247—249
10. உத்தரராமாயணம், அசுவமேதை : 23.
11. Tamil Lexicon, vol. III P : 1852
12. அகநானூறு ப : 23
13. Kenneth R. Hall, Trade and state craft in the age of the colas. P : 145.
14. Tamil Lexicon vol. III P : 1273

15. K.V. Subramanya Aiyar, Largest provincial organisations in Ancient India, P : 65
16. Ibid : P : 63
17. The Classical Age. Vol. III P :271
18. K.A. Nilakanda Sastri, Age of the Nandas and Mauryas. P : 17
19. அகநானூறு பா.60 : வ : 15
20. நண்பர் ஆர். பூங்குன்றன் அவர்கள் கல்வெட்டுக் குறிப்பேடு
21. கு தாமோதரன். எம்.ஏ அவர்களின் வெளியிடப்பெறாத கட்டுரை.

---

கருவாடு

700 ஆண்டுகளுக்கு முன் கருவாட்டிற்குச் சுங்க மதிப் பென்ன?

கடலூர் வட்டம் தீர்த்தங்கரை கல்வெட்டு இதைத் தெரிவிக்கிறது. வீரபாண்டியனுடைய கல்வெட்டு அது. கருவாட்டிற்கு வசூலித்த கடற்கரைச் சுங்கம் மிளகை விட இரண்டு மடங்கு இருந்தது.

"...... கடற்கரையில் கோயில்ங்காடியார் வந்து கொள்ளும் பச்சைமிளகும் கூடைக்கும் ஒன்றாக வந்த காசு பெறவும் கருவாட்டு தலைச்சுமைக்கு இரண்டாக வந்த காசு பெறவும் கருவாட்டு எருத்து பொதி ஒன்றுக்கு நாலாக வந்த காசு பெறவும் ......"

---

# திருப்பூப்பலகை

சொ. சந்திரவாணன். எம், ஏ, டி. இ. ஏ
கொற்கை.

பன்னெடுங் காலமாக மலர்களின் அழகைக்கண்டு இரசித்த மக்கள் தாங்கள் சூடி மகிழ்ந்ததைப் போலவே, கோயிலில் குடிகொண்ட இறைவனுக்கும் சூட்டி மகிழ்ந்தனர். அவ்வாறு சூட்டி வழிபட வேண்டி பல்வேறு பூ நிவந்தங்களை நல்கினர் நந்தவனங்கள் என்ற பூஞ்சோலைகளில் பல்வேறு மலர்ச்செடிகளைப் பயிரிட்டு, அதனைச் சேகரித்துக் கோயிலில் அமைந்த திருப்பூ மண்டபத்தே சேர்த்தனர். அவ்வாறு சேர்த்த மலர்களைக் கோயில் பணி யாளர்களே தொடுக்கவும் செய்தனர். பூத்தொடுக்கப் பயன் படுத்தப்பட்ட கற்பலகையை திருப்பூப்பலகை என்ற பெயரில் அழைத்தனர் அத்தகு திருப்பூப்பலகைகளில் ஒருபூப்பலகை யைச் சேரன்மகாதேவியில் காண நேர்ந்தது அவற்றைப் பற்றிய செய்திகள் சேகரிக்க முனைந்தபோது பல இடங்களி லும் கல்வெட்டுகளுடனும், கல்வெட்டுகள் இல்லாமலும் பூப் பலகைகள் இருப்பது தெரியவந்தது இது தொடர்பாக கல் வெட்டுகள், இலக்கியங்களில் செய்திகள் திரட்ட முனைந்த போது ஒருதனி நூல் அளவிற்குப் பூநிவந்தங்கள், பணியா ளர்கள், இறைவனுக்கு சூட்டப் பயன்படுத்தப்பட்ட மலர்கள் பற்றியும் நிறையச் செய்திகள் கிடைத்தன. ஆனாலும் இங்கு பூப்பலகைகள் பற்றியும் அது தொடர்புடைய செய்திகள் மட்டுமே தரப்படுகின்றன.

## பூப்பலகைகளும் அமைப்பும்

கோயில் நந்தவனங்களிலிருந்து பறித்தெடுக்கப்பட்ட பூக்கள் அதன் தன்மைகளுக்கேற்ற வகையில் அளந்தும் எண்

ணிக்கையிட்டும் சேகரித்தனர். அவற்றைக் கோயிலின் ஒரு பகுதியாக அமைக்கப்பட்ட திருப்பூ மண்டபத்தே சேர்த்து வந்ததைக் கல்வெட்டுகள் பல நமக்குக் கூறுகின்றன. அத் திருப்பூ மண்டபத்தே சேர்த்த மலர்களை மாலையாகத் தொடுக்கவேண்டி அம்மண்டபத்தேயுள்ள கற்பலகைகளில் வைத்துக் கட்டிவந்தனர். அப்பலகைகளைத் திருப்பூப்பலகை என்ற பெயரில் அழைத்துவந்தனர்.

பூப்பலகைகள் நன்கு வழவழப்பாக அமைந்த பலகைக் கல்லால் அமைக்கப்பட்டு சிற்ப வேலைப்பாடுகளுடன் விளங்குகின்றன. இதுவரை கண்டறிந்த பூப்பலகைகள் சுமார் 6' நீளமும் 3' முதல் 3½' வரை அகலமும் 9'' முதல் 12'' வரை கனத்திலும் அமைக்கப்பட்டு சுமார் 3' உயரமுள்ள தூண்களின் மீது அமைந்து காணப்படுகின்றன இத்தூண்கள் சில இடங்களில் சிம்மத்தூண்களாகவும் சில இடங்களில் வெறும் தூண்களாகவும் கலை உணர்வுகளோடும் அமைந்துள்ளன.

இப் பலகையிலேயோ அன்றித் தனித்தோ மலர் கட்டும் நார் நனைப்பதற்குத் தேவையான நீர் நிரப்பச் சிறு கற்குழிகளும் அமைந்து காணப்படுகின்றன. மேலும் இப் பலகையைச் சுற்றி நாற்புறத்திலும் பூக்கட்டும் பணியாளர்கள் அமர்ந்து பூக் கட்டுவதற்கு ஏற்ற கல் இருக்கைகளும் இருக்கக் காணலாம்.

### கல்வெட்டுகளுடன் கூடிய பூப்பலகைகள்

பெரும்பாலான பூப்பலகைகள் யார்யாரால் கொடுக்கப்பட்டன என்ற செய்திகள் தாங்கிய கல்வெட்டுகளும் கிடைக்கின்றன. இவ்வாய்வு தொடங்கி கல்வெட்டுகளுடன்

கிடைத்துள்ள பூப்பலகைகள் சில இங்கே தரப்பட்டு உள்ளன இவற்றை விரிவாக ஆய்வு செய்யும்போது மேலும் மேலும் பல செய்திகள் கிடைக்கக் கூடும்.

**சேரன்மகாதேவி பூப்பலகை**

இவ்வூர் நெல்லை மாவட்டத்தில் அமைந்துள்ளது. தண்பொருணை ஆற்றின் கரையில் ஊரின் வட மேற்கில் அமைந்துள்ள 'அப்பன் கோயில்' என்ற வெங்கடாசலபதி கோயிலில் உள்ள பூப்பலகை தற்போது கருவறைக்கு முன்னர் அமைந்து காணப்படுகின்றது. இப்பலகையை பூசைப் பொருட்கள் வைக்கும் மேடையாகப் பயன்படுத்துகின்றனர்.

சிற்ப அழகுடன் இப்பலகையில் அமைந்த கல்வெட்டாவது;

"ஸ்வஸ்திஸ்ரீ அப்பனுக்கு இத்திருப் பூப்பலகை
செய்விச்சு இட்டான் திருநெல்வேலியில் திருக்காமக்
கோட்ட முடைய பிராட்டி அடியாரில் பூவின் பெருமான்
சுபமஸ்து உ" [1] — என்று காணப்படுகின்றது. திருநெல்வேலியைச் சார்ந்த பூவின் பெருமாள் என்பவன் இத்திருப் பூப்பலகையைச் செய்வித்தான். யாருக்கு? அப்பனுக்கு! இறைவன் பெயரை தற்போது அழைக்கப்படும அப்பன் கோயில் என்ற பெயரிலேயே அழைத்துள்ளதைக் காணலாம். மேலும் இப்பூவின் பெருமாள் நெல்லை காந்திமதி அம்மனின் அடியார்களில் ஒருவன் என்று அழைக்கப்படுவதையும் காணலாம். எழுத்தமைதியைக் கொண்டு காணும் போது இக்கல்வெட்டின் காலம் கி.பி. 12, 13 ம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று கூறலாம்.

**திருவாலீஸ்வரம் பூப்பலகை**

மேற்படி நெல்லை மாவட்டம் அம்பாசமுத்திரம் வட்டம் திருவாலீஸ்வரத்தில் உள்ள பூப்பலகையைச் செய்வித்தவன் பற்றிக் கூறுகையில்

"ஸ்வஸ்திஸ்ரீ இத்திருப்பூப்பலகை செய்வித்தான்
பூ ஆரியன் நாகதேவன் புருஷோத்தமன்,"[2]

என்று வரக் காணலாம். இப்பலகை தற்போ மாமரத்தடியில் உல்லாசமாக அமரும் இருக்கையாக அ... துள்ளது.

மேலும் இவ்வூரிலேயே கிடைத்த மற்றொரு பூப்பலகைக் கல்வெட்டு பற்றிப் பார்ப்போம் — [A R E. 371/1916—1917B] பாண்டிய மன்னனான மாறவர்மன் திரிபுவனச் சக்கரவத்திகளான விக்கிரம பாண்டிய தேவனின் ஏழாம் ஆட்சியாண்டு தமிழ்க் கல்வெட்டுடன் இப்பூப்பலகை காணப்படுகின்றது. 'இராஜராஜ எரிவீரப்பட்டினத்தின் நிச்சித்தக் கண்டப் பெருந் தெருவில் உள்ள அபையம் புக்கான் எனும் அதிரவீசி ஆடுவான் என்பவன் இத்திருப்பூப் பலகையைச் செய்வித்தான்' என்று காணப்படுகின்றது. ஆனால் தற்போது இந்தப் பலகை கோயிலின் மடைப்பள்ளியுள் சமைத்த உணவை பரப்பும் கல்லாக சமையல் உபயோகத்திற்காகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது இவ்விரு பூப்பலகைகளும் கி பி 12, 13,ம் நூற்றுண்டைச் சார்ந்தவையே.

## பத்தமடை பூப்பலகை

மேலும் ஒரு பூப்பலகை நெல்லை மாவட்டம் அம்பை வட்டம் பத்தமடையில் உள்ளது. இவ்வூரைப் பற்றிக் கல்வெட்டுகளில் கூறும் போது

"முள்ளி நாட்டு பிரமதேயம் சேரன் மகாதேவிச்
சதுர்வேதி மங்கலத்துக் கீழ்பிடாகை பத்தன்மடை"

என்று குறிக்கப்படுகின்றது. இப்பத்தன் மடையுள் உள்ள பூப்பலகை தரும் செய்திகளாவன:

"இத்திருப்பூ பலகை சூரிய தேவன்
அம்பலவரான குலைசேகர மூவேந்த
வேளார் தன்மம்" [3]

இப்பூப்பலகை தற்போது உற்சவர் எழுந்தருளும் முன்னர் அபிஷேகம் செய்யும் மேடையாக இருந்து வருகின்றது. எழுத்தமைதி கொண்டு காலத்தைப் பார்ப்போமானால் இதுவும் கி.பி. 12 அல்லது 13ம் நூற்றாண்டை ஒத்திருக்கக் காணலாம்.

**கொழுமம் பூப்பலகை**

கோவை மாவட்டம் கொழுமம் என்ற இடத்தில் அமைந்த பூப்பலகை தற்போது கோயில் திருச்சுற்றில் உள்ள மரத்தடியில் தரையில் கிடத்தப்பட்டுள்ளது. அதில் உள்ள கல்வெட்டாவது

"ஸ்வஸ்திஸ்ரீ ஆளுடையார் விசேசுவர
தேவரான விசையாலராயர்
இட்ட திருப்பூப் பலகை" [4] —

என்று காணப்படுகிறது. கி.பி. 13ம் நூற்றாண்டைச் சார்ந்தது

**ரத்தினகிரி பூப்பலகை**

"சுபமஸ்துஸ்ரீமத் ராசாதிராச
மகாராச ... ... ... ... ...
திம்ம நாயக்கரய்யன் குமாரர்
செவ்வப்ப நாயக்
கரய்யன் உபையமு துந்துபி
ஷு புரட்டாசி மீ" க உ " — [5]

என்று வரக்கூடிய பூப்பலகைக் கல்வெட்டு அமைந்த இடம் திருச்சி மாவட்டம் குளித்தலை வட்டம் ரத்னகிரி என்ற

ஐயர்மலை ஆகும் இஃது எழுத்தமைதியிலும், செய்தி களின் வெளிப்பாட்டிலும் நாயக்கர் காலமான கி.பி. 16ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்பது தெளிவாக அறிய முடி கின்றது.

இவையேயன்றி நெல்லை மாவட்டம் முறப்பநாடு மற்றும் நெல்லைக் கோயிலில்உள்ள பூப்பலகைகள் கல்வெட்டுகளுடன் அமைந்துள்ளன என்பது செய்திகளாக அறிய முடிந்தாலும் ஒரு சில இடர்ப்பாடுகளின் காரணமாகப் படித்தறிய முடிய வில்லை. மேலும் தொடரும் ஆய்வில் அதனை வெளிப்படுத்த முயற்சி மேற்கொள்ளப்படும். கல்வெட்டுகளே அன்றி வெறும் பூப்பலகைகளாகச் சில அறியப்பட்டன. அவைகள் அழகிய வேலைப்பாடுகளுடன் அமைந்து காணப்பட்டாலும் தற்போது வேறுவேறு உபயோகங்களுக்குப் பயன்படுவனவாக உள்ளன.

## பூத்தொடுத்தவர்கள்

இவ்வாறு பூப்பலகையில் சேகரித்து வைக்கப்பட்ட மலர் களை இறைவனுக்குச் சூட வேண்டி ஆண்களும் பெண் களுமாக [பணியாளர்கள்] அமர்ந்து பூத்தொடுத்ததைக் கல் வெட்டுகள் நமக்குக் கூறுகின்றன. பூத்தொடுப்பார் 'திருப் பள்ளித் தாமம் தொடுப்பார்' என்ற பெயர்களிலும் அழைக்கப் பட்டதைக்கூறும் கல்வெட்டுகள் பல உள்ளன.

கோப்பெருஞ்சிங்கனின் நான்காம் ஆட்சியாண்டுக் கல் வெட்டான நங்கவரம் கல்வெட்டொன்று.

........... திருப்பள்ளித் தாமம் பறித்துக்
குணர்ந்து தொடுக்கும்

மாணிகள் .........[6] என்று அந்தண பிரம்மச்சரியர்கள் பூக்கட்டியதைத் தெரிவிக்கின்றது. மன்னார்கோயில் கல்வெட்டான கோச்சடையவர்மரான சுந்தரசோழபாண்டியனின் நாலாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று பெண்கள் பூத்தொடுத்ததைக் கூறுகின்றது.

“ ...... .. .. திருவிளக்குப் பிடிச்சுத் திருப்பள்ளித்
தாமம் தொடுக்கும் தேவரடியார் பெண்டுகளுக்கும் [7]”

இவ்வாறே அன்றிப் பொதுவாகப் பணியாளர்களின் எணணிக்கைகள் கூறும்போதும் பூத்தொடுப்பவர்களைப் பற்றிக் கூறும் கல்வெட்டுகளும் உள்ளன.

“ ... ..... ......... நாயகப் பேர் இரண்டும்
பேர் முப்பத்து நாலும் திருப்பூமண்டபத்துத
திருப்பள்ளித் தாமம் தொடுககும் பேர் இரண்டும
ஆகப்பேர் முப்பத்தெள்வருக்கும் [8]” —

என்று கூறும் கோப்பெருஞ்சிங்களின் பதினாறாம் ஆட்சியாண்டைய சிதம்பரம் கல்வெட்டு பூத்தொடுப்பார்களை எண்ணிக்கையில் பொதுவில் கூறுவதைக் காணலாம்.

“இத்திருநந்தவனத்துத் திருப்பள்ளித்தாமம்
இத்திருநந்தவனக் குடிகள் மூவரும் பறித்து
அட்டக்கடவார்களாகவும். ... .. ...... [9]” —

என்று கூறும் கல்வெட்டு பூக்களைப் பறித்துக் கொணர்ந்த மூவரைக் குறிக்கின்றது இப்படி இத்தனை நபர்கள் பூக்கட்டுபவர்கள் இத்தனை நபர்கள் பூக்களைப் பறித்துக்கொண்டு வருபவர்கள் இத்தனைபேர் நந்தவனங்களைப் பேணுவோர் என்று குறிக்கப்பட்டு அவ்வவர்களுக்கு ஊதியங்களும் நிர்ணயிக்கப்பட்டதைப் பல கல்வெட்டுகள் தெளிவாக்குகின்றன.

திருப்பள்ளித்தாமம் தொடுப்பார் பெற்ற கூலிகள் என்ற பொழுது கல்வெட்டும் "கொற்றுக்கு" என்று கூலி குறிக்கப் படுகின்றது நாள் கூலியாகவும், மொத்தமாகவும் தரப்பட்டன. நெல்லாகவும், அரிசியாகவும், காசாகவும், நிலமாகவும் பெரும் பாலும் வழங்கப்பட்டன.

## பூத்தொடுத்த முறைகளும், எண்ணிக்கையும்

திருப் பூ மண்டபத்தேயுள்ள பூப்பலகையில் இட்ட மலர்கள் எவ்வாறு தொடுக்கப் பட்டன என்பதைக் கூறும் கல்வெட்டுகள் ஒரு சில உள்ளன. அவற்றுள் ஒன்று, முகவை மாவட்டம் திருப்பத்தூர் வரகுணபாண்டியனின் நாலாம் ஆட்சியாண்டைய கல்வெட்டு இது பூந்தொடுக்கும் முறைகளைப் பற்றி மிகத் தெளிவாகவும் அழகாகவும் கூறுவதைக் காணலாம்.

> "....... பள்ளித்தாமத்துக்கு
> முதலாக வைத்த நிறைகுறையாப் பழங்
> காசு பதினைந்து. இக்காசினால் பூப்பொலி
> காசின் வாய் இருவிரல் அகலத்து இரண்
> டிரண்டு நறும் பூ இட்டுத் தொடுத்தன இரு
> மழ நீளத்தன ஒரே வடமாக நியதி பதி
> னைந்து வடம் இடுவதாகத் திருப்புத்தூர்ச்
> சபையார் கையில் வைத்தன[10]" —

என்று கூறும் கல்வெட்டு வரிகளைக் கூர்ந்து நோக்கினால் பூக்கள் தொடுக்கப்பட்ட வரையறை தெளிவுறும். இரண்டு விரல் அகலத்தில் இரண்டிரண்டு நறும் பூக்களை இட்டுத் தொடுக்கப்படும் மாலை இருமுழம் நீளமும் ஒரே வடமாகவும் இருக்க வேண்டும். அது போல பதினைந்து வடம் ஒரு நாளைக்குக் கொடுக்க வேண்டும் என்று கூறப்படுகிறது.

ஒரு சில மலர்கள் எண்ணிக்கைகளிலும், வேறு சில அளவுகளிலும் கோயிலுக்குக் கொண்டுவந்து தரப்பட்டதைச் சில கல்வெட்டுகள் கூறுகின்றன. தென்ஆர்க்காடு மாவட்டம் கடலூர் வட்டம் திருவதிகை என்ற இடத்தில் உள்ள ஒருகல் வெட்டு முதலாம் இராசேந்திரனின் இருபத்து மூன்றாம் ஆட்சியாண்டுடையது. இக்கல்வெட்டு 'உச்சிகாலத்து' சார்த்தியமலர் அளந்து கொடுக்கப்பட்டதைக் குறிக்கின்றது.

> "திருவீரட்டானமுடைய மகாதேவர்க்கு
> உச்சியம் போது ஸந்தியில் சார்த்தி
> அருள நாள் ஒன்றுக்கு தும்
> பைத் திருப்பள்ளித் தாமம் ப
> தக்காக சநதிராதித்தவல் செலுத்தும் [11]"

என்று வருவதைக் காணலாம்.

திருச்சிமாவட்டம் திருப்பராய்த்துறையுள் உள்ள முதலாம் இராசராசனின் 25ம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு ஒன்று மூன்று சந்திக்குக் கொடுக்கப்பட்ட தாமரைமலர்களின் எண்ணிக்கை பற்றிக் கூறுகின்றது.

> "............... நிச்சல்படி சாத்தி
> யருளும் தாமரைப்பூவின் திருப்பள்ளித்
> தாமம் ஸந்திதோறும் இருபதாக மூன்று
> ஸந்திக்கும் அறுபது தாமரைப்பூத்திருப்
> பள்ளித்தாமம் பறித்துக் குணர்வான்" [12]

என்று வரக் காணலாம்.

**பூக்களின் பெயர்கள்**

பூப்பலகை தொடர்பாக ஆய்ந்த ஆய்வில் இதுவரை கல்வெட்டுகளின் வாயிலாகச் சுமார் பதினைந்து வகையான மலர்களின் பெயர்கள் கிடைத்துள்ளன. அவற்றுள் நீர்ப்பூக்களும், நிலத்துள் மரஞ்செடிகொடிகளில் விளைந்த பூக்களும் அடங்கும். அலைகருமுகை (சாதிமல்லிகை) தும்பை, மல்லிகை கொழுந்து (மருக்கொழுந்து) பெருஞ்செண்பகம சிறுசெண்பகம், இருவாட்சி, செங்கழுநீர், பச்சை (நறுமணதழைகள்) அலரி, தாமரை ஆகியவைகளாகும். கோடை என்னும் ஒருமலர் குறிக்கப்பட்டுள்ளது. தமிழ்ப்பேரகராதியில் 'கோடை' என்பது வெண்காந்தள், செங்காந்தள் மலர்களைக் குறித்ததாகக் கூறப்பட்டுள்ளது. இவையேயன்றித் தழையிடுவார் என்ற சொற்களின் மூலமும், வில்வம், துளசி, முதலியனவும் இறைவனுக்குத் தரப்பட்டதை உணரலாம்.

இவையே யன்றி ஒருசில கல்வெட்டுகள் பொற்பூக்களைச் சார்த்தி வழிபட்டமையையும் எடுத்துக் கூறுகின்றன உதாரணத்திற்கு ஒன்று இரண்டைப் பார்ப்போம்.

> "திருவலஞ்சுழி இந்நம்பிராட்டியார்
> எடுப்பித்தருளின திருக்கற்றளிக்
> க்ஷேத்திரபாலதேவற்கு சாத்தியருளக்
> கொடுத்த பொற்பூ இரண்டு"[18]

என்று வருவதைக் காணலாம்.

தஞ்சைமாவட்டம் திருவையாற்றில் உள்ள ஒருகல்வெட்டு உலகமாதேவியார் செய்வித்த பொன் தாமரைப் பூ ஒன்று பத்து கழஞ்சு பொன்னாலானதாகக் கூறுகின்றது.[14]

மேலும் இவ்வூரிலேயே இராசேந்திரன் மகன் இராசாதி இராசன் 32ம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டில்

"பிள்ளையார் ஸ்ரீ விஷ்ணுவர்த்தன தேவர் தந்து அருளின இராஜராஜன் மாடை முன்னூறினால் செய்த ஆறிதக்கன் செங்கழுநீர் பொற்பூ ஒன்றினால் பொன் இருகழஞ்சே காலாக செய்த செங்கழுநீர் பொற்பூ நாற்றைம்பதிநால் ........."[15]

என்று கூறுவதினாலும் பொற்பூக்களையும் இறைவனுக்குச் சார்த்தி வழிபட்டமை தெரிகின்றது.

முடிவுரை :-

1 இறைவனுக்குச் சூட்டப்பயன்படுத்தப்பட்ட பூக்களை மாலையாகத் தொடுக்கப்பயன்படுத்தப்பட்ட பூப்பலகைகள் சில இடம் மாறாது இருப்பதைக்கொண்டு பார்த்தால் பெரும் பாலும் கோயிலின் திருச்சுற்றில் தென்புறமாகவோ அன்றித் தென்கீழ்த் திசையிலோ, தென்மேற்கிலோ இருந்திருக்க வேண்டும் என்ற முடிவிற்கு வரமுடிகின்றது

2. பூப்பலகைகள் என்ற பெயர் தாங்கிய இப்பலகைகள் தற்போது அபிஷேகமேடைகளாகவும் வாகன மற்றும் திருமண மேடைகளாகவும், கோயிலில் சமைத்த உணவினை ஆற வைக்கும் கல்லாகவும், ஓய்வு இருக்கை, படுக்கைகளாகவும் பல இடங்களில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. அவற்றில் பூக்கட்டும் உபயோகம் இல்லாது போய்விட்டது இதன்மூலம் தெரியவருகின்றது.

3 தற்போது மாலைகள் பூச்சரங்கள் முதலியன கோயிலுக்கு வெளியே கடைகளிலிருந்து பெறப்படுவதால் இப்பூப்பலகைகள் உபயோகமற்றவைகளாகிவிட்டன.

பூப்பலகைகள் பற்றிச் செய்திகள் சேகரித்த போது கல்வெட்டுகளிலும் இலக்கியங்களிலும் பூக்கள், மலர் வழிபாடு என்ற தலைப்பில் ஒரு தனி நூலாக அமையும் அளவு கிடைத்துள்ளன. வாய்ப்புகிடைக்கின்றபோது அதை ஒரு தனி நூலாகத் தர முயல்வேன்.

**எடுத்தாண்டவைகள்:-**

1 நேரில் படிக்கப்பட்டன.

2. 'திருவாலீஸ்வரம்' கல்வெட்டுப் பயிற்சி நிறுவன மாணவர் திரு. செல்வராஜ் (1983)

3 நேரில் படிக்கப்பட்டன,

4. 'கொழுமம்' செல்வி. மனோன்மணி (1976) கல்வெட்டுப் பயிற்சி நிறுவன மாணவி ஆய்வு நூல்.

5. 'ரத்னகிரி' (ஐயர்மலை) திரு. கருணாகரன் (1984) கல்வெட்டுப் பயிற்சி நிறுவன மாணவர்

6. S. I. I. vol VIII Ins 640

8. S. I. I. vol XIV Ins 132

7. S. I. I. vol VIII Ins 56

9. S. I. I. vol VII Ins 889

10. S. I. I. vol XIV Ins 15

11. S. I. I. vol VIII Ins 316

12. S. I. I. vol VIII Ins 571

13. S. I. I. vol VIII Ins 237

14. S. I. I. vol V Ins 521

15. S. I. I. vol V Ins 520-5.

# சில சுவையான பெயர் மாற்றங்கள்

பெர. இராசேந்திரன் எம். ஏ., டி. இ. ஏ.
மயிலாடுதுறை

நிலம், மலை, காடு, வயல், ஆறு, கடல், நாடு, நகரம், குடி, படை, தேவு, தலம், அரசியல், நிலவியல், இடப் பெயர். போன்ற எண்ணற்ற காரண காரியங்களின் பின்னணியில் ஓருருக்குப் பெயரேற்படுகின்றதென்றாலும், பெரும்பாலான ஊர்களின் பெயர்கள் உலகம் உள்ளளவும் அப்படியே நின்று நிலைத்து விடுவதில்லை, பல ஊர்களின் பெயர்கள் காலப்போக்கில் சிதைந்தும், திரிந்தும், உருமாறியு முள்ளன உரு மாற்றம் பெற்ற ஊர்ப்பெயர்களுள் சிலவற்றை மட்டும் எடுத்துக் கொண்டு அம்மாற்ற நிகழ்விற்கான காரணங்களில் சிலவற்றை மட்டும் இக்கட்டுரை உரிய எடுத்துக் காட்டுகளுடன் இயம்புகிறது கட்டுரையில் காணப்படும் ஊர்ப் பெயர்கள் பெரும்பாலும் கல்வெட்டு இலக்கியம், பேச்சு வழக்கு ஆகியவற்றினின்று எடுத்தாளப்பட்டுள்ளன

## இயல்பே என்றும் நிலைக்கும்

முடிமன்னராட்சிக் காலத்தில் ஏற்கனவே இருந்து வந்த பல ஊர்களுக்கு, அவ்வவ்மன்னர்களின் பெயரோ அல்லது விருதுப்பெயரோ சூட்டப்பட்டு அவ்வூர்களுக்கு மாற்றுப் பெயர் கொடுக்கப்பட்டு இருக்கிறது. அங்ஙனம் கொடுக்கப் பட்ட மாற்றுப் பெயர்களில் பெரும்பாலானவை சமுதாய அரசியல் மாற்றங்களின் காரணமாக காலப்போக்கில் வழக்கிழந்து போக ஏற்கனவே அவ்வூர்களுக்கு வழங்கி வந்த பழைய பெயர் மீண்டும் புத்துயிர் பெற்று அதே பெயரிலோ அல்லது சற்று திரிந்த நிலையிலோவழங்கி வருவதைக் காணலாம்.

தலைஞாரான ஸ்ரீ மதுராந்தகச் சதுர்வேதி மங்கலம்
— தலைஞாயிறு

திரைலோக்கியான விநதராஜ பயங்கர சதுர்வேதி மங்கலம் — திரைலோக்கி

தோவாளையான எதிர்வல்லி சோழபுரம்
— தோவாளை

குமரியான கங்கை கொண்ட சோழபுரம்
— கன்னியாகுமரி

உத்திரமேரூரான இராசேந்திர சோழ சதுர். மங்கலம்.
— உத்திரமேரூர்

பாம்பரமான குலோத்துங்க சோழ சதுர்.மங்கலம்
— திருப்பாம்பரம்

பாவாடைக் குடியான நித்த விநோத நல்லூர்
— பாவாட்டக்குடி

ஒட்டைக் குடியான எதிரிலி சோழபுரம்
— ஒட்டக்குடி

கோவன்புத்தூரான வீரகேரள நல்லூர் — கோயம்புத்தூர்

பூச்சிப்பாக்கமான ஸ்ரீ பராந்தக நல்லூர் — பூசிவாக்கம்

திரையனேரியான உத்தம சோழ சதுர். மங்கலம்
— திரையநேரி

மாமல்லபுரமான ஜனநாதபுரம் — மாமல்லபுரம்

கருந்திட்டைக் குடியான சுங்கம் தவிர்த்த சோழ நல்லூர்
— கருந்தட்டாங்குடி

சடங்கன் பாடியான குலசேகரன் பட்டினம்
— தரங்கம்பாடி

மாறப்படுகையான அழகிய சோழ சது. மங்கலம்.
— மாம்படுகை

ஆணைமேலகரமான நவரீஸ்வர சது. மங்கலம்
— ஆணைமேலகரம்

கோமலான குலோத்துங்க சோழ சது. மங்கலம்
— கோமல்

மேற்கிள்ளி மங்கலமான கரிகாலச்சோழ சது. மங்கலம்
— மேக்கிரிமங்கலம்

பறியலூரான இராஜநாராயண சது. மங்கலம் — பரசலூர்

விளைநகரான நித்த விநோத சது. மங்கலம்
— விளைநகர்

ஆக்கூரான இராசேந்திரசிம்ம சது. மங்கலம் — ஆத்தூர்

நாங்கூரான ஸ்ரீ பாததூள் சது. மங்கலம் — நாங்கூர்

மனற்குடியான உத்தமசோழ சது மங்கலம் — மனக்குடி

நீடூரான ராஜசிகாமணி சது மங்கலம் — நீடூர்

வில்லிய நல்லூரான புவலோக மாணிக்க சது. மங்கலம்
— வில்லியனூர்

முருகவேள் மங்கலமான கங்கை கொண்ட சோழபுரம்
— முருகமங்கலம்

குறுக்கையான விக்கிரம சோழ சது. மங்கலம்
— கொறுக்கை

கஞ்சனூரான சிம்மவிஷ்னு சது. மங்கலம் — கஞ்சனூர்

வேம்பற்றூர் ஆன எதிரிலி சோழ சது. மங்கலம்
— வேம்பற்றூர்

பொள்ளாச்சியான முடித்தலைகொண்ட சோழநல்லூர்
— பொள்ளாச்சி

திருநெல்வேலியான குலசேகர சது. மங்கலம்
— திருநெலவேலி

உக்கலான விக்கிரம சோழ சது. மங்கலம் — உக்கல்

திருநாவலூரான இராஜாதித்யபுரம் — திருநாமநல்லூர்

கருவூரான முடி வழங்கு சோழபுரம் — கரூர்

மாத்தூரான வீரபாண்டியபுரம் — மாத்தூர்

மணமேல்குடியான குலோத்துங்க சோழபட்டினம்
— மணமேல்குடி

வாகூரான அழகிய சோழ சது. மங்கலம் — பாகூர்

நெற்குன்றமான வைரமேக சது. மங்கலம்
— நெற்குன்னம்

விழுப்புரமான ஜனநாத சது. மங்கலம் — விழுப்புரம்
உறமூரான விக்கிரம சோழ சது. மங்கலம்
— எறும்பூர்
பெரும்பாக்கமான வீரராஜேந்திர சது. மங்கலம்
— பெரும்பாக்கம்
திருவக்கரையான திரிபுவனமாதேவி சது. மங்கலம்
— திருவக்கரை
மழவராய நல்லூரான பராக்கிரம பாண்டியபுரம்
— மழவராயநல்லூர்
கூரூரான குலோத்துங்கசோழ நல்லூர் — கூகூர்
களப்பாலான முடிவழங்கு சது. மங்கலம் — களப்பால்
ஆலம்பாக்கமான மதுராந்தக சது. மங்கலம்
ஆலம்பாக்கம்
கருகாவூரான இராஜநாராயண சது. மங்கலம்
— திருக்கருகாவூர்
மணலூரான கல்யாணமகாதேவி சது. மங்கலம்
— மணலூர்பேட்டை
திருமுட்டமான முடிகொண்ட சோழநல்லூர்
— ஸ்ரீ முஷ்ணம்
பூவனூரான அவனி சேகர சது. மங்கலம் — பூவனூர்
கீழ்பூண்டியான உலோகமாதேவி சது. மங்கலம்
— நாவல்பூண்டி
வைகலான வானவன்மாதேவி சது. மங்கலம்
— வைகல்
சண்பையான வீரராஜேந்திர சோழபுரம் ஜம்பை
திருக்கழுக்குன்றமான உலகளந்த சோழபுரம்
— திருக்கழுக்குன்றம்

(பட்டியலில் சதுர்வேதிமங்கலம் என்பது சது மங்கலம் எனத்தரப்பட்டுள்ளது) மேற்கண்ட பட்டியலை நோக்கும் போது ஊர்ப் பெயர்கள் இயற்பெயரிலோ அல்லது இயற் பெயரின் திரிந்த வடிவிலோதான் வழங்குகின்றன என்பது தெளிவாகிறது.

அன்றைய நாளில் சதுர்வேதிமங்கலங்களாக இருந்த பல ஊர்களின் சமுதாய அமைப்பு இன்று சதுர்வேதி மங்கலங்களாக இல்லை என்ற மாற்றம் ஒருபுறமும், அரசியல் காரணமாக வலிந்து சூட்டப்பட்ட பல பெயர்கள் அரசியல் மாற்றங்களைத் தொடர்ந்து பேச்சுவழக்கில் மக்களிடையே தொடர்ந்து நிலைத்து நிற்காமல்போனது மறுபுறமும் இம்மாற்றத்திற்கான முக்கிய காரணங்கள் எனலாம்.

## சுருக்கமும் திரிபும்

பல கம்பீரமான ஊர்ப்பெயர்கள் காலப்போக்கில் சுருங்கி பொருள் மாறியிருக்கின்றன.

| | |
|---|---|
| சோழகுலாந்தகச் சதுர்வேதி மங்கலம் | — சோழவந்தான் |
| சோழகுலாந்தகபுரம் | — சோழபுரம் |
| மதுராந்தகச் சதுர்வேதி மங்கலம் | — மதுராந்தகம் |
| இராஜகேசரி சது. மங்கலம் | — இராஜகிரி |
| வளவன் மாதேவி | — வளையமாதேவி |
| சந்திரலேகை சது. மங்கலம் | — செந்தலை |
| சிவபாதசேகரபுரம் | — சிவாயம் |
| கேரளமாதேவி சது. மங்கலம் | — பேரளம் |
| ஜெயசிம்மகுலகாலபுரம் | — சேங்காலிபுரம் |
| கோவன்புத்தூர் | — கோயம்புத்தூர் |
| சுந்தரசோழபுரம் | — சுந்தரம் |
| இரணிய சிங்க நல்லூர் | — இரணியல் |
| உலோகமாதேவி புரம் | — உலகாபுரம் |
| வானவன் மாதேவி | — மானாம்பதி |
| பரகேசரி நல்லூர் | — பரமேஸ்வர நல்லூர் |
| திரிபுவன வீரபுரம் | — திரிபுவனம் |
| பூச்சிப்பாக்கம் | — பூசிவாக்கம் |
| தினசிந்தாமணி நல்லூர் | — சிந்தாமணி |

உலகில் வலிய நல்லூர் — சிந்தாமணி
அத்தி சமுத்திரம் — அட்சேந்திரம்
திருக்குரங்காடு துறை — ஆடுதுறை
கொழுமங் கொண்டான் — கொழுக்கொண்டான்
குளித்தண்டலை — குளித்தலை
சேய்நல்லூர் — சேங்கனூர்
திருப்பாச்சில் — திருவாசி
பெரெயிலூர் — பேரையூர்
உத்தம சீலி சதுர்வேதி மங்கலம் — உத்தமசேரி
கண்டராதித்த புரம் — கண்டராச்சி
திலதைப்பதி — சிதலைப்பதி
திருவழுத்தூர் — தேரழந்தூர்
திருநெய்த்தானம் — தில்லைத்தானம்
பழைய ஜெயங்கொண்ட சோழபுரம் — பழையசங்கடம்

இவற்றுள் பெரும்பாலானவை பெயரில் முதல் இடை அல்லது கடை குறைந்திருக்கக் காணலாம். சில முழுக்க முழுக்க உருவத் திரிந்தும் உள்ளன இவை அனைத்தும் பேச்சுவழக்கால் காலப் போக்கில் ஏற்பட்ட வளர்ச்சி மாற்றங்களின் தற்போதைய நிலை.

பல ஊர்ப்பெயர்களின் நடுவில் வரப்பெற்ற ர, ல, ள, ழ ஆகியவை காலப்போக்கில் நீக்கப்பெற்று அதனால் அவ்வூர்ப் பெயர்களில் பொருள் சிதைந்து மாறியுள்ள தன்மையினைப் பல ஊர்ப்பெயர்களில் காணமுடிகிறது.

சேல்கல் - சேகல்
அலங்காரநல்லூர் — அலங்காநல்லூர்
பல்லவர்புரம் — பல்லாவரம்
சாம்பல் நத்தம் — சாமநத்தம்
பத்தல் படை -- பத்தமடை
கீழ்வேளூர் — கீவளூர்
வெண்புள் கோட்டை — வெப்பக்கோட்டை
மங்கலநல்லூர் —மங்கநல்லூர்
அவளி வள நல்லூர் – அவளிவநல்லூர்

**'ஐ' கார மாற்றம்**

சென்னை, தஞ்சை, மதுரை, நெல்லை குடந்தை, தில்லை. கோவை, முகவை என்று பெயர்களின் இறுதியில் பல ஊர்ப்பெயர்கள் இன்று 'ஐ' கார ஆதிக்கம் பெற்று மக்கள் நாவில் வழங்கிய வருகின்றன. இருப்பினும் 'ஐ' காரம் பெயர் நடுவில் வரப்பெற்ற பல ஊர்ப்பெயர்கள் கால வெள்ளத்தில் 'ஐ' காரத்தை இழந்தோ அல்லது 'ஐ' காரம் திரிந்தோ வழங்கிவருகின்றன.

பூத்தலைப் பற்று — பூதலப்பட்டு
பூதைப்பாண்டி — பூதப்பாண்டி
வேட சந்தையூர் — வேடசந்தூர்
திருவிடைச்சுரம் திருவடி சூலம்
பாலைவன நத்தம் — பாலவனநத்தம்
கருந்திட்டைக்குடி — கருந்தட்டாங்குடி
திருப்பந்தையூர் — திருப்பந்தியூர்
அறையணி நல்லூர் — அரகண்டநல்லூர்
கடைசி சந்தை — கடுகுசந்தை
ஒட்டைக்குடி — ஒட்டக்குடி
பாவடைக்குடி — பாவட்டாகுடி
தாழை நத்தம் — தாள நத்தம்
திருப்பாலைப் பந்தல் — திருப்பாலப் பந்தல்
திருவேங்கைவாசல் — திருவேங்கவாசல்
திரையனேரி — தென்னேரி
தென்னையூர் — தென்னூர்
படைவேடு — படவேடு
பத்தணைநல்லூர் — பந்தநல்லூர்
விளைநகர் — விளநகர்
வீரைக்குடி — வீரக்குடி
வெள்ளை நல்லூர் — வெள்ளனூர்
சிறுவளைப்பூர் — சிறுகலப்பூர்

பெரும்பாலான ஊர்ப்பெயர்களில் 'ஐ' காரம் அகர மாகவோ, இகரமாகவோ அல்லது உகரமாகவோ திரிந்திருத் தல் கண்கூடு.

இப்படிப் பல்வேறு ஊர்ப்பெயர்கள் நடுவில் வரப்பெற்ற 'ஐ' காரம் திரிந்தோ, இழந்தோ காணப்படினும் ஒருசில ஊர்ப்பெயர்களில் இன்றும் அவை எவ்வித மாற்றமும் அடை யாமல் இருப்பதையும் காண முடிகிறது. கீழையூர், மேலையூர் காரைக்குடி, காரைக்காணி, ஆனைமலை, கடையநல்லூர், தலையாலங்காடு, திருவானைக்கா, திருவிடைமருதூர், துறை யூர், உறையூர், திருத்துறைப்பூண்டி, இடையாற்றூர் போன்ற ஊர்கள் இவ்வகைக்குச் சிறந்த உதாரணங்கள்.

ல, ள, ழ.

பல ஊர்ப்பெயர்களில் 'ர' கரம் 'ல' கரமாகவும் 'ல' கரம் 'ர' கரமாகவும் திரிந்து ஊர்ப் பெயரை மாற்றியுள்ளன.

| | | |
|---|---|---|
| திருச்சுரம் | — | திரிசூலம் |
| ஆர்வலம் | — | அலிவலம் |
| திருவிடைச்சுரம் | — | திருவடிசூலம் |
| அம்பர் | — | அம்பல் |
| தாமர் | — | தாமல் |
| பிரம்பில் | — | பெரம்பூர் |
| திருச்செந்தில் | — | திருச்செந்தூர் |
| மைலப்பில் | — | மைலாப்பூர் |
| கீழையில் | — | கீழையூர் |
| குறும்பில் | — | குறும்பூர் |
| திருவிடைமருதில் | — | திருவிடைமருதூர் |
| புடைமருதில் | — | திருப்புடைமருதூர். |
| மணவில் | — | மணவூர் |
| இடராய்க்குடி | — | இடலாய்க்குடி |

திருச்சுரியல் — திருச்சுழியல் (அ) திருச்சுழி
திருப்பராய்த்துரை — திருப்பலாத்துறை
பொறகலக்குடி — பொற்காலைக்குடி

இதே போன்று சில ஊர்ப் பெயர்கள் 'ல' கரம் 'ள' கரம் ஆகவும் திரிந்துள்ளன.

திருவாலக் கோயில் — திருவானைக் கோவில்
நல்லியூர் — நன்னியூர்
பாலைவபுரம் — பனையபுரம்

சில ஊர்ப்பெயர்களில் 'ள', 'ண' / 'ன' வுடனும் ள/ழ. 'ட' வுடனும் மயங்கி வந்துள்ளன.

கிள்ளி மங்கலம் — கிண்ணிமங்கலம்
தில்லையாழி நல்லூர் — தில்லையாடி
இடான்குடி — இளையான்குடி
தென்னையூர் — தென்னூர்.

'ற', 'ட'

பல ஊர்ப்பெயர்களில் 'ற'கரம் 'ட'கரமாகவும், 'ட'கரம் 'ற'கரமாகவும் திரிந்து வந்துள்ளன. இவ்வகைக்கு செங்கழு நீர்ப்பற்று செங்கல்பட்டு ஆனதும்; தொண்ணாற்றுப்பற்று, தொள்ளாரப்பட்டு ஆனதும்; ஊற்றத்தூர், ஊட்டத்தூர் ஆனதும்; பொன்பற்றி, பொன்பட்டி ஆனதும்; கற்றளிச்சதுர் வேதிமங்கலம், கட்டளை அக்கிரகாரம் ஆனதும்; பெருங்குறி, பெருங்குடி ஆனதும்; துடையூர், துறையூர் ஆனதும்; திருநறுங்கொண்டை ,திருநிறங்கொன்றை ஆனதும் சிறந்த சான்றுகள்

சடங்கன்பாடி தரங்கம்பாடி ஆனது போல சில பெயர்களில் 'ட'கரம் 'ர'கரமாகவும்; சிங்கம் பிடாரி சிங்கம் புணரி

ஆனதுபோல வேறு சில பெயர்களில் 'ண' கரமாகவும் கூட திரிந்துள்ளன

'ற', 'த':

'ற' கரம், 'ட' கரமாகத் திரிந்ததுபோலவே வேறுபல ஊர்ப்பெயர்களில் 'த' கரமாகவும் திரிந்துள்ளது. சிற்றாமூர் சித்தாய்மூராகவும், திருப்பயற்றூர் திருப்பயத்தங்குடியாகவும், வெற்றிலைக்குண்டு வத்தலக்குண்டாகவும், சேற்றூர், சேத்தூராகவும், கூடலையாற்றூர் கூடலையாத்தூராகவும், வெற்றியூர் வெத்தியூராகவும்; இடையாற்றூர், இடையாத்தூராகவும், ஊற்றக்காடு ஊத்துக்காடாகவும்; நற்றாயநல்லூர் நத்தநல்லூராகவும்; திருச்சோற்றுத்துறை திருச்சாத்துறையாகவும், கொற்றமங்கலம் கொத்தமங்கலமாகவும்; சிற்றலத்தூர் சித்தாலத்தூராகவும், கொற்றவாசல் கொத்தவாசலாகவும், இடையாற்றுமங்கலம் இடையாத்திமங்கலமாகவும்; உருமாறி ஒலிப்பது இவ்வகைத் திரிபினால்தான்.

''வ''

'வ' கரம் 'ம' கரத்தோடும், 'ப' கரத்தோடும், 'ய' கரத்தோடும், 'க' கரத்தோடும் சில ஊர்ப்பெயர்களில் மயங்கியதன் விளைவாக பல பெயர்கள் மாறியுள்ளன. மளவர் மாணிக்கத்தை வளவர் மாணிக்கமென்றும்; மாவண்டூரை, மாமண்டூரென்றும்; சிங்கபுரத்தை சிங்கவரமென்றும்; சிறுபுத்தூரை சிறுவத்தூர் என்றும்; பொன்னமராபதியை பொன்னமராவதி என்றும்; வாகூரை பாகூரென்றும்; திருக்கடையூரை திருக்கடவூர் என்றும்; கீழையத்தைக் கீழவரமென்றும்; நாவூரை நாகூரென்றும்; கோவூரைக் கோகூரென்றும் நாமின்று அழைப்பது இவ்வகை மயக்கத்தால்வந்த விளைவே.

ஒ/ஓ :

இதேபோன்று ஒ/ஓ ஆகியன அ,உ,ஆ ஆகியவற்றோடு மயங்கிவந்து சில பெயர்களை மாற்றியுள்ளன. இவ்வகைக்கு கீரைக்கொள்ளூர். கீரக்கள்ளூரானதும்; ஸ்ரீ குடித்திட்டை, திருக்களித்திட்டை ஆனதும், குளப்பாடு, கொளப்பாடு ஆனதும்; திருச்சோற்றுத்துறை, திருச்சாத்துறை ஆனதும்; கோமுடிப்பூண்டி கும்முடிப்பூண்டி ஆனதும் சிறந்த சான்றுகள். தத்துநரி, தத்தனேரியாகவும்; அச்சிறுப்பாக்கம், அச்சரப்பாக்கம் (அல்லது) அச்சரவாக்கமாகவும் வழங்குதல் போன்று 'உ' கர 'அ' கர உயிர் ஒலியன்களின் மயக்கத்தால் ஏற்பட்ட ஊர்ப்பெயர் மாற்றங்களும் உண்டு.

முடிவுரை :

மாற்றம் பெற்ற ஊர்ப்பெயர்கள் பல உள்ளன எனினும், மாற்றத்திற்கான காரணங்களும், மாறிய வடிவங்களும் பல உள்ளன எனினும் இக்கட்டுரையில் கட்டுரையின் அளவிற்கேற்ப ஒருசில மட்டுமே எடுத்துக் கூறப்பட்டுள்ளன. இந்த அடிப்படையில் மாற்றம் பெற்ற பெயர்களின் மாறியவடிவினையும், மாற்றத்திற்கான காரணங்களையும், சமுதாய மொழியியல் நோக்கில் ஆய்வது சமுதாய, மொழியியல் வரலாற்றுக்கு மிகுதியும் பயனுடையதாக இருக்கும்.

---

**தாய்க்கு மகன் மணாளன் ?**

அகளங்க நாடாழ்வானின் இரண்டு வேலையாட்கள் தங்கள் தலைவன் இறந்தபின நாங்கள் உயிரை மாய்த்துக் கொள்வோம். அப்படியல்லாது உயிரோடு இருந்தால் தாயை மணந்து கொண்ட அவமானம் அடைவோம் என்று ஸ்ரீரங்கம் கல்வெட்டில் 700 ஆண்டுகளுக்கு முன்குறித்துள்ளனர். அவர்கள் தாயந் அழகிய மணவாளமாராயன், அரியாந் கிடாரத்தரையன் ஆகியோர்.

"இவற்கு பிந்பு சாவாதே இருந்தேநாகில் எந்
பிணாட்டியைப் பறையற்குக் குடுத்து எங்க
ளம்மைக்கு நானே பிளுளதாவேந்",

---

# ஆறுநாட்டார் பழக்க-வழக்கங்கள்

செ. போசு எம். ஏ., டி. இ. ஏ.

மதுரை

திருச்சி மாவட்டம் கருவூரில் இருந்து பத்துக்கல் தொலைவில் இருக்கும் புகளூரில் 'ஆறு நாட்டார் மலை' ஒன்று உள்ளது. இம் மலையில் தான் சங்க காலச் சேர மன்னர்களின் குடி வழியைக் குறிக்கும் புகழ்பெற்ற சேரர் கல்வெட்டு இருக்கிறது.

'ஆறுநாட்டார் மலை' என்ற பெயர் ஆறு நாடுகளைத் தங்களுடைய வாழ்விடங்களாகக் கொண்ட ஆறுநாட்டு வேளாளர்களால் வழங்கப்பட்டிருக்கவேண்டும்.

பல்வேறு வகைப்பட்ட வேளாளர்களில் ஆறுநாட்டு வேளாளரும் ஒரு வகையினர். இவர்கள் சிதம்பரத்தையும், மதுரையையும் தலைமையிடமாகக் கொண்டு வாழ்ந்து வந்தனர்.

சிதம்பரத்தில் இருக்கும் இச் சமூகத்தார் மடத்தில் செப்பேடு ஒன்று உள்ளது. அந்தச் செப்பேட்டின் எழுத்தமைதியைக் கொண்டு கி. பி. 15 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக அதனைக் கொள்ளலாம்.

இச் செப்பேட்டில் ஆறுநாட்டு வேளாளர்களின் ஆறு நாடுகளாகக் குறிப்பிடப்படும் நாடுகளாவன :

1. திருப்படையூர் நாடு
2. பாச்சூர் குறட்டுப் பத்துநாடு
3. கீழ வள்ளுவப்ப நாடு
4. மேல வள்ளுவப்ப நாடு
5. கரிகாலி நாடு
6. ஆமூர் நாடு

இவற்றில் பெரும்பான்மையான நாடுகள் திருச்சி மாவட்டத்திலேயே அமைந்துள்ளன.

இந்த ஆறுநாட்டு வேளாளரும் ஓமாந்தூர்[1] என்ற இடத்தில் ஒன்று கூடித் தங்களுக்குள் சாதி சங்கப்பட்டயம் ஒன்றைக் கொடுத்துள்ளனர்.

இப் பட்டயத்தில் இவ்வினத்து மக்களின் திருமண உறவு பற்றியும், அவர்கள் மேற்கொண்ட ஒழுக்கங்கள் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது

மண உறவு

இவ்வின மக்கள் தாய்மாமன் பிள்ளை, தந்தையுடன் பிறந்த அத்தை பிள்ளை ஆகிய உறவுமுறையில் தான் பெண் கொண்டும், கொடுத்தும் மணம புரிதல் வேண்டும்.

இம் முறையன்றி, உறவு முறையார் கூடாமல் திருமணம் செய்தல் கூடாது; காணாத இடங்களில் தாம் விரும்புபவரைத் திருமணமும் செய்து கொள்ளக் கூடாது என்றும் செப்பேடு கூறுகிறது

இதற்கும் ஒருபடி மேலே போய், உறவு முறையில் பெண்ணோ — ஆணோ ஊனப்பட்டிருந்தாலும் அதற்காக

அவ்விருவரில் எவரையும் தள்ளி வைத்துவிடாமல் அம்மான் பிள்ளையும் அத்தை பிள்ளையும் பெண் கொண்டும் கொடுத்தும் வரவேண்டும் என்று செப்பேடு கட்டுப்பாடான சட்டமொன்றையும் தெரிவிக்கிறது.

'ஊனமுற்றோர் நலவாழ்வுத் திட்டம்' இன்று அரசின் கொள்கையாக உள்ளது. வேலை வாய்ப்பு அலுவலகங்களிலும், தொழில் நிறுவனங்களிலும், கல்விக் கூடங்களிலும் இத்தகையோருக்கு முன்னுரிமை தரப்படுகின்றது. ஆனால் சமுதாய வாழ்வில் இவர்கள் சிலருக்குத் திருமணம் ஆக முடியாத சூழ்நிலை இருப்பதை நாம் அறிவோம். ஆனால் ஆறு நாட்டு வேளாளர்களில் இத்தகைய ஊனமுற்றோர்க்கு தகுந்த பாதுகாப்பு உள்ளது [2]

இச்செய்திகளின் மூலம் இவ்வின மக்கள் தங்கள் சமூகத்தை எந்த அளவுக்குச் சட்டதிட்டத்துடன் பேணி வந்தார்கள் என்பதை அறிய முடிகிறது.

"இந்த வேளாளர் மரபிலே ஆணாதல் பெண்ணாதல் மெத்தத் தப்பாக மரபு அடாத அடர்பு சற்று உண்டானால் கேட்ட விடத்தில்—கண்ட விடத்தில் அவரவர் தாய் தகப்பன் அண்ணன் தம்பி மாமன் மைத்துனன் கோத்திரத்தில் உண்டான பேர்கள் அதற்கேற்ற புத்தி சொல்லி வைக்க வேணும்" என்பது செப்பேட்டு வாசகம்.

## இவர் தம் ஒழுக்கங்கள்

இதே செப்பேட்டில் ஆறு நாட்டு வேளாளப் பெருமக்கள் கைக்கொண்ட சில ஒழுக்கங்களைப் பற்றியும் குறிப்பிடப் பட்டுள்ளது.

அவை :

1. பெண்களும், வயது முதிர்ந்தவர்களும் தண்ணீர் எடுப்பதற்காக வேற்றூர்களுக்குத் தனி வழியாக – வழித் துணையின்றிச் செல்லக் கூடாது.

2. காட்டுப் பகுதிகளில் பெண்களும், பெரியவர்களும் இலைக் கறி பறிக்கப் போகக் கூடாது.

3. சந்தை கூடும் காலங்களில் பெண்களும், பெரியவர்களும் கடையேறிப் பொருட்களைப் பெற்று வரக்கூடாது.

இச்சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்படாதவர்களை ஆறு நாட்டு வேளாளர் சபை தண்டிக்கும் வல்லமையையும் பெற்றிருந்தது.

இவ்வொழுக்கங்களின் மூலம் ஆறு நாட்டு வேளாளர்கள் தங்கள் இனப் பெண்களையும், பெரியவர்களையும் எத்துணை அளவுக்கு மதித்து வந்தனர் என்பது புலப்படும்.

இச் செப்பேடு சிதம்பரத்தில் இருக்கும் கூத்தாடும் சம்பந்தப் பெருமாள் நயினார் பண்டாரத்துக்கு ஆறு நாட்டு வேளாளரால் எழுதிக் கொடுக்கப்பட்டுள்ளது பட்டயத்தை எழுதியவன் தாண்டவ நமசிவாயன். இப்பட்டயத்தில் கூறப் பட்டிருக்கும் செய்திகளுக்குச் சாட்சிகளாக 36 பேர் கையொப்பமிட்டுள்ளனர்.

செப்பேடு

உ

ஓம்

திருச்சிற்றம்பலம்

மன்மத – ஸூ பங்குனி மீ 23 உ சிதம்பரத்திலிருக்கும் கூத்தாடும் சம்பந்தப் பெருமாள் நயினார் பண்டாரத்துக்கு ஆறு நாட்டு வேளாளர்

1. திருப்படையூர் நாடு
2. பாச்சூர் குறட்டுப்பத்து நாடு
3. கீழவள்ளுவப்ப நாடு
4. மேலவள்ளுவப்பநாடு
5. சரிகாவி நாடு
6. ஆமூர் நாடு

இந்த ஆறுநாட்டு வேளாளரும் ஓமாந்தூர் தம்மில் பொருந்தி சாதி சங்கப்பட்டயம் கொடுத்தபடி இந்த வேளாள சனத்தில் யாதாமொருவர் நன்மாமன் பிள்ளை என்றும், நல்லத்தை பிள்ளை என்றும் கொண்டு கொடுத்து வழங்குமிடத்து சனம் பொருந்தக் கல்யாணம் பண்ணிக் கொள்வதேயல்லாமல். காணாத இடங்களில் அடுக்கழிவு பண்ணி பலவந்தமாகத் தாலி கட்டக் கூடுவதல்லதாகவும்.

இந்த வேளாளர் மரபிலே அம்மாள் பிள்ளை அத்தை பிள்ளை ஆண்பெண் ஊனப்பட்டிருந்தாலும் தள்ளாமல் கொண்டு கொடுத்துவரக் கடவோராகவும் இந்த வேளாளர் மரபிலே ஆணாதல் பெண்ணாதல் மெத்தத் தப்பாக மரபு அடாத அடம்பு சற்று உண்டானால் கேட்டவிடத்தில் கண்ட விடத்தில் அவரவர் தாய் தகப்பன் அண்ணன் தம்பி மாமன் மைத்துனன் கோத்திரத்திலுண்டான பேர்கள் அதற்கேற்ற புத்தி சொல்லி வைக்கவேணும்.

மடத்துநயினாருக்குக் கால் பணங்கொடுத்து வரக் கடவோராகவும் வலங்கைப் பிள்ளைக்கு வருஷாந்திரம் மடத்து நயினார் தர்மத்துக்கு ஒரு பணங்கொடுத்து வரக் கடவோராக வும். இந்தப்படி விசாரித்து வலங்கைப் பிள்ளை மடத்து நயினார் கூடச் சொல்லாமல் தாக்ஷண்யமாய் இருந்தாலும்

கணக்கு வழக்கு நாடு கூடவேண்டிய இடத்தில் அந்தந்த ஊருக்கு ஓலை கொண்டுபோய்க் கொடுத்துக் கூடின சபையிடத்தில் ஆஜராயிருக்க வேண்டியது இந்தப் படிக்கு மடத்து நயினாருக்கு ஆறு நாட்டு வேளாளர் அனைவரும் கூடி பெண்கள் பெரியார் தண்ணீர் எடுக்க அசலூருக்குத் தனிவழி போக காடேறி இலைக்கறி பறிக்க சந்தைக் கடையேறக் கடவதல்லதாகவும் அதிமதியா நடந்தபேரை ... ... ......

உறமுறை ஞாயத்தைக் கேட்டு நிறுத்தவும். இப்படிச் சம்மதித்து ஆறுநாட்டு வேளாளர் அனைவோரும் சாதி கொடுத்தோம்

வலங்கைப் பிள்ளைகரு வருஷம் தலைக்கட்டுக்கு 12 படி தவசம் நன்மைக்கு இரண்டு பணம் தீமைக்கு ஒரு பணம் பிள்ளைக்கு பணம் ¼ கொடாத பேருக்கு வாங்கிக் கொடுக்கவும் இந்தப்பட்டயம் எழுதினது நமக்கு சுத்த கர்த்தர்பண்டாரம் மகன் தாண்டவ நமசிவாயன் எழுத்து. [3]

அடிக்குறிப்புகள் :

1 ஓமாந்தூர் — திருச்சி மாவட்டம் நொச்சியத்திற்கு வடக்கில் உள்ளது.

2. 'ஆறுநாடு வேளாளர் — ஒரு விளக்கம்' திரு. தி. அ. சொக்கலிங்கம் எம். ஏ.,

3. இதன்பிறகு செப்பேட்டுச் சாட்சியான 36 பேர்களின் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன.

# பூதலவீரன் உதையமார்த்தாண்டன்

மா செந்தில்செல்வக்குமரன், எம். ஏ; டி. இ ஏ;
திருநெல்வேலி.

''வீர உதையமார்த்தாண்டன்'', ''வீரமார்த்தாண்டன்'', 'மார்த்தாண்டன்'' என்ற பெயர்களை வேணாட்டு (தென் கேரளம் அதை ஒட்டிய தமிழ் நாட்டுப் பகுதியில்) அரசகுலம் விரும்பி ஏற்றுக் கொண்டிருந்திருக்கின்றது. எனவே தான் ''உதயமார்த்தாண்டன்' என்ற பெயரில் பல மன்னர்கள் 'திருவிதாங்கூர் வரலாற்றில் இடம் பெற்றுள்ளனர். இப்பெயர் பல மன்னர்களுக்கு வருவது வரலாற்று ஆசிரியர்களுக்கு பெருங் குழப்பத்தை அளித்துள்ளது.

## 'மார்த்தாண்டன்' பெயர் கொண்ட மன்னர்கள் :

''மார்த்தாண்டன்'' என்றால் ''ஞாயிறு'' என்று பொருள் பெரும். 'உதையமார்த்தாண்டன்'' எனில் எழுஞாயிற்றைக் குறிக்கும். முதன்முதலில் ''வீர உதையமார்த்தாண்டன்'' என்ற பெயருடைய மன்னனை 12-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தான் காணமுடிகிறது. இவ்வுதைய மார்த்தாண்டனைக் குறிக்கும் கி.பி. 1123 ம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டு கல்குளம் ஆதி கேசவப் பெருமாள் கோயிலில் உள்ளது. இம்மன்னனை முதலாம் வீரஉதைய மார்த்தாண்டனாகக் கொள்ள வேண்டும். முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் சேர மன்னன் 'உதையமார்த்தாண்டனை' வென்று தன் வெற்றி வாழ்க்கையைத் தொடங்கினான் என்று வரலாற்று ஆசிரியர்கள் கருதுகின்றனர். சுந்தரபாண்டியன் வெற்றி பெற்றதாகக் கூறப்படும் வேணாட்டு அரசன் வீரரவி உதையமார்த்தாண்டனாக இருத்தல் வேண்டும்.

முதலாம் மாறவர்மன் குலசேகரனுடைய மகன் மூன்றாம் சடாவர்மன் வீரபாண்டியன் (கி பி 1297—1342) தன் தனை

யன் மூன்றாம் சடாவர்மன் சுந்தரபாண்டியனை உதைய மார்த்தாண்டன் என்ற வேணாட்டு அரசனின் உதவியை நாடிப் பெற்றதாக வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள். இவ் உதையமார்த்தாண்டன் கன்னியாகுமரி வட்டம் சோழ புரம் கோயில் கி பி 1316-ம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்றில் காணப்படும் "வீர உதையமார்த்தாண்டனாக" இருத் தல் வேண்டும். இம்மன்னனை "இரண்டாம் வீர உதைய மார்த்தாண்டன்" என்று கொள்ளலாம்.

## பூதல வீர உதைய மார்த்தாண்டன்

இம்மன்னர்களை அடுத்து வந்த வீர உதையமார்த் தாண்டன் 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பெரும் புகழுடன் விளங்கியிருக்கின்றான் இவன் "பூதல வீரன், "சிறைவாய் மூத்தவர்" என்ற பட்டங்களை தன் பெயரோடு இணைத்து பல கல்வெட்டுக்களைப் பொறித்துள்ளான். தென் பாண்டி நாட்டினைத் தொடர்ந்து 46 ஆண்டுகள் தன் ஆளு கைக்குள் வைத்திருந்தான். இம்மன்னனை மூன்றாம் "வீர உதைய மார்த்தாண்டன்" எனக்கொள்ளல் வேண்டும். இவ் வீர உதையமார்த்தாண்டன் பற்றிய ஐயங்களைக் களைந்து, இவன் செய்த சிறப்பான பணிகளை விளக்குவது இக்கட் டுரையின் நோக்கமாகும்.

## ஆட்சிக் காலம் :

வீர உதையமார்த்தாண்டன் ஆட்சிக்காலம் பற்றி பல் வேறு கருத்துகள் உள்ளன. திரு. டி. ஏ. கோபிநாதராவ் இம் மன்னன் கொல்லம் 678 முதல் (கி பி. 1503) 721 வரை ஆட்சி செய்திருத்தல் வேண்டுமெனக்கருதுகிறார்.

1916 - 17ம் ஆண்டைச் சேர்ந்த இந்திய தொல்பொருள் துறை ஆண்டறிக்கையின் முன்னுரையில் வீர உதையமார்த்

தாண்டன் கொல்லம் 653 விருந்து 707-ம் ஆண்டு வரை ஆட்சி செய்திருத்தல் வேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

இவ்விரு கருத்துக்களில் டி. ஏ. கோபிநாத அவர்களின் கருத்து ஓரளவு சரியாக உள்ளது. இம்மன்னனின் கொல்லம் 676-ம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டு களக்காடு சத்திய வாக்கீசர் கோயிலில் உள்ளது. இக்கல்வெட்டு மன்னன் வடசேரியில் தங்கியிருந்த போது களக்காடு கோயிலில் 'உச்சி சந்திரபூசை' செய்வதற்காக தேவதானம் வழங்கியதைக் குறிப்பிடுகிறது. எனவே 'வீர உதையமார்த்தாண்டனின் ஆட்சியின் தொடக்க காலத்தை கொல்லம் 678 விருந்து 676க்கு கொணடு செல்ல வேண்டியுள்ளது இம்மன்னனின் ஆட்சியின் இறுதி ஆண்டிலும் டி. ஏ. கோபிநாத அவர்கள் கூறிய கருத்தில் மாற்றம் தர வேண்டியுள்ளது இம்மன்னனின் கொல்லம் 722 ஆண்டை சார்ந்த கல்வெட்டுசான்று திருப்புடை மருதூர் புட்டார்ச்சுனேஸ்வரர் கோயிலில் காணப்படுகிறது கொல்லம் 722-ம் ஆண்டுக்குப் பிறகு இம்மன்னனின் கல்வெட்டினை எங்கும் காண முடியவில்லை. ஆதலால் இம்மன்னனின் இறுதி ஆட்சிஆண்டு 721 என்று கொள்ள முடியாது இது கொல்லம் 722 ஆக இருத்தல் வேண்டும். எனவே வீர உதையமார்த்தாண்டன் ஆட்சிக்காலம் கொல்லம் 676 (கி பி. 1501) விருந்து 722 (கி.பி. 1547) முடிய என்று கொள்வதே பொருத்தமாகும்.

## வெற்றியும், தென்காசிப் பாண்டியரும்

வீர உதைய மார்த்தாண்டன் கொல்லம் 670ல் ஆட்சி பீடம் ஏறினாலும் அவனுடைய வெற்றி வாழ்க்கை கொல்லம் 691ல் தான் தொடங்குகிறது என்று திரு. கே. கே பிள்ளை கருத்து தெரிவித்துள்ளார், ஆனால் கொல்லம் 685க்கு முன்னரே இம்மன்னனது வெற்றி வாழ்க்கை தொடங்கி

விட்டதற்கு சான்றுகள் உள்ளன உதைய மார்த்தாண்டன் கொல்லம் 685ல் தென்காசிப் பாண்டியர்கள் ஆட்சிக்கு முடிவு கண்டு தென்காசிப்பாண்டியார் அரண்மனையையும் கைப்பற்றியுள்ளான். இம்மன்னன் கொல்லம் 685ல் தென்காசி வீரபாண்டியன் அரண்மனையில் அமர்ந்து களக்காட்டில் உள்ள வீரமார்த்தாண்டம் பிள்ளையார் கோயிலுக்கு தானம் வழங்கியுள்ளான். இச்செய்தியினைத் தரும் கல்வெட்டு களக்காடு, சத்திய வாக்கீசர் கோயிலில் உள்ளது எனவே, வீர உதைய மார்த்தாண்டன் வெற்றி வாழ்க்கை கொல்லம் 685-ம் ஆண்டிலேயே தொடங்கிவிட்டது என்று கொள்வதே பொருத்தமாக அமையும்

சீவல்லப பாண்டியன் என்ற தென்காசிப் பாண்டியன் அச்சுதராயனின் உதவியோடு உதய மார்த்தாண்டனோடு போரிட்டு வெற்றிகொண்டதாகவும், தென்காசியில் மறுபடியும் பாண்டியர் ஆட்சி ஏற்படுத்தியதாகவும் வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள் இவ்வெற்றிக்குப்பின் சீவல்லபபாண்டியனே இறந்த காலம் எடுத்த பெருமாள், பாண்டிய இராச்சிய தாபனாச்சாரியான் போன்ற பட்டங்களைச் சூடிக் கொண்டுள்ளன். இவனுடைய ஆட்சிக் காலம் கி. பி. 1534 முதல் 1543 வரை என்று குறிப்பிடப்படுகிறது. ஆனால் சிவல்லபபாண்டியனின் ஆட்சிக்காலம் என்று குறிப்படப்படுகிற ஆட்சிக்காலத்திலேயே அவன் ஆட்சியின் எல்லைக்கு உட்பட்ட காலங்களில் வீரஉதைய மார்த்தான்டன் கல்வெட்டுக்களைக் காணமுடிகிறது.

உதைய மார்த்தாண்டனின் கொல்லம் 721-ம் (கி. பி. 1546) ஆண்டை சேர்ந்த கல்வெட்டு திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலிலும் கொல்லம் 722-ம் ஆண்டைச்

சேர்ந்த கல்வெட்டு திருப்புடை மருதூர் கோயிலிலும் உள்ளன. திருப்புடை மருதூர் கோயில் கல்வெட்டு உதய மார்த்தாண்டன் தென்ஆரி நாட்டுக் குன்றத்தூரில் முகாமிட்டிருந்த பொழுது, திருப்புடைமருதூர் கோயிலில் பணியாட்கள் அமர்த்தப்பட்டதைக் குறிப்பிடுகிறது. இத்தென்ஆரி நாட்டுக் குன்றத்தூர் என்ற ஊர் பாண்டியர் ஆட்சி எல்லைக்கு உட்பட்டதாகும். எனவே குன்றத்தூரிலிருந்து உதையமார்த்தாண்டன் ஆணை பிறப்பிக்கிறான் என்றால் அவ்வூர் அவன் ஆளுகைக்குள்பட்டிருந்தது என்பது தெளிவு. எனவே தென காசிப் பாண்டியர் உதையமார்த்தாண்டனை வென்றதாக கூறுவது பொருந்துவதாக அமையவில்லை. உதையமார்த்தாண்டன் தன் ஆளுகைக்குட்பட்டிருந்த தென்காசிப் பகுதிகளைக் கொல்லம் 722 வரை விட்டுக் கொடுக்கவில்லை என்றும் தெரிகிறது.

## உதைய மார்த்தாண்டன்-வீர மார்த்தாண்டனா?

உதைய மார்த்தாண்டன் ஆட்சிக்காலத்தில் சில கல்வெட்டுக்கள் வீர மார்த்தாண்டன் என்ற மன்னனின் பெயரைக் கொண்டு விளங்குகின்றன. டி. ஏ. கோபிநாதராவ் அவர்கள் வீர மார்த்தாண்டன் என்ற பெயரும் உதைய மார்த்தாண்டனைக் குறிப்பிடுவதாகத்தான் இருக்க வேண்டுமெனக் கருதுகிறார் வீர உதையமார்த்தாண்டன் தன் வெற்றிக்குப்பிறகு களக்காட்டில் புதிய அகரம் ஒன்றைத் தன் பெயரில் அமைத்து, புதிய அரண்மனையையும் கட்டியதாக அவனது கல்வெட்டுக்கள் பல குறிப்பிடுகின்றன இச்செய்தியினை இம்மன்னனது கல்வெட்டுகள் ''களக்காடான சோழ குலவல்லிபுரத்து வீரமார்த்தாண்டச் சதுர்வேதிமங்கலம் என்று **நம் பேரால்** வைத்த அகரசீர்மை'' எனக் குறிப்பிடுகின்றன. உதையமார்த்தாண்டன் கல்வெட்டுக்கள் நம்பேரால் அமைந்த அகரம் 'வீரமார்த்தாண்டச் சதுர்வேதி மங்கலம்' எனக்

குறிப்பிட்டிருப்பதன் மூலம் வீர மார்த்தாண்டன் என்ற பெயரும் உதைய மார்த்தாண்டனுக்குரியதே என்று உறுதியாகக் கூறலாம். மேலும் வீரஉதையமார்த்தாண்டன் தன் பெயரில் 'வீரமார்த்தாண்டன் சந்தி' என்று பல கோயில்களில் வழி பாடுகள் ஏற்படுத்தியிருப்பதும், 'வீரமார்த்தாண்டன் மடம்' என்று இரண்டு இடங்களில் மடத்திற்கு பெயர் அமைத்திருப் பதும் மேற்கூறிய இக்கருத்திற்கு வலுவூட்டுவதாய் அமைந் துள்ளன.

உதையமார்த்தாண்டனுககு முன்பு வீரமார்த்தாண்டன் என்ற பெயரில் ஒரு திருவிதாங்கூர் மன்னன் இருந்திருக் கின்றான். ஆனால் அவன் தன்னை 'வீரமார்த்தாண்டரான குலசேகரப்பெருமாள்' எனக் கூறிக்கொள்கிறான். எனவே, 'வீரமார்த்தாண்டன்' என்று தனித்து குறிப்பிடப்படும் கல் வெட்டுக்கள் இவனுடையவை அல்ல என்பது தெளிவு எனவே, உதையமார்த்தாண்டன் ஆட்சி காலத்தில் "வீர மார்த்தாண்டன்" என்று வரும் கல்வெட்டுக்கள் உதைய மார்த்தாண்டன் கல்வெட்டுக்களே என்பது உறுதியாகிறது.

### சிறைவாய் மூத்தவரா ? திருப்பாப்பூர் மூத்தவரா?

"செயதுங்க நாட்டு சங்கரநாராயண வென்று மண் கொண்ட பூதலவீர உதைய மார்த்தாண்டவர்மர் "சிறைவாய் மூத்தவர்" என்று உதையமார்த்தாண்டன் கல்வெட்டுக்களின் தொடக்கத்தில் அமைத்துள்ளது. இவ்வாறு "உதையமார்த் தாண்டன்" "சிறைவாய் மூத்தவர்" என்று குறிப்பிடும் கல்வெட்டுக்களோடு திருப்பாப்பூர் மூத்தவர் என்று குறிப் பிடும் கல்வெட்டுகளும் உள்ளன எனவே சிறைவாய் மூத்தவரும் "திருப்பாப்பூர் மூத்தவரும் ஒருவரா? அல்லது வேறு வேறு மன்னர்களா? என்ற குழப்பம் ஏற்படுவது

இயல்பு. வடசேரி தளியில் மகாதேவர் கோயிலில் உள்ள உதைய மார்த்தாண்டனின் கல்வெட்டொன்று இக்குழப்பத்தை நீக்கவல்லதாய் அமைந்துள்ளது. கொல்லம் 710 -ஐச் சேர்ந்த சுசீந்திரம் கல்வெட்டு, கொல்லம் 707, 708-ம் ஆண்டுகளைச் சேர்ந்த வடசேரி தளிமகாதேவர் கோயில் கல்வெட்டுக்களும், கொல்லம் 708-ம் ஆண்டுத் திருக்களூர் கல்வெட்டும் ''உதைய மார்த்தாண்டன் திருப்பாப்பூர் மூத்தவர்'' என்று குறிப்பிடு கின்றன.

வடசேரி தளியில் மகாதேவர் கோயில் கொல்லம் 708-ம் ஆண்டு கல்வெட்டின் தொடக்கத்தில் ''வீர உதையமார்த் தாண்டவர்மர் திருப்பாப்பூர் மூத்தவராய நாம்'' என்று காணப்படுகின்றது. இதே கல்வெட்டில் மன்னன் தானத்தை எந்த இடத்தில் அமர்ந்து வழங்கினான் என்று கூறுமிடத்தில் ''களக்காடான சோழகுலவல்லிபுரத்து வீர மார்த்தாண்டச் சதுர்வேதி மங்கலம் என்று நம் பேரால் வைத்த அகர சீமையில் புதிய வீட்டில் நாம் விடாயிருந்து'' என்று குறிப் பிடப்படுகிறது. உதையமார்த்தாண்டன் சிறைவாய் மூத்தவர் கல்வெட்டுக்கள் பலவும் களக்காட்டில் தம் பேரால் வீர மார்த்தாண்டச்சதுர்பேதி மங்கலம் என்ற அகரம் அமைக்கப் பட்டதைக் குறிப்பிடுகின்றன. இத் திருப்பாப்பூர் மூத்தவர் கல்வெட்டும், வீரமார்த்தாண்டச் சதுர்பேதி மங்கலம்'' என்று கல்வெட்டில் களக்காட்டில் அகரம் அமைக்கப்பட்டது என்று குறிப்பிடப்படுவதால் ''உதயமார்த்தாண்டன் சிறைவாய் மூத்தவரும்'' திருப்பாப்பூர் மூத்தவரும் ஒருவரே என்று உறுதியாகக் கூறலாம்.

**பிற பெயர்கள் :**

மேற்கூறிய பெயர்களைத் தவிர வீர உதயமார்த் தாண்டன் வேறு சில பெயர்களில் கல்வெட்டுக்களில் தோன்று

கின்றான். அவற்றுள் குற்றாலம் குற்றாலநாதர் கோயில் கல்வெட்டொன்றில் "வீரமார்த்தாண்ட பராக்கிரம பாண்டிய தேவன்" என்று ஒரு பெயர் காணப்படுவது குறிப்பிடத்தக்கது இக்கல்வெட்டு, கொல்லம் 707-ம் ஆண்டைச் சேர்ந்தது. 1918-ம் ஆண்டு மத்திய தொல்பொருள் ஆய்வுத்துறை ஆண்டறிக்கையில் "வீரமார்த்தாண்ட பராக்கிரமபாண்டியன்', என்ற மன்னன் யார் என்பது சரியாகத் தெரியவில்லை, என்று குறிப்பிடுகிறது. இருப்பினும், உதைய மார்த்தாண்டன் தன்னுடைய தென்காசி வெற்றிக்குப் பிறகு தென்காசிப் பாண்டிய மன்னனாகிய பராக்கிரம பாண்டியன் பெயரையும் இணைத்து "வீர மார்த்தாண்ட பராக்கிரம பாண்டியன்" என்று தன் பெயரைக் குறிப்பிட்டிருக்கலாம் என்று கருத்து தெரிவிக்கப்பட்டுள்ளது.

இக்குற்றாலம் கல்வெட்டு கோயில் திருப்பணி பற்றியும், வழிபாடு நடத்துவதற்காக புதிய ஆட்கள் அமர்த்தப்பட்ட தனையும் குறிப்பிடுகிறது. இதே ஆண்டில் தென்காசியில் உதையமார்த்தாண்டன் கல்வெட்டொன்று பொறிக்கப்பட்டுள் ளது. அக்கல்வெட்டு தென்காசி கோயில் வழிபாடின்றி பாழாய்க்கிடந்ததாயும், உதையமார்த்தாண்டன், பாரக்கிரம பாண்டியன் கட்டிய கோயிலுக்கு திருப்பணி செய்வித்து, குடமுழுக்கு நடத்தி வைத்ததாகவும் குறிப்பிடுகிறது. இரண்டு கல்வெட்டும் ஒரே ஆண்டில் வெட்டப்பட்டிருப்பதாலும், ஒரே செய்தியைத் தருவதாலும் உதயமார்த்தாண்டன் குற்றாலம் திருப்பணியையும் செய்திருத்தல் வேண்டும் - மேலும் உதைய மார்த்தாண்டனுக்கு வீரமார்த்தாண்டன் என்று ஒரு பெயரும் உண்டு என்று முன்னமே கூறப்பட்டது. ஆதலால் வீர மார்த்தாண்ட பராக்கிரம பாண்டியதேவன் என்ற பெயர் உதையமார்த்தாண்டனையே குறிப்பிடுவதாகும் எனக் கொள்ளலாம்.

மேலும் "சங்கிலி வீர மார்த்தாண்டன் சிறைவாய் மூத்தவர்" என்ற மன்னன் திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் கல்வெட்டில் குறிக்கப்படுகிறான். இக்கல்வெட்டு கொல்லம் 721-ம் ஆண்டைச் சேர்ந்தது இப்பெயரிலும் "வீரமார்த்தாண்டன், "சிறைவாய் மூத்தவர்" என்று வீர உதையமார்த்தாண்டனுக்குரிய சிறப்புப்பெயர்கள் காணப்படுவதால் "சங்கிலி வீர மார்த்தாண்டன்" என்ற பெயரும், வீர உதையமார்த்தாண்டனுக்கு உரியது என்று உறுதியாகக் கூறலாம்.

### செண்பகராமன் உதையமார்த்தாண்டனா ?

செண்பகராமன் என்ற பெயர் உதையமார்த்தாண்டனுடைய சிறப்புப் பெயர்களுள் ஒன்றாக இருத்தல் வேண்டுமென்று 1916–17-ம் ஆண்டு இந்திய தொல்பொருள் ஆய்வுத்துறை ஆண்டறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் செண்பகராமன் என்பது உதையமார்த்தாண்டனின் சிறப்புப் பெயர் அல்ல என்பது, செண்பகராமன் நல்லூர் பெருமாள் கோயில் கல்வெட்டுக்களை ஆய்வு செய்யின் விளங்கும். இக் கோயிலில் இராமவர்மன் என்பவனின் கொல்லம் 720-ம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்று உள்ளது. அக்கல்வெட்டு இராமவர்மன் தன் பெயரில் செண்பகராமன் சந்தி என்ற வழிபாட்டை ஏற்படுத்தியதாகக் குறிப்பிடுகிறது. எனவே, இராமவர்மன் என்பவனின் சிறப்புப் பெயரே 'செண்பகராமன்" என்ற பெயர் இருந்திருப்பதை அறிய முடிகின்றது.

மேலும் இக்கோயிலில் உள்ள இறைவன் வீர உதைய மார்த்தாண்டன் கல்வெட்டில் (கொல்லம் 703) ஜெகன்னாதப் பெருமாள் என்று குறிப்பிடப்படுகிறார் ஆனால் இராமவர்மர்

கல்வெட்டில் (கொல்லம் 720) "செண்பகராமன் விணாக ராழ்வார்" என்று பெயர் மாற்றம் பெற்றுள்ளார். எனவே இராமவர்மன் தன் பெயரில் இறைவன் பெயரை விளங்கச் செய்துள்ளார் என்பதும் தெளிவாகிறது. இவற்றின் மூலம் செண்பகராமன் என்ற பெயர் உதையமார்த்தாண்டனுக்கு உரியதன்று என்பது புலப்படுகிறது.

## உதயமார்த்தாண்டன் அரண்மனைகள்

உதயமார்த்தாண்டன் தனக்கென பல அரண்மனைகள் கொண்டவனாய் விளங்கியிருக்கின்றான். அவை அவனது புகழை பெரிதுபடுத்திக் காட்டவல்லதாய் அமைந்துள்ளன. கல்வெட்டுக்களின் வாயிலாக அவனுடைய அரண்மனைகள் இருந்த ஊர்களை அறிய முடிகிறது. களக்காடு, வடசேரி, தென்காசி ஆகிய ஊர்களில் உதையமார்த்தாண்டனின் அரண் மனைகள் இருந்திருக்கின்றன. இவற்றுள் களக்காடு அரண் மனை மட்டுமே அவனால் உருவாக்கப்பட்டதாகும்.

"களக்காட்டில் நம் புதிய வீட்டில்" என்று களக்காட்டு அரண்மனையை புதியவீடு எனக் கல்வெட்டுகள் குறிப்பிடு வதால், அவன் பயன்படுத்திய பிற அரண்மனைகள் ஏற்க னவே இருந்தவை என்பது புலனாகிறது மேலும் களக்காடு அரண்மனையிலேயே உதையமார்த்தாண்டன் அதிக காலம் தங்கியிருந்திருக்கின்றான். பெரும்பான்மையான தானங்கள் களக்காட்டு அரண்மனையிலிருந்தே வழங்கியுள்ளான்.

தென்காசியில், பாண்டியனுடைய அரண்மனையையே தன் அரண்மனையாகப் பயன்படுத்தியிருக்க வேண்டும். "தென்காசி வீரபாண்டியன் வீடு" என்று தென்காசி அரண் மனையைக் கல்வெட்டுகள் குறிப்பிடுவதன் மூலம் இதனை அறிய முடிகிறது.

அரண்மனைகளைத் தவிர சில தனிப்பட்ட இடங்களி லிருந்தும் உதைய மார்த்தாண்டன் ஆணைகள் பிறப்பித்துள் ளான். திருக்களூர் பெருமாள் கோவிலில் உள்ள மதுரகவி பந்தலில் சோமீசன் கட்டிலில் அமர்ந்தும், வள்ளியூர் சைவ சிகாமணி பட்டர் வீட்டிலிருந்தும், சுசீந்திரம், உட்கோயிலில் அமர்ந்தும், பல பணிகளுக்காக ஆணையிட்டுள்ளான்.

## இவனது பெயரில் இறைவன், ஊர், சந்திகள்:

உதைய மார்த்தாண்டன் தனது பெயரினை இறை வனுக்கும், வழிபாடுகளுக்கும், அகரங்களுக்கும் சூட்டியுள்ளான். களக்காட்டில் ஒரு அகரத்தினை அமைத்து அதற்குத் தன் பெயரினைச்சூட்டி 'வீரமார்த்தாண்டச் சதுர்வேதி மங்கலம்' என்று விளங்கச் செய்துள்ளான்.

அம்பாசமுத்திரம் அருகில் உள்ள பள்ளக்கால் என்ற ஊரில் ஒரு அகரம் ஏற்படுத்தி அதற்குத் தன் பெயரினை இட்டு 'உதயமார்த்தாண்டன் சதுர்வேதி மங்கலம்' என்று விளங்கச் செய்ததைப் பள்ளக்கால் கோவில் கல்வெட்டு உணர்த்துகின்றது.

பள்ளக்கால் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவன் 'உதயமார்த்தாண்ட விண்ணகராழ்வார்' என்றும், எரிச்சகுளம் கோயிலில் இறைவன் 'வீரமார்த்தாண்டேஸ்வரமுடைய நாயனார்' என்றும் இம் மன்னனின் பெயரைப் பெற்று விளங் கியதைக் கல்வெட்டுகளின் வாயிலாக அறிய முடிகிறது. இவ் விரு தெய்வங்களைத் தவிர களக்காட்டில் ஒரு பிள்ளையாரும், சுசீந்திரத்தில் ஒரு பிள்ளையாரும் 'வீரமார்த்தாண்டப் பிள்ளையார்' என்றும், 'உதையமார்த்தாண்டன் விநாயகர்' என்றும் பெயர் பெற்றுள்ளனர்

உதையமார்த்தாண்டன் பெயரில் 'உதையமார்த்தாண்டன் சந்தி' 'வீரமார்த்தாண்டன் சந்தி' என்று பல கோவில்களில் வழிபாடுகள் தொடங்கி வைக்கப் பெற்று அவை தொடர்ந்து செயல்படுவதற்காகத் தானங்கள் வழங்கப்பட்டுள்ளன. நாகர்கோவில் நாகர், சுசீந்திரம் கோயில் இறைவன், ஸ்ரீவில்லிப்புத்தூர் சூடிக்கொடுத்த நாச்சியார், கன்னியாகுமரி பகவதி நாச்சியார், திருநெல்வேலி நெல்லையப்பர், ஆகிய தெய்வங்களுக்கு 'உதயமார்த்தாண்டன் சந்தி' என்ற வழி பாடு நடத்தப்பட்டுள்ளன.

உதையமார்த்தாண்டன் பெயரில் ஸ்ரீவில்லிபுத்தூரிலும் நலுக்கல் என்ற ஊரிலும் மடங்கள் அமைந்துள்ளன. வேப்பங் குளம் என்று ஊர் உதையமார்த்தாண்டனால் பிரம்மதேசம் கயிலாயமுடையார்க்குத் தானமாக வழங்கப்பட்ட பின்பு 'வீர மார்த்தாண்டப் பேரேரி' என்று பெயர் மாற்றம் பெற்றுள் ளது.

### திருப்பணிகள் :

உதையமார்த்தாண்டன் தன்னுடைய பாண்டிய நாட்டு வெற்றிக்குப் பிறகு தான் செய்த பெரும்பணியாகக் கருவது களக்காட்டில் 'வீரமார்த்தாண்டச் சதுர்பேதி மங்கலம்' என்று தம் பெயரில் அகரம் அமைத்த செயலாகும். களக்காட்டில் புதிய அரண்மனையும் எழுப்பியுள்ளான். களக்காட்டு அரண் மனை அவனால் அமைக்கப்பட்ட 'புதிய வீடு' என்று கல் வெட்டுகள் கூறுகின்றன.

களக்கட்டுக்கோயிலில் இம்மன்னனின் கல்வெட்டுகள் பல காணப்படுகின்றன. களக்காட்டு கோயிலில் எந்தப்பகுதி யும், உதயமார்த்தாண்டன் காட்டியதாக கல்வெட்டுகளில்

குறிக்கவில்லை இருப்பினும் உதையமாத்தாண்டன் சத்திய வாக்கீசர் கோயில் முகமண்டபத்தினையும் அம்மன் கோயிலினையும் எழுப்பியிருக்கலாம் என்று கூறலாம். களக்காட்டில் உள்ள 'வீரமார்த்தாண்டன்' கோயில் இம்மன்னனால் கட்டப்பட்டிருக்கலாம். இப்பிள்ளையார் கோயிலுக்கு உதையமார்த்தாண்டனின் பெயரினைக் கொண்டுள்ளதும் மேற்கூறிய கருத்திற்கு வலுவூட்டுவதாக அமைந்துள்ளது. அம்பாசமுத்திரம் அருகிலுள்ள பள்ளக்கால் என்ற ஊரில் அகரம் அமைந்துள்ளான். அவ்வகரத்தில் ஒரு விஷ்ணு கோயிலும் எழுப்பியுள்ளான் இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் பெருமாள் 'உதைய மார்த்தாண்ட விண்ணகராழ்வார்' எனப் பெயர் பெற்றுள்ளார். பள்ளக்கால் அகரமும் கோயிலும் உதயமார்த்தாண்டனால் கி பி 1503ல் உருவாக்கப்பட்டிருத்தல் வேண்டும்

தென்காசி விசுவநாதர் கோயில் தென்காசி பாண்டியர்களுக்கும் உதயமார்த்தாண்டனுக்கும் ஏற்பட்ட போரின் விளைவால் சிறிது காலம் வழிபாடின்றி பாழடைந்து கிடந்திருத்தல் வேண்டும். உதைய மார்த்தாண்டன் கொல்லம் 700ல் (கி.பி 1525) பராக்கிரம பாண்டியனால் எழுப்பப்பெற்ற விசுவநாதர் கோயிலைப் புதுக்கி குடமுழுக்கும் செய்து வழிபாடுகள் நடத்துவதற்காக புதிய ஆட்களையும் அமர்த்தியுள்ளான்.

குற்றாலம், குற்றாலநாதர் கோயிலிலும் திருப்பணிகள் செய்து, வழிபாடுகள் நடத்துவதற்காக புதிய ஆட்கள் அமர்த்தி வழிபாடு தொடர்ந்து நடைபெற உதயமார்த்தாண்டன் ஏற்பாடுகள் செய்துள்ளான்

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில், அறுபத்து மூன்று நாயன்மார்கள் செப்புத்திருமேனிகளையும், செய்து வைத்து, நெல்லையப்பர் திருக்கல்யாணத் திருவிழாவின் போது எழுந்தருளச் செய்துள்ளான். நெல்லையப்பர் கோயிலில்

மகா மண்டபத்தின் முன் அமைந்துள்ள கலையழகு வாய்ந்த இசைத்தூண் மண்டபத்தினை உருவாக்கியவனும் உதைய மார்த்தாண்டனே ஆவான்.

ஸ்ரீவில்லிபுத்தூர் சூடிக்கொடுத்த நாச்சியார் கோயிலில் வீரமார்த்தாண்டன் சந்தி ஏற்படுத்தி அது நடைபெறத் தானம் வழங்கியுள்ளான். வீரமார்த்தாண்டன் மடத்தினை ஏற்படுத்தி, அதில் தினசரி 33 பிராமணர்களுக்கு உணவு வழங்குவதற்காகத் தானம் வழங்கியுள்ளான். முட்டம் என்ற ஊரில் உள்ள ஒரு சிதைந்த கல்வெட்டு, உதையமார்த்தாண்டன், அவ்வூர் வாழ் பரதவர்களுக்கு சில சலுகைகள் நல்கியதைக் குறிப்பிடுகிறது. உதயமார்த்தாண்டன் திருவிதாங்கூர் மன்னர்களிலேயே பாண்டிய நாட்டின் ஒரு பகுதியினை தொடர்ந்து 46 ஆண்டுகள் தன் ஆளுகைக்குள் வைத்திருந்தவன் என்ற பெருமையினையும், பல்வேறு திருப்பணிகளைச் செய்தவன் என்ற பெருமையினையும் பெற்று விளங்குகின்றான்.

உதவிய நூல்கள்

A.R.E. 1935–36
A.R.E. 1916–17
A.R.E. 1928
A.R.E 1926–27
தமிழக வரலாறும் பண்பாடும் கே.கே. பிள்ளை
T.A.S. Vol. II part II
T.A.S. Vol–VII part II
T.A.S. Vol–VI part I
கன்னியாகுமரிக் கல்வெட்டுகள் தொகுதி 1,2,3. தமிழ் நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை

# சூரியனார் கோயில்

ஆர் ஜெயராமன் எம்.ஏ;பி எட்;

தஞ்சாவூர்

சூரிய வழிபாடு என்பது தொன்றுதொட்டு நிலவிவரும் ஒரு வழிபாடாகும். நம் நாட்டில் மட்டுமன்றி ஐரோப்பா, தென் அமெரிக்கா, சீனா முதலிய நாடுகளிலும் சூரியன் வழிபாடு நடைபெற்று வந்துள்ளது. பழங்கால எகிப்தியர்கள் ஆசன் என்ற பெயரால் சூரியனை வணங்கினர். இந்தியா வில் பண்டைப் பேரரசர்களில் ஒரு பிரிவினர் தங்களைச் 'சூரிய குலத்தவர்'[1] என்று பெருமையுடன் கூறிக் கொண்டனர். நம் தமிழ் நாட்டில் தற்பொழுதும் 'பொங்கல் திருநாளை' சூரிய வணக்கமாகவே எண்ணி கொண்டாடுகின்றனர் இத் தகைய சூரிய வழிபாடு பண்டைக்காலம் முதல் இருந்தமை பற்றியும், தமிழ் நாட்டில் சூரியனுக்கென்று அமைக்கபட்ட 'சூரியனார் கோயில்' என்னும் தலம் பற்றியும் ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## இலக்கியத்தில் சூரிய வழிபாடு

சூரியனுக்கும் சந்திரனுக்கும் தமிழகத்தில் தனித் தனிக் கோயில்கள் கி.பி. 2ஆம் நூற்றாண்டுக்கு முன்பே இருந்தன என்பதைப் 'பகல்வாயில் உச்சிக்கிழான் கோட்டம் நிலாக் கோட்டம்'[2] என்னும் சிலப்புத் தொடரில் 'உச்சிக் கிழான் கோட்டம் என்பது சூரியன் கோயில், நிலாக்கோட்டம் என்பது சந்திரன் கோயில்' என்று கூறுவதாலும் தெளிவாகிறது. சிலப்பில் ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும் என்று சூரியன் போற்றப்படுவதும் குறிப்பிடத்தக்கது.

சம்பந்தர் பாண்டி நாட்டிற்குப் புறப்பட்ட போது 'உறு கோள் தானும் தீய என்று கூறும் நாவுக்கரசர் வாக்கானும்,

பரசுவதும் நம்பெருமான் கழல்கள் என்றால் பழுதணையாது' என்று கூறிச் சம்பந்தர் பாடும் கோளறு பதிகத்தானும், 'மகத்திற் புக்கதோர் சனி' என்னும் சுந்தரர் வாக்கானும் சூரியன் முதலிய கோள்களில் சில நன்மையும் தீமையும் பயக்கும் எனவும், அவ்வமயம் அவற்றை வழிபட்டால் அவற்றால் வரும் தீமைகள் நீங்கும் எனவும் அறியப்பெறு வதால் நவக்கிரகங்களில் ஒன்றான சூரியனுக்கும் வழிபாடு இருந்து வந்ததை அறியலாம்.

இவ்வாறு முற்காலத்தில் தனித்தனியே சூரியனுக்கு அமைக்கப்பட்ட சூரியன் கோயில்கள் பிற்காலத்தில் சிவன் கோயில்களில் பரிவார ஆலயங்களாகவும், நவக்கிரகங்களில் ஒன்றாகவும் வைத்து வழிபடும் வழக்கம் இடம் பெற்றுள்ளது[3].

### கல்வெட்டுக்களில் சூரியன்

தென்னிந்தியாவிற் சூரிய வழிபாடு இருந்தமை பற்றியும், சூரியனுக்கென்று தனி உருவங்கள் இருந்தமையையும் கல் வெட்டுக்களினாலும் அறியலாம். தஞ்சை இராசராசேச் சுரத்தில் உள்ள முதல் இராசராசனின் 29 ஆம் ஆட்சி யாண்டு கல்வெட்டொன்று அவனுடைய அரசியல் அதிகாரி களுள் ஒருவன் தஞ்சைப் பெரிய கோயிலுக்கு 'சூர்யதேவனின் செப்புத்திருமேனி' ஒன்று செய்து கொடுத்ததாகக் கூறுகிறது. மேலும் திருக்கோடிக்காவிலுள்ள இவனுடைய 11ஆம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டொன்று இளையன் ஆதித்தன் பிடாரன் என்பவன் இங்கு ஒரு சூரியன் திருமேனி செய்து கொடுத் ததாகக் கூறுகிறது[4]. இதுபோல முதல் இராசேந்திரசோழன் காலத்திலும் சூரியனுக்குக் கோயில் இருந்தது என்பதை அழகாதிரிபுத்தூர், எண்ணாயிரம் என்ற ஊர்களிலுள்ள கல் வெட்டுக் குறிப்புக்களாலும் அறியலாம்[5] முதற் குலோத்

துங்கசோழன் தென்ஆர்க்காடு மாவட்டம் திருமாணிக் குழி கோயிலிலுள்ள சூரிய தேவருக்கும் சேத்திரபாலருக்கும் இரண்டு நந்தாவிளக்குகள் தானமாக அளித்துள்ளான் [6] பரகேசரிவர்மன் தன்னுடைய 9ஆம் ஆட்சியாண்டில் திருச்சி மாவட்டம் திருப்பராய்த்துறை என்ற ஊரிலுள்ள கோயிலுக்கு சூரிய தேவனின் திருமேனி ஒன்றைச் செய்து கொடுத்துள்ளான் [7] சடாவர்மன் விரபாண்டியனும் தன்னுடைய 10ஆம் ஆட்சியாண்டில் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள திருப்பத்தூரில் ஒரு திருமேனி செய்து கொடுத்துள்ளான். [8] மூன்றாம் இராசேந்திரன் கோயிலூர் உசாத்தான முடையார் கோயிலிலுள்ள சூரிய தேவனுக்கு விளக்குகள் எரிக்க நிலம் தானமாக வழங்கியுள்ளான். [9] இவற்றை நோக்கும் போது சிறந்த பேரரசர்கள் சூரிய தேவனிடத்தில் எவ்வளவு பக்தி கொண்டிருந்தனர் என்பது தெளிவாகிறது.

தமிழ்நாட்டில் சூரியனுக்கென்ற தனிக்கோயில் 'சூரியனார் கோயில்' என்னும் சிற்றூரில் தான் அமைந்துள்ளது. திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம், வைகல் மாடக்கோயில், நன்னிலம் பெருங்கோயில், திருப்பருதி நியமம், ஆரினன்குடி முதலிய சிவதலங்களில் சூரியன் இறைவனைப் பூசித்து பேறு பெற்றதால் அக்கோயில்களிலும் தனியிடம் உள்ளது.

## சூரியனார் கோயில்

சூரியனார் கோயில் என வழங்கும் இத்தலம் தஞ்சை மாவட்டம் திருவிடை மருதூர் வட்டத்திலுள்ள ஆடுதுறைக்கு வடக்கே 2 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரை ஒட்டி காவிரி ஆறு ஓடுகிறது. திருவிடைமருதூரை மையமாகக் கொண்டு சுற்றியுள்ள சிவதலங்களில் இவ்வூரும் ஒன்று. இவ்வூருக்கு கும்பகோணம் மயிலாடுதுறை போன்ற நகரங்களிலிருந்து பேருந்துகள் செல்கின்றன.

## கோயில் பெயர்க் காரணம்

இச்சூரியனார் கோயில் முதற்குலோத்துங்க சோழனால் கட்டப்பட்டது. இங்குள்ள இவனுடைய கல்வெட்டொன்று கோயில் கட்டப்பட்ட காலத்தில் இக்கோயில் குலோத்துங்க சோழ மார்த்தாண்டாலயம்' என்று வழங்கப்பட்டதாகக் கூறு கிறது. நாளடைவில் இப்பெயர் மறைந்து விட்டது. சூரியனே முக்கியக் கடவுளாதலின் பிற்காலத்தில் 'சூரியனார் கோயில்' என்று அழைக்கப்படலாயிற்று.

## கோயில் கட்டப்பட்ட வரலாறு

முதற்குலோத்துங்கன் காலத்தில் கன்னோசி நாட்டை ஆண்டுவந்த அரசன் மதனபாலதேவனோ அன்றி அவன் மகன் கோவிந்தசந்திரனோ கி.பி. 1111ல் கங்கை கொண்ட சோழபுரத்துக்கு வந்து அங்குள்ள கோயிலுக்கு நிவந்தமும் வழங்கியுள்ளான் என்று அங்குள்ள முற்றுப் பெறாத கல்வெட் டொன்று கூறுகிறது. இவர்கள் சூரியனுக்குத் தனிக்கோயில் எடுப்பித்து வழிபாடு செய்யும் வழக்கமுடையவர்கள். அவர் களைப் போல் குலோத்துங்க சோழனும் சோழ நாட்டில் இவ்வூரில் சூரியனுக்கு கோயில் எடுப்பித்து அதற்கு குலோத்துங்க சோழ மார்த்தாண்டாலயம் என்னும் பெயரிட்டு நாள் வழி பாட்டிற்கு நிவந்தங்களும் வழங்கியுள்ளான்.[10] அக் கோயிலின் ஒரு புறத்தில் காசி விசுவநாதரும் விசாலாட்சியும் வைக்கப்பட்டுள்ளனர். இதனை நோக்கின் முதற் குலோத்துங்க சோழன் கன்னோசி வேந்தர்களுடன் கொண்ட தொடர்பால் இக்கோயில் கட்டப்பட்டது என்பது தெளிவாகிறது.

## கோயில் அமைப்பு

சூரியனார் கோயிலின் வாயில் மேற்கு நோக்கி அமைந் துள்ளது. கோயிலின் நுழைவாயிலுக்கருகில் இடது பக்கத்

தில் சூரிய புஷ்கரணி என்னும் (திருக்குளம்) தீர்த்தம் காணப் படுகிறது. முன் உள்ள இராஜகோபுரம் சுமார் 60 அடி உயரம் உடையது. இராஜகோபுரத்தை கடந்து உள்ளே சென்றால் வெளிமண்டபமும் அதனையடுத்து அர்த்த மண்டபமும் மகா மண்டபமும் காணப்படுகின்றன. மகாமண்டபத்தின் ஒரு பகுதி யில் காசி விசுவநாதரும் விசாலாட்சியும் காணப்படுகின்றனர் கருவறையில் சூரியன் தன் இருதேவியருடன் நின்ற நிலையில் மேற்கு நோக்கிக் காணப்படுகிறார் சூரியனுக்கு நேர் எதிரே அர்த்த மண்டபத்தில் குருபகவான் சூரியனுடைய வெப் பத்தைத் தணிக்கும் பொருட்டு காணப்படுகிறார். இம் மண்ட பத்தைக் 'குருமண்டபம்' என்று இக்காலத்தில் வழங்குகின்ற னர். வெளிமண்டபத்தின் தெற்கில் நாலுகால் மண்டபம் ஒன்று காணப்படுகிறது

## கட்டட அமைதி

இக்கோயிலின் கருவறையும் முகமண்டபமும் மட்டும் முதற்குலோத்துங்க சோழன் காலத்தில் கட்டப்பட்டதாகும். இவன் கட்டினான் என்பதற்கு சான்றாக இவனுடைய கல் வெட்டுகள் கருவறையின் அதிட்டானப் பகுதியில் காணப்படு கின்றன இதனை நோக்கும்போது குலோத்துங்கன் சூரிய னுக்கு மட்டும் கருங்கல்லால் கற்றளி எடுப்பித்தான் என்பது தெளிவாகிறது. இது தவிர விஜயநகரர் கல்வெட்டும் காணப் படுவதால் சோழருக்குப் பிறகு விஜயநகர மன்னர்கள் இக் கோயிலைத் திருப்பணி செய்யும்போது சூரியன் தவிர்த்த மற்ற எட்டு கிரகங்களுக்கும் பரிவார தெய்வங்களாகத் தனித் தனி கோயில்கள் செங்கல்லால் கட்டியுள்ளனர், என்பதும் தெரிகிறது.

கருவறையின் உபபீடம் உயரமாகக் காணப்படுகிறது. உபபீடத்தின் பெரும்பகுதி பூமியில் மறைந்து உள்ளது உப

பீடத்திற்கு மேல் அகலமான பட்டிகை காணப்படுகிறது. இது விமானத்தின் உயரத்தைக் கூட்டுவதற்காகவும், விமானம் பாதுகாப்பாக நீண்ட நாள் இருப்பதற்காகவும் அமைக்கப் பட்டுள்ளது. உபபீடத்திற்கு மேல் கபோடமும் அதனையடுத்து பத்ம ஜகதியும் அழகு செய்கின்றன. ஜகதி தாமரை இதழ் விரிந்தது போல அழகுடன் காணப்படுகிறது. ஜகதிக்கு மேல் விருத்த குமுதமும் அதனையடுத்து கண்டம் பட்டிகை வேதிகை முதலியனவும் அணி செய்கின்றன. கருவறையைச் சுற்றி மூன்று பக்கங்களிலும் மூன்று தேவகோட்டங்கள் காணப்படுகின்றன. தேவகோட்டங்களில் சிற்பங்கள் ஏதும் இல்லை. சுவரில் அரைத்தூண்கள் உள்ளன. சுவரின் வல இடதுபக்கங்களில் ஓரிடத்தில் மட்டும் கும்பபஞ்சரம் ஒன்று அதிக வேலைப்பாடின்றி காணப்படுகிறது. மேற்பகுதியில் கொடுங்கை சற்று வளைந்து உள்ளது. இதற்கு மேலுள்ள கிரீவமும் சிகரமும் அண்மையில் கட்டப்பட்டுள்ளது. கிரீவத் தின் நான்கு பக்கங்களிலும் சோழர்காலச் சிற்பமான நான்கு கற்குதிரைகள் நிற்கின்றன. முகமண்டபத்தை ஒட்டி அமைந் துள்ள வெளிமண்டபம் நாயக்கர் காலத்தில் கட்டப்பட்டது. முக மண்டபத்தையும் அர்த்தமண்டபத்தையும் பிற்காலத்தில் செங்கற்களைக் கொண்டு இணைத்துக் கட்டியிருப்பது தெளி வாகத் தெரிகிறது. இராஜகோபுரத்தின் வடபுறம் பிரகாரத்தில் வாகன மண்டபமும், தென்புறம் வசந்த மண்டபமும், அதனை ஒட்டி விநாயகர் கோவிலும் உள்ளன, மதிலுடன் கூடிய பிரகாரத்தின் வடகிழக்கு மூலையில் பாகசாலையும் (மடப் பள்ளி) உள்ளன. இவை மராட்டியர் காலத்தில் கட்டப் பட்டவையாகும். திருச்சுற்றின் மேற்கு திசையில் குதிரையும் பலிபீடமும், கொடிமரமும் அழகுடன் விளங்குகின்றன.

### சூரியன் உருவ அமைதி

சூரியன் மேற்கு நோக்கி நின்ற கோலத்தில் காட்சிதரு கிறார். அவருக்கு இருபுறங்களிலும் உஷாதேவி, சாயாதேவி என்ற இருமனைவியர் உளளனர் சூரியன் தன் இருகைகளி லும் தாமரைமலரை ஏந்தியுள்ளார். தலையில் கரண்ட மகுட மும், பின்புறம் ஒளிவட்டமும் அழகுசெய்கின்றன காதுகளில் பத்ரகுண்டலங்களும் மார்பில் ஆரமும் முப்புரிநூலும் அணி செய்கின்றன. இடையில் உதரபந்தம் கட்டப்பட்டுள்ளது. காலகளில் பாடகங்கள் உள்ளன. இடுப்பு முதல் தொடை வரையிலான இடையமதி காணப்படுகிறது. கருங்கற்சிற்பமான இச்சூரியனின் உயரம் 7½ அடி. தேவியரின் உயரம் 5½ அடி ஆகும்.

### நவக்கிரகங்களில் சூரியன்

நவக்கிரகங்களான சூரியன், சந்திரன், செவ்வாய், புதன் குரு, சுகரன், ராகு, கேது என்பவைகளை எங்கெங்கு எவ் விடத்தில் வைத்துப் பிரதிட்டை செய்ய வேண்டும் என்று சிவாகம, வைதீக முறைகளில் கூறப்பட்டுள்ளன. வைதீக முறைப்படி மூன்றுமுறைகளில் அமைக்கலாம். அவை 1) சூரியன் பதும பீடத்தின் நடுவே மேற்கு நோக்கி இருக் கவும் அவனை முன்னும் பின்னும் பக்கங்களிலும் மற்ற எட்டு கிரகங்களும் அவரவர் இடததிலிருந்து சூரியனை நோக்கி இருக்கப் பிரதிட்டை செய்வது 2) சூரியன் நடுவே மேற்கு நோக்கி இருக்க மற்ற எட்டும் அவரவர் இடத்திலி ருந்து சூரியனைப் பின்புறத்தே வைத்து திருப்பி இருக்கப் பிரதிட்டை செய்வது 3) சூரியன் மேற்கு நோக்கி இருக்க மற்ற எட்டும் வக்கிரமாக வெவ்வேறு திசைகளை நோக்கி இருக்கப் பிரதிட்டை செய்வது இனி சிவாகம

முறைப்படி சூரியன் நடுவே மேற்கு நோக்கி நிற்க, அவனைச் சுற்றி தென்புறம் உள்ள புதன் வடக்கு நோக்கியும், சனி குரு இராகு என்ற மூன்று கிரகங்களும் கிழக்கு நோக்கியும், சுக்கிரன் தெற்கு நோக்கியும், கேது சந்திரன் செவ்வாய் ஆகிய மூன்றும் மேற்கு நோக்கியும் இருக்கப் பிரதிட்டை செய்வதாகும். சூரியனார்கோயிலிலுள்ள நவக்கிரகங்கள் இம்முறையில்தான் அமைக்கப்பட்டுள்ளன. இதனைப் பின் வரும் விளக்கப்படத்தால் அறியலாம்.




| | | |
|---|---|---|
| சனி<br>கிழக்கு முகம் | குரு (வியாழன்)<br>கிழக்கு முகம் | இராகு<br>கிழக்கு முகம் |
| புதன்<br>வடக்கு முகம் | சூரியன்<br>மேற்கு முகம் | சுக்கிரன் (வெள்ளி)<br>தெற்கு முகம் |
| அங்காரகன்<br>(செவ்வாய்)<br>மேற்கு முகம் | சந்திரன்<br>மேற்கு முகம் | கேது<br>மேற்கு முகம் |

இம முறையை ஒட்டியே திருவையாறு கண்டியூர், திருச்சியை அடுத்த குழுமணி, அன்பில் ஆலந்துறை முதலிய இடங்களிலும் அமைந்துள்ளன. இது தவிர இராமநாதபுரம் மாவட்டம் ஒன்பதாங்கல் (நவ பாஷாணம்) அதாவது தேவி பட்டினம் என்னும் இடத்தில் கடலில் நீண்ட பலகை போன்ற ஒன்பது கற்களை நவக்கிரக அமைப்பில வைத்துள்ளனர். சில இடங்களில் நீணட கம்பம் போன்ற ஒன்பது கல் வடிவு களையும், சில இடங்களில் கல் விக்கிரகங்களும் வைத்துள்ள னர். திருப்பைஞ்ஞீலியில் ஒன்பது குழிகளை அமைத்து நவக்கிரகம் என வழிபடுகின்றனர்.

## கல்வெட்டுச் செய்திகள்

இக்கோயிலில் முதற் குலோத்துங்க சோழனின் கல்வெட்டு இரண்டும், விஜய நகரர் கல்வெட்டு ஒன்றும் காணப்படுகிறது. முதற் குலோத்துங்கனின் 44 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட் டொன்று கருவறையின் தெற்கு அதிட்டானப் பகுதியில் காணப்படுகிறது. இது 'புகழ் சூழ்ந்த புணரி' என்னும் மெய்க்கீர்த்தியுடன் தொடங்குகிறது. இதில் இக் கோயிலின் பெயர் 'குலோத்துங்க சோழ மார்த்தாண்டாலயம்' என்றும், இறைவனின் பெயர் குலோத்தங்கன் பெயரால் வழங்கப் பட்டதாகவும் கூறுகிறது. மேலும் இககோயிலுக்கு வழங்கப் பட்ட தன்மதான விநோத சதுர்வேதி மங்கலம் என்னும் ஊரினை எவர் அதிக விலை கொடுத்து ஏலம் எடுக்கிறார் களோ அவரே அக்கோயிலின கணக்குக் காணி என்னும அதிகாரியாக நியமிக்கப்பட்டதாகக் கூறுகிறது. மேலும் இவனுடைய 48 ஆம் ஆட்சியாண்டு 245 ஆம் நாள், கல்வெட் டொன்று கருவறையின் வடக்கு அதிட்டானப் பகுதியில் காணப்படுகிறது. இது 'புகழ் மாது விளங்க' என்று தொடங்கு கிறது. கல்வெட்டின் இறுதிப் பகுதி கட்டடப் பகுதியில்

மறைந்துள்ளது. இரண்டு தனி நபர்களுக்கு கணக்குக் காணி என்னும் பதவி கொடுக்கப்பட்டதாகக் கூறுகிறது. அவர்கள் திருச்சிற்றம்பல முடையான், இருள் நீக்கி வேங்கட முடையான் என்பேராவர்.[12] இவர்கள் பொது ஒப்புதலின் பேரில் இவ் வுரிமைகளை ஏற்றுக் கொண்டனர். கி.பி 16ம் நூற்றாண்டைச் சார்ந்த விஜயநகரர் கல்வெட்டு கிருஷ்ணதேவராயரின் நன்மைக்காக அவனுடைய அரசியல் அதிகாரிகளுள் ஒருவன் வரியிலியாக நிலம் அளிக்கப் பட்டதாகக் குறிப்பிடுகிறது[13]

அடிக்குறிப்பு :-

1. கலிங்கத்துப்பரணி தாழிசை 365.
2. சிலப்பதிகாரம் - கனாத்திறம் உரைத்தகாதை.
3. சோழர் கோயிற் பணிகள் சோமசுந்தரம் பக்.17
4. Early chola temples - S.R. Balasubramanium page 176
5. ARE 289/1908, 26/1918; 6. 156/1902; 7. 177/1907;
8. 134/1908; 9. 198/1908;
10. பிற்கால சோழர் சரித்திரம். தி. வி. சதாசிவ பண்டாரத்தார். பக் 308.
11. ARE 229/1927; 12. 231/1927; 13. 230/1927

---

எழுத்துக்கள்

சித்திர எழுத்து, கருத்தெழுத்து, ஒலி எழுத்து என்று எழுத்துக்கள் வளர்ச்சியடைந்தன. இவை முறையே Pictogram, Ideogram, Phonogram எனப்பட்டன. உலகள வில் எழுத்துக்களைப் பற்றிய ஆய்வு சென்ற நூற்றாண்டில் சிறப்புப் பெற்றது ஆனால் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே யாப்பருங்கல விருத்தி உரையாசிரியர் சிலவற்றைக் குறிக் கிறார்

'உருவே உணர்வே ஒலியே தன்மையென
இருவகை யெழுத்தும் ஈரிரண்டாகும்'

பார்க்க தமிழ்நாட்டில் உருவஎழுத்து' என்ற இந்நூல் கட்டுரை

# சோழர் காலத்தில்-நாடும் அந்தணரும்

நாக. கணேசன், எம்.ஏ. பி.எட்.,

திருச்சி

## முன்னுரை

ஆட்சி பீடத்தில் அரசோச்சிய அனைத்து அரசர்களும் அந்தணரைப் போற்றி நிலக்கொடை வழங்கி நிலவுடைமை யாளர்களாக மாற்றுவதையும்; அரசியல் வாழ்வில் அதிகார மிக்க பொறுப்புகளை வழங்கி கௌரவித்தலையும்; தங்களின் மரபு வழியாகப் பின்பற்றி வந்தார்கள். மனு நெறி வழுவாது ஆட்சி செலுத்தியதும், அரசனும், அரசியும் பொன்னையும், பொருளையும் அள்ளி வழங்கியதும்; தாமாண்ட தரணியிலுள்ள நிலங்களை தானங்களாக பிரம்மதேயம், அகரம் மங்கலம் என்று வழங்கியதும் அந்தணர்களுக்கு அரசவையில் இருந்த செல்வாக்கைத் தெளிவுபடுத்துகின்றது.

## அந்தணரின் ஆளுமை

அந்தணர்கள் தங்களுடைய வேத வேள்விகளின் காரணமாக அளப்பரிய செல்வாக்கை நாட்டிலும் நாட்டு அரசனின் அவையிலும் பெற்றிருந்தார்கள்.[1] அரசாங்கத்தை நடத்துவதற்கு தேவையான தெய்வப்பலத்தை அரசுக்குத் தருகின்ற வலிமை வேள்விக்கு உண்டு என்பதை தமிழரசர் கள் நம்பியிருந்தனர்.[2] இந்நம்பிக்கையின் வெளிப்பாடாக, முதலாம் இராஜாதி ராஜனின் மெய்க்கீர்த்தி, 'அஸ்வ மேத யாகஞ் செய்து அரசு வீற்றிருந்த ஜெயங்கொண்ட சோழன்' என்று பேசுகிறது வேத வேள்விகளின் காரணமாக அந்தணர் களின் செல்வாக்கு அரசர்களின் அன்றாட நடவடிக்கைகளில் முக்கிய இடம் பெற்றிருந்தது.

**ஆட்சித்துறை**

அக்காலத்தில் ராஜகுருக்களாக விளங்கியவர்கள் அந்தணர்கள். மன்னராட்சியை நடத்தும் அரசியல் குருக்களாகவே விளங்கியுள்ளனர். ஆட்சியில் அவர்களுக்கும், அவர்களின் வழியினருக்கும் முக்கிய பதவிகளை வழங்கி கௌரவித்தவர்கள் சோழர்கள். கண்டராதித்திய சோழன் காலத்தில் அநிருத்தியன் என்னும் அந்தணன் அரசியலில் பெரும் பங்கு வகித்ததைப் போன்று[3] சர்வ சிவ பண்டிதர் என்பவர் முதல் இராஜராஜன் காலத்திலும், ஈசான சிவ பண்டிதர் முதல் இராஜேந்திரன் காலத்திலும் உடையார் சுவாமி தேவர் ஸ்ரீ கண்ட சிவர் என்பவர் முதல் குலோத்துங்கன் காலத்திலும் ஈச்வரசிவன் என்பவர் மூன்றாம குலோத்துங்கன் காலத்திலும் ராஜகுருக்களாக இருந்து பெரும்பங்காற்றிய அந்தணர்களாவார்கள்.[4]

ராஜகுருக்களின் வாய்மொழிகளுக்குப் பெரும்மதிபபு இருந்தது. முதலாம் குலோததுங்கன் தனது ராஜகுரு ஸ்ரீகண்ட சிவரின் அறிவுரைப்படி பிரம்மதேயம ஒன்றினை 108 சதுர்வேதிப் பட்டர்களுக்கு அளித்தான் என மைசூர் கல்வெட்டும், அமாவாசை தினத்தன்று 50 பிராமணர்களுக்கு உணவளிப்பதற்காக வைணவ மடம் ஒன்றினுக்கு இவன் நன்கொடை அளித்தான் என கி. பி. 1115-ஆம் ஆண்டு கல்வெட்டும் கூறுகின்றன.[5]

மன்னர்கள் இட்ட ஆணையினை ஏற்று நடத்தும் அதிகாரிகளாகவும் அந்தணர்கள் விளங்கினர். பராந்தக சோழனின் ஆணையை உத்திரமேருருக்கு கொண்டு வந்து நிறைவேற்றியவன் ஸ்ரீவங்கநகர் கரஞ்சை கொண்டைய கிரமவித்த பட்டனாகிய சோமாசிப் பெருமாள் என்னும் அந்தணனேயாவான்.[6]

படைகளை நடத்தும் படைத்தலைவர்களாகவும் அந்தணர்கள் விளங்கினர். அவர்கள் பிரம்மாதிராயர் என்ற பட்டப்பெயரோடு விளங்கினர். கிருஷ்ணன் இராமனான மும்முடிச் சோழ பிரம்மாராயன் என்பவன் முதல் இராஜராஜன் காலத்திலும் ஜயங்கொண்ட சோழ பிரம்மாதிராஜன் என்பவன் 2-ம் இராஜேந்திரன் காலத்திலும் ஞானமூர்த்தி பண்டிதனான மதுராந்தக பிரம்மாதிராஜன் என்பவன் முதல் குலோத்துங்கன் காலத்திலும் படைத்தலைவர்களாக விளங்கினர். இவர்கள் அனைவரும் அந்தணர்களே.[7]

இவ்வாறு ஆட்சித்துறையில் உள்ள ராஜகுருக்கள், அதிகாரிகள், சேனாதிபதிகள் போன்ற அனைத்து முக்கிய பதவிகளிலும் அந்தணர்கள் இடம் பெற்றிருந்தது, ஆட்சித் துறையில் அவர்களின் பெரும்பங்கைக் காட்டுகிறது எனலாம்.

### அந்தணருக்கே முன்னுரிமை

ஒரு சமூகத்தின் முன்னுரிமை என்பது மற்ற சமூகத்தை பின்னுக்கு தள்ளி தாழ்வடைய செய்யும் ஆதிக்கத்தன்மையைப் பொறுத்தே அமைகிறது. சோழர் ஆட்சியில் நாட்டு மக்களை கட்டுப்படுத்திய அதிகார பொறுப்புகள் அனைத்திலும் தங்களை ஐக்கியப் படுத்திக் கொண்ட அந்தணர்கள் அனைத்து காரியங்களிலும் முன்னுரிமை பெற்றதில் வியப்பில்லை. மண்ணிலிருந்து கிடைக்கும் புதையல்களில் பிராமணரல்லாதோர் பாதியை மன்னருக்கு செலுத்த வேண்டும், பிராமணராயின் முழுமையும் வைத்துக் கொள்ளலாம்[8] என்பதிலிருந்து மன்னர்களின் அதிகார கட்டுப்பாடு எந்த அளவிற்கு பிராமணர்களுக்கு முன்னுரிமை வழங்கியது என்பதை தெரிந்து கொள்ள முடிகிறது.

இசை, நாட்டியம், வேதங்கள், சாஸ்திரங்கள், புராணங்கள், இதிகாசங்கள் இவை பற்றிய உயர்கல்வியில்

கோயில்களும், மடங்களும் ஈடுபட்டிருந்தன என்று முதலாம் இராசராசன் கல்வெட்டு கூறுகிறது. இப்பயிற்சியில் அந்தணர்கள் நேரடியாகப் பலனடைந்த போதிலும் மற்றவரும் சற்று நலம் பெற்றனரென கருதலாம்[9] என்று கூறுவதிலிருந்தும், அந்தணர் ஆவொடு பொன் பெற்றார் நாவலர் மந்திரம் போல் மாண்ட களிறு ஊர்ந்தார் - எந்தை இலங்கிலே வேல்கிள்ளி என்று கூறுவதிலிருந்தும்[10] அறிவிலும் செல்வத்திலும் அந்தணருக்கே முன்னுரிமை வழங்கப்பட்டதை உணர முடிகிறது.

மூன்றாம் குலோத்துங்கனின் 12, 13-ஆம் ஆட்சி ஆண்டில் நாட்டில் கடும் பஞ்சம் ஏற்பட்டது நிவாரணப் பணிகளை சோழ அரசாங்கம் மேற்கொள்ளவில்லை. 28படி அரிசிக்கு சமமான 110 காசுக்குத் திருப்பாம்புரத்திலுள்ள மடத்திற்கு உழவுத் தொழில் வேளாளர் ஒருவர் தமது இரண்டு பெண் மக்களையும், தம்மையும் அடிமைகளாக விற்றுக் கொண்டனர்.[11] இதுபோன்ற மக்கள் சொல்லொணா துயரத்தில் வாடும்போது மதுரையில் வீராபிஷேகம் செய்து கொள்வதற்காக பாண்டிய நாட்டின் மீது படையெடுத்துச் சென்றான். இம்மன்னன் அங்கு பெற்ற வெற்றியின் நினைவாக பொன்னையும், பொருளையும், திருவாரூர் கோயிலுக்கும் அந்தணருக்கும் வழங்கினான்[12] என்பதை பார்க்கும் போது அந்தணர் வாழ்க்கையைப் பற்றியே மிகுந்த அக்கறை கொண்டவனாய் விளங்கியதை அறிந்த கொள்ள முடிகிறது.

இவ்வாறு செய்ததுதான் இரண்டாம் ராஜாதிராஜனில் தொடங்கி மூன்றாம் ராசராசன் வரை உள்ள காலப்பகுதி (கி. பி. 11-12) அடிமைகள் நிறைந்த காலமாவதற்கும் வழிகோலியது எனலாம்[13]

**நிலவுடைமையாளர்கள்**

சோழ மன்னர்கள் அந்தணர்களை நிலவுடைமையாளர் களாக உருவாக்கினார்கள் சுந்தர சோழன் 'அநிருத்தியன்' என்ற கல்வியிற் பெரிய அந்தணனுக்கு 'கருணாகர மங்கலம்' என்ற ஒரு கிராமத்தையே ஏகபோக பிரம்மதேயமாக வழங் கியதாக அன்பில் செப்பேடு கூறுவது[14] அந்தணர்களை அரசர்களே நிலவுடைமையாளர்களாக உருவாக்கியதை காட்டு கிறது.

விஜயாலய சதுர்வேதி மங்கலம்', 'ராஜசேகரி சதுர்வேதி மங்கலம்', வீரநாரயணசதுர்வேதி மங்கலம், கண்டராதித்தியச் சதுர்வேதி மங்கலம் என்று நிலங்களை வேதம் வல்ல பிராமணர்களுக்கு வழங்கியதன் மூலமாகவும், சதுர்வேதி மங்கலங்களிலும், பிரம்மதேயங்களிலும் 'மகாசபை' — என்ற பிராமண ஊராட்சி மன்றங்களை தன்னாட்சிபெற செய்ததின மூலமாகவும், அந்தணர்களில் நிலவுடைமையாளர்கள் பெருகினார்கள்.

அந்தணர்கள் பெரும்பான்மையோராக வாழும் கிராமங் களில் ஊராட்சி மன்றங்கள் ஒருமித்த தன்மையில் செயல்பட முடியாமைக்கு அந்தணரல்லாதோரின் நிலவுரிமையே காரணம் என்று இராசராசன் 1002 ஆம் ஆண்டில் அந்தணரல்லா தோர் தத்தம் நிலங்களை அந்தணருக்கு விற்று விட வேண்டும் என்று ஆணை பிறப்பித்தான். அந்நிலங்களை வாங்க முடியாத அந்தணரின் சார்பில் அரசனுடைய தமக்கை குந்தவை வாங்கி கோவிலுக்கு அளித்தாள்[15]

வெள்ளச்சேரியில் கிடைத்துள்ள இராஜேந்திர சோழனின் ஆறாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு அக்கிராமத்தில் இருக்கும் பிராமணர் அல்லாதோர் நிலம் முழுமையும் கட்டாயப் படுத்தப்பட்டு கோயிலுக்கு வழங்கப்பட்ட செய்தியைக் கூறுகிறது.[16]

இதனை எதிர்த்து மூன்றாம் இராசராசனின் ஐந்தாது ஆட்சியாண்டில் மக்கள் பெரும் கலகம் செய்தனர். ஊர்களிலுள்ள நிலவுரிமைக் கணக்குச் சொல்லும், வருவாய்த் துறை கணக்குப் புத்தகங்களும் நிலவுரிமைப் பத்திரங்கள் என்ற ஆவணங்களும் கொளுத்தப்பட்டன என்று தலைச் செங்கோடு திருவேள்விக்குடி, உடையாளூர் என்ற ஊர்களின் கல்வெட்டுகள் கூறுகின்றன.[17]

## அன்றைய பொருளாதார நிலை

கோயில்களுக்கு சோழர்கள் கொடுத்த பொன்னும் தேவதானங்களும், பெரும்பாலும் அந்தணர்களாலேயே நிர்வகிக்கப் பட்டது.[18] அன்றைய சோழ நாட்டில் பொருளாதாரம் தேவதானங்களையும், சதுர்வேதி மங்கலங்களையும், பிரம்ம தேயங்களையும் உள்ளடக்கிய அந்தணர்கள் மையப்பட்ட பொருளாதாரமாகவே காணப்பட்டது.

இடைக்காலத்தில் மானியதாரர்களுக்குப் பொருளாதார, ஆட்சித்துறை, சுயாட்சி வழங்கப்பட்டதன் விளைவாக மைய அரசுக்கும் உள்ளூர் மானியதாரர்களுக்குமிடையே இருந்த பொருளாதார அரசியல் உறவு அறுபட்டது. இதன் விளைவாக பேரரசுக்குள்ளேயே எண்ணிறந்த பொருளாதார

ஆட்சித்துறைத் தீவுகள் தோன்ற வாய்ப்புகள் ஏற்பட்டன.[19] என்று வரலாற்று ஆய்வாளர்கள் இந்தியா முழுமைக்கும் கூறுவது தமிழகத்திற்கும் பொருந்துவதாகவே அமைகிறது எனலாம். கி.பி.10-ம நூற்றாண்டில் பிரம்மதேயங்களில் உள்ள மகாசபை தன்னாட்சி பெற்று பணியாற்றிய முறை வியக்கத்தக்க வகையில் உத்திரமேரூர் கல்வெட்டுக்களில் காணப்படுவது[20] அவ்வரலாற்று ஆய்வாளர்கள் கருத்திற்கு ஏற்புடையதாகவே தோன்றுகிறது.

தன்னாட்சி பெற்ற பிரம்மதேய கிராமங்களும், சதுர்வேதி மங்கலங்களும், தேவதானங்களும் சோழப்பேரரசில் சிறுசிறு தீவு பொருளாதாரத்தை உருவாக்கி நாட்டின பரந்துபட்ட பொருளாதாரத்தை பாதிக்கப்பட்டதானது. சோழ பேரரசின் பரந்து பட்ட பொருளாதார பாதிப்பிற்கு அவர்களையும் காரணமாக்க வழி செய்கிறது.

கேரளத்தில் நம்பூதிரிகள் நிலவுடைமையாளர்களாகவும், உயர் சாதியினராகவும் விளங்கியதைப் போன்று தமிழகத்தில் அந்தணர்கள் நிலவுடைமையாளர்களாகவும், உயர் சாதியினராகவும் விளங்கினர். இத்தகைய அமைப்பானது சாதி உயர்வு தாழ்வோடு ஒட்டிய ஒருவித பொருளாதார ஏற்றத்தாழ்வினை உருவாக்கியது எனலாம்.

ஆளுவதற்கு அதிகாரம் வேண்டும். மன்னராட்சியில் மக்களால் அதிகாரம் வழங்கப்படவில்லை. மன்னனே எடுத்துக்கொள்வதுதான் மரபு அறிவும், ஆற்றலும் ஆட்சி செலுத்துவதற்குரிய அம்சங்களாக கருதப்பட்டது. இவற்றை அந்தணர்கள் பெற்றிருந்தால் சோழ அரசை இயக்குகின்ற

சக்தியாகவே விளங்கினார்கள். இயங்குகின்ற பொருளைக் காட்டிலும் அதை இயக்குகின்ற சக்தி ஆற்றல் மிககது என்பது சமூக விஞ்ஞான அறிஞர்கள் கருத்து. இக்கருத்தைக் கொண்டு பார்த்தால் பிற்கால சோழ மன்னர்களை இயக்கும் சக்தியாக விளங்கிய அந்தணர்களின் ஆற்றல் எத்தகை மையது என்று தெரியும்.

### அடிக்குறிப்புக்கள்

1. சோழர் கால அரசியல் கலாச்சார வரலாறு – பக் – 163 பேரா. மா. பாலசுப்பிரமணியன், தமிழ்நாட்டுப்பாட நூல் வெளியீடு
2. மேற்படி – பக்கம் – 167
3. சோழர்கால அரசியல் கலாச்சார வரலாறு – பக் – 255, பேரா. மா. பாலசுப்பிரமணியன்
4. யாவரும் கேளிர் –பக்–221–222, டாக்டர். இரா நாகசாமி
5. சோழர்கால அரசியல் கலாச்சார வரலாறு – பக் – 415, பேரா. மா: பாலசுப்பிரமணியன்
6 யாவரும் கேளிர் –பக்–220–221, டாக்டர். இரா. நாகசாமி
7. மேற்படி – பக்கம் – 219 – 220
8 தமிழ்நாட்டில் பண்பாட்டுப் புரட்சி – பக் – 177, வே. ஆனைமுத்து
9. தென்னிந்திய வரலாறு – பக் – 199, கே, கே. பிள்ளை
10. முத்தொள்ளாயிரம்
11. சோழர் கால அரசியல் கலாச்சார வரலாறு – பக் – 472, பேரா. மா. பாலசுப்பிரமணியன்
12. மேற்படி – பக் – 478
13. தமிழகத்தில் அடிமைகள் – தமிழ்நாட்டு வரலாற்று கருத் தரங்கு நா. மார்க்சீய காந்தி
14. சோழர் கால அரசியல் கலாச்சார வரலாறு – பக் 225, பேரா மா. பாலசுப்பிரமணியன்

15 மேற்படி – பக் – 297

16. கோயில் பொருளாதாரத்தில் அரசின் பங்கு – மே. து. ராசுகுமார் செங்கை மாவட்ட கருத்தரங்கு

7 சோழர் கால அரசியல் கலாச்சார வரலாறு – பக் – 498

18. மேற்படி – பக் – 293

19. இடைக்காலத்தின் முற்பகுதியில் இந்தியாவில் ஏற்பட்ட சமூக மாறுதல்கள் (கி.பி 500– 1200) பேரா. இராம் சரண் சர்மா – என். சி. பி. எச் வெளியீடு – 1979

20. Historical sketches of Ancient Deccon vol II page No 286-288.

---

**தூங்குதலை**

காளிக்கு நரபலி கொடுப்பது பழைய பழக்கமாகும். தனது தலையைத் தானே வெட்டிப் பிடாரிக்குப் பலி கொடுப்பதை பல கல்வெட்டுகள நவகண்டம் கொடுத்தல் என்று கூறுகின்றன. மதுரையை அடுத்த மடப்புரம் ஐயனார் கோயிலில் இரண்டு சிலைக் கல்வெட்டுகள் உள்ளன. அவை தனது தலையைத் தானே வெட்டிக்கொடுப்பதைத் 'தூங்குதலை' என்று குறிக்கின்றன. இவை 8, 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை

''தூங்குதலை குடுத்தான் சிரீ வல்லபன்'

''தூங்குதலை குடுத்தான் சித்திரஆரிதன்'

---

# ஆமூர் ஐயப்பொழில் ஈஸ்வரம்

**கோ. அர்ச்சுணன்** எம். ஏ.

மதுரை.

ஆமூர் என்ற பெயரில் தமிழ்நாட்டில் பலவூர்கள் உள்ளன. சிறுபாணாற்றுப்படை, ஐங்குறுநூறு அகநானூறு போன்ற பழந்தமிழ் இலக்கியங்களின் மூலம் ஆமூர் என்ற பெயரில் பலவூர்கள் சங்ககாலத்திலிருந்தே சிறப்புடன் விளங்கி வந்துள்ளதை அறியமுடிகிறது. ஆமூர் என்ற பெயரில் சோழ நாட்டிலும், தொண்டை நாட்டிலும் இரண்டு ஊர்கள் இருந்திருக்கின்றன. ஐங்குறுநூற்று பாடல் ஒன்று சோழநாட்டு ஆமூர் பற்றித் தெரிவிக்கிறது.[1] சிறுபாணாற்றுப்படை நல்லியக்கோடன் என்ற வள்ளலைக் காணச்செல்லும் வழியில் அமைந்த ஒய்மாநாட்டு ஆமூர் பற்றித் தெரிவிக்கிறது[2] இவை தவிரக் "கொடுமுடி" என்ற தலைவன் காத்து வந்த ஆமூர் ஒன்று அகநானூற்றில் குறிப்பிடப்படுகின்றது.[3] மேலும் மற்போர் ஒன்று நடைபெற்ற ஆமூர் பற்றிப் புறப் பாடல் ஒன்று தெரிவிக்கிறது.[4] இவ்விரண்டு ஆமூர்களும் எங்கிருந்தன என்று தெரியவில்லை. இலக்கியங்களில் குறிப்பிடப்படும் ஆமூர்களைத் தவிரப் பாண்டிய நாட்டிலும் ஆமூர் என்ற பெயரில் ஊர் இருக்கின்றது. இடைக்காலத் தமிழ் நாட்டில் இவ்வூர் வணிகர்கள் வாழ்ந்த பேரூராகச் சிறப்புடன் விளங்கியிருக்கிறது.

**நல்லணி ஆமூர்**

இவ்வூரில் கண்டறியப்பட்ட கல்வெட்டுக்கள் இவ்வூர் பற்றித் தெரிவிக்கின்றன. மதுரை மாவட்டம் மேலூர் வட்டத்தில் இவ்வூர் அமைந்துள்ளது. திருமோகூரிலிருந்து திருவாதவூர் செல்லும் பழைமையான நெடுஞ்சாலையில் இது

உள்ளது. இவ்வூரின் பெருமையையும் வரலாற்றுச் சிறப்பையும் இங்குச் சிதைந்த நிலையில் காணப்படும் சிவன் கோயிலும் பெருமாள் கோயிலும் அவற்றில் காணப்படும் சிற்பங்களும் கல்வெட்டுக்களும் உணர்த்துகின்றன. இங்குள்ள பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளில் இவ்வூர் ''நல்லணி ஆமூர்'' என்று அடைமொழியுடன் அழைக்கப்படுகின்றது. தமிழ்நாட்டில் பிற இடங்களில் காணப்படும் ஆமூர்களை வேறுபடுத்திக் காட்டும் வகையில் இந்த அடைமொழி கொடுத்து அழைக்கப் பட்டிருக்க வேண்டும்.

இவ்வூர் மேலூர் வட்டத்தில் இருந்த பாண்டியநாட்டுப் பிரிவுகளில் ஒன்றான பறப்புநாட்டில் தென்பறப்பு நாட்டு ஊராக விளங்கியுள்ளது. பாண்டியநாட்டில் தேவார மூவரால் பாடப்பெற்ற பதிகள் பதினான்கில் ஒன்றாக விளங்கிய திருப் பூவணம் சிவன் கோயிலுக்குரிய தேவதான நிலங்களைக் கொண்ட ஊராக இது விளங்கி இருக்கிறது. ஆமூரிலிருந்து திருவாதவூர், பூவந்தி என்ற ஊர்களின் வழியாக இவ்வூரை அடையாலம். எனவே ஆமூரில் இருந்த நிலங்களிலிருந்து வந்த விளைவும், வருவாயும், திருப்புவனம் பூவணநாதசாமி கோயிலுக்கு எளிதில் கொண்டு சேர்க்கும் வகையில் அதன் தேவதான ஊராக விளங்கியது எனலாம். முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டு ஒன்றில் ஆமூர் 'திருப் பூவணமுடைய நாயனார் தேவதானந் தென்பறப்பு நாட்டு நல்லணி ஆமூர்'' என்றே குறிப்பிடப்படுகின்றது. இவ்வாறே இவ்வூரில் அமைந்த பிற கல்வெட்டுக்களிலும் இது குறிப் பிடப்படுகின்றது

## ஆமூர் கோயில்கள்

இவ்வூரில் பிற்காலப் பாண்டியர் கலைப்பாணியை விளக்கும் வகையில் பலகோயில்கள் இருந்திருக்கின்றன. இன்று அவற்

றில் பெருமாள் கோயில் மட்டும் முழுவதும் சிதைந்து போன நிலையில் இவ்வூர்ப் பகுதியில் உள்ள வயல் ஒன்றில் குவியலாக காட்சி அளிக்கின்றது. இன்றைய ஆமூரிலிருந்து இவ்விடம் சற்று ஒதுங்கி அமைந்துள்ளது. இக்கோயிலில் இருந்த பிற்காலப்பாண்டியர் காலத்தினைச் சார்ந்த கல்லில் வடித்த அழகிய பெருமாள்சிலை ஒன்றும் ஸ்ரீதேவியின் சிலை ஒன்றும் இக்கோயில் அமைந்துள்ள இடத்திற்கு அருகிலுள்ள நெடுஞ்சாலைப்பகுதியில் இருந்தன. கரியவண்ணத்தாலான கருங்கல்லில் நின்ற நிலையில் வடிக்கப்பட்ட இச்சிற்பங்கள் கி.பி. 13, 14, ஆம் நூற்றாண்டுப் பாண்டியர் சிற்பக்கலைக்குச் சிறந்த எடுத்துக் காட்டுகளாக விளங்குகின்றன.

## ஐயப்பொழில் ஈஸ்வரம்

பெருமாள் கோயில் அமைந்த இடத்திற்குச் சற்றுத் தொலைவில் வடக்கே வயல்வெளியில் பெருமாள் கோயிலைப் போன்றே பிற்காலப்பாண்டியர் காலத்தினைச் சார்ந்த சிவன் கோயில் ஒன்றும் காணப்படுகிறது. இச்சிவன் கோயில் அங்குள்ள கல்வெட்டுகளில் 'ஆமூர் ஐயப்பொழில் ஈஸ்வரம்' என்று குறிப்பிடப்படுகிறது. பெருமாள் கோயில் போன்று இது முழுவதுமாகச் சிதைந்து அழியாது ஆனால், மரமும், செடியும், கொடியும் மண்டிச் சிறிது பாழடைந்த நிலையில் வழிபாடின்றிக் கிடக்கின்றது. கருவறை, அர்த்தமண்டபம், ஆகிய மூன்று பகுதிகளைக் கொண்டு விளங்குகின்றது. கருவறையில் கூரைக்கு மேற்புறம் உள்ள விமானத்தின் பகுதி முழுவதுமாகச் சிதைந்து போய் விட்டது.

கருவறை அர்த்த மண்டபத்தின் வெளிப்புறங்களில் தெய்வ உருவங்கள் இல்லாத தேவகோட்டங்கள் உள்ளன.

இவற்றின் பக்கவாட்டிலும், சுவர்களிலும், வேலைப்பாடுமிக்க அழகிய அரைத்தூண்கள் காணப்படுகின்றன. கருவறையின் உள்ளே உடைந்துபோன சிவலிங்கம் ஒன்று காணப்படுகின்றது. கருவறையைவிட்டு அபிசேகநீர் வெளியேறுவதற்கு வேலைப்பாடுமிக்க தூம்பு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. கருவறை, அர்த்தமண்டபம் ஆகியவற்றின் நூழைவாயில்களில் பக்கத்திற்கொன்றாக இரண்டு அரைத் தூண்கள் அமைக்கப் பட்டுள்ளன. அர்த்தமண்டபத்தில் வேறு எவ்விதத் தூண்களும் இல்லை. மகாமண்டபத்தினை மட்டும் நான்கு எளிமையான தூண்கள் தாங்கி நிற்கின்றன. மகாமண்டபத்தில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் செய்யப்பட்ட உடைந்து போன பைரவர் சிற்பமும் தேவியின் சிற்பம் ஒன்றும் காணப்படுகின்றன. இவற்றில் பைரவர் சிற்பம் குறிப்பிடத்தக்க சிறப் பமைப்பைக் கொண்டதாக விளங்குகின்றது. பொதுவாகப் பைரவர் உருவங்களின் பின்புறம் நாய் ஒன்று நிற்பது போன்று வடிக்கப்படும் பெருவழக்கம் அக்காலத்தில் இருந் திருக்கிறது. ஆனால் இங்கு நான்கு கரங்களுடன் திறகும பைரவரின் இருபுறமும் காலடியில் பக்கத்திற்கொன்றாக இரண்டு நாய்கள் குத்திட்டு அமர்ந்து நிற்கும் நிலையில் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. இதே காலத்தினைச் சார்ந்த நந்தியின் உருவம் ஒன்று மாகமண்டபத்தின் வெளிப் புறம் அமைந்துள்ளது ஒரு காலத்தில் இக்கோயில் மதில் சூழ்ந்த பெருங்கோயிலாக இருந்தமைக்குச் சான்றாக இதனைச் சுற்றி இன்று ஏராளமானக் கற்கள் சிதைந்து கிடக்கின்றன. இக்கோயிலின் அமைப்பு இங்குள்ள கல்வெட்டுகளைக் கொண்டு நோக்கும் பொழுது பிற்காலப் பாண்டியர் காலத் தொடக்கத்தில் அதாவது கி.பி. 12 – 13 ஆம் நூற்றாண்டில் கற்றளியாக எடுக்கப்பட்ட கோயில் எனலாம்.

இக்கோயிலின் கருவறை நுழைவாயிலிலும், கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றின் வெளிப்புறங் களிலும், பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுக்கள் பொறிக்கப் பட்டுள்ளன. கருவறையில் நுழைவாயிலின் இடதுபுறம் அவ் வாயிலைச் செய்தவன் பெயர் கல்வெட்டில் பொறிக்கப் பட்டுள்ளது.

கல்வெட்டு.

1. ஸ்வஸ்திஸ்ரீ இத்
2. திருநிலை செய்
3. வித்தாந் அடி
4 கள் அறியநாந
5. காடுவெட்டி

பாண்டிய நாட்டிற்குப் பிற்காலப் பாண்டியர் காலத்திலி ருந்து அரசுப் பணிசெய்த பல்லவர் குலத்தினைச் சார்ந்த அடிகள் அறியானான காடுவெட்டி என்ற பெயரினைக் கொண்டவனால் இத்திருநிலைவாயில் உருவாக்கப்பெற்றி ருக்கின்றது

கருவறை, அர்த்தமண்டபம் ஆகியவற்றின் வெளிப்புறம் சோணாடு கொண்ட முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டும், பூவின கிழத்தி என்று தொடங்கும் மெய்கீர்த்தி யினையுடைய குலசேகரபாண்டியன் கல்வெட்டும் காணப்படு கின்றன. இக்கோயிலில் பிற இடங்களில் மன்னன் பெயர் இல்லாத சிதைந்துபோன துண்டுக் கல்வெட்டுகளும் உள்ளன. சுந்தரபாண்டியன கல்வெட்டு இக்கோயிலைச் சார்ந்த முப்பது வட்டத்துச் சிவப்பிராமணரும் வேறுசிலரும் சேர்ந்து பிரமாணம் ஒன்றினைச் செய்து கொடுத்ததைத் தெரிவிக்கிறது கல்வெட்டு சிதைநது போனமையால் இப்பிரமாணம் எதுபற்றியது என்று

அறிய முடியவில்லை. சிதைந்த நிலையில் காணப்படும் குலசேகரபாண்டியன் கல்வெட்டு செம்பியன் பல்லவரையன் என்ற பல்லவர் குலத்தைச் சார்ந்த மற்றொரு பாண்டியனின் அதிகாரி இக்கோயில் இறைவனுக்கென்று திருப்பள்ளியறை நாச்சியாரை எழுந்தருளவித்துத் திருநந்தாவிளக்கு எடுக்க ஏற்பாடு செய்ததைப்பற்றித் தெரிவிக்கிறது.

## ஐயப்பொழில்

இக்கோயில் இறைவனுக்கு ஐயப்பொழில் ஈஸ்வரமுடையார் என்ற பெயர் இருந்திருப்பது "ஐயப்பொழில்" என்ற பெயரோடு தொடர்புடைய "நானாதேசி திசையாயிரத்து ஐந்நூற்றுவர்" என்ற வணிகர் குழுவோடு இக்கோயிலுக்குள்ள உறவைக்காட்டுகின்றது. கி.பி ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து கி.பி பதினான்காம் நூற்றாண்டுவரை இக்குழு தென்னிந்தியா முழுவதும் புகழ்பெற்று மிகச்சிறப்புடன் விளங்கியிருக்கிறது தென்னிந்தியாவில் கர்நாடகத்தில் உள்ள ஐஹோளே என்ற இடத்தில் இக்குழு பற்றிய மிகப்பழமையான கி.பி. 8ஆம நூற்றாண்டுக் கல்வெட்டு ஒன்று உள்ளது. இது ஐஹோளே என்ற இடத்தில் ஆரம்பத்தில் சிறப்புடன் விளங்கிப் பிற்காலத்தில் தென்னிந்தியா முழுவதும் பரவிக் கடல் கடந்தும் பரவியது என்பர்.[5] ஐஹோளே என்பதே தமிழ்வடிவில் ஐயப்பொழில், ஐம்பொழில், அய்யப்பொழில் என்று குறிப்பிடப்படும். இச்சொற்கள் ஒரே பொருளைக் குறிக்கும் மாற்றுப் பெயர் வடிவங்களாகும் இக்குழுவைச் சார்ந்தவர்கள் தங்களை "அய்யப்பொழில் பரமேஸ்வரி" என்ற பெண்தெய்வத்தின் மக்கள் என்று கூறிக்கொண்டனர்.[6] பெருவழிகளில் வணிகத்தின் பொருட்டு இவர்கள் பயணம் மேற்கொண்ட வழிகளில் தங்கி அங்கிருந்த கோயில்களுக்குப் பல அறப்பணிகள் செய்துள்ளனர். பாண்டியநாட்டில் குறிப்பாகச் சின்னமனூர், பிரான்மலை போன்ற இடங்களில் உள்ள கல்வெட்டுகள் இவர்களைப்பற்றித் தெரிவிக்கின்றன.

திருவாதவூர் திருமோகூர் வழியாக மதுரை செல்லும் ஆமூர்ப் பெருவழியிலேயே இவர்கள் பெயரால் சிவன்கோயில் ஒன்று ஐயப்பொழில் ஈஸ்வரம் எனத் தோற்றுவிக்கப் பெற்றிருக்கின்றது. இதற்கு அரச ஆதரவு இருந்திருப்பதை அக்கல் வெட்டுகள் காட்டுகின்றன பெருவழியில் அமைந்த ஊராக ஆமூர் விளங்கியமையால் ⁶ஐஹோளேயோடு தொடர்புடைய வணிகர் குழுவின் முயற்சியால் இக்கோயில் கற்றளியாக்கப் பெற்றிருக்க வேண்டுமென்பதை அதற்கு அமைந்த பெயர் உணர்த்துகின்றது. பெருவழிப்பாதையில் அமைந்த ஆமூர்ப் பகுதியில் இவ்வணிகர் குழுவினர் தங்கி வணிகம் செய்த காலத்தில் இதனை இவர்கள் உருவாக்கி இருக்க வேண்டும். இம்முயற்சியில் தோற்றுவிக்கப்பட்ட இக்கோயிலும் இவ்வூர்ப் பகுதியும் அவர்களது வணிகத்தின் வளர்ச்சிக்கும் அக்காலத்து வைதீக சமய வளர்ச்சிக்கும் பெருந்துணை புரிந்திருக்க வேண்டும் எனலாம். இவ்வாறு ஒரு காலத்தில் திசையாயிரத்து ஐநூற்றுவர் என்ற வணிகர் குழுவின் வணிகத்தளமாக விளங்கிய பாண்டியநாட்டு நல்லணி ஆமூரே இன்று சிதைந்து அழிந்த நிலையில் அதன் சிறப்புமிக்க வரலாற்றைத் தெரிவிக்கும் வகையில் பழமையான வரலாற்று எச்சங்களுடன் எஞ்சி நிற்கின்றது.

**அடிக்குறிப்புகள் :-**

(1) ஐங்குறுநூறு பா.56

(2) சிறுபாணாற்றுப்படை – வரி 186-188

(3) அகநானூறு – பா. 156

(4) புறநானூறு – பா. 80

(5) K. Indrapala; 'Some Medievel Mercantile Communities of South India and Ceylon' 'Journal of Tamil Studies,' Vol.-II No. 2, Part I, Oct, 1970, PP. 25-39.

(6) Ibid.

# தமிழக வரலாற்றில் கங்கர்

டாக்டர் ஏ சுப்பராயலு எம். ஏ., பி. எச்டி.,

தமிழ்ப் பல்கலைக்கழகம் தஞ்சாவூர்

கங்கர் மைசூர் மாநிலத்தில் மைசூர் மாவட்டத்தில் கி. பி. நான்காம் நூற்றண்டினிறுதியிலிருந்து ஆண்டவர்கள் ஆவார்கள். எட்டாம் நூற்றண்டு வரை இவர்களது வரலாறு தெளிவாக இல்லை முதலில் இவர்கள் கோலார் என்று இன்று அழைக்கப்படும் குவளாலபுரத்திலிருந்து ஆண்டதாகவும் பின்பு தழைக்காட்டிற்கு மாற்றிக் கொண்டதாகவும் இந்தப் பரம்பரையின் பத்தாம் நூற்றண்டைச் சார்ந்த கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. ஆனால். இவர்கள் தொடக்கத்தில் குவளாலபுரத்தில் இருந்து ஆண்டதற்குப் பழைய சான்றுகள் ஏதுமில்லை. முதலிலிருந்தே தழைக்காட்டைத் தலை நகராக வைத்துத்தான் ஆண்டிருக்கவேண்டும். தழைக்காடு மைசூர் மாநிலத்தில் மைசூருக்கு கிழக்கே 30 கல் தொலைவிலும் சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சிக்கு தென்மேற்கே பத்துக்கல் தொலைவிலும் காவிரியின் வடகரையில் உள்ளது. ஏறக்குறைய மைசூர் மாவட்டம் முழுவதும் கங்கபாடியாக இருந்தது என்பது பத்துப்பதினோராம் நூற்றாண்டுச் சோழர் கல்வெட்டுக்களால் தெரிய வருகிறது இவ்வரசர் காண்வாயன கோத்திரத்தினரென்றும் கங்கர் வழி வந்தவர்களென்றும் இவர்களது செப்பேடுகள் கூறுகின்றன. கங்கருக்கும் தமிழ் நாட்டுக்கும் நிறையத் தொடர்பு உண்டு என்பதைக் கீழே காண்போம். ஐந்தாம் நூற்றண்டின் பிற்பகுதியில் இவர்கள் காஞ்சிப் பல்லவர் கட்டுப்பாட்டுக்குள் இருந்ததாகத் தெரிகிறது. இரு கங்கமன்னர், இரு பல்லவமன்னரால் முடிசூட்டப் பெற்றார்கள். கி பி 550-ல் பல்லவசிம்மவிஷ்ணுவின் தாய் ஒரு கங்க மன்னனின் மகள் சுமார் கி. பி. 650ல் ஆட்சி

செய்த ஸ்ரீவிக்கிரமன் என்ற கங்க மன்னன் ஒரு சோழன் மகளை மணந்ததாக குறிப்பிடப்படுகிறது[3]. இந்தச் சோழன் அனந்தப்பூர், கடப்பை, மாவட்டங்களிலிருந்து ஆண்ட ரே நாட்டுத் தெலுங்குச் சோழருள் ஒருவனாக இருக்கலாம். தகடூர் கங்க நாட்டுள் இருந்ததாக பத்தாம் நூற்றாண்டுக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.[4]

ஒரு அகநாநூற்றுப் பாடல் (44) கங்கனைக் குறிப்பிடு கிறது.[5] இப்பாடலில் தொடராக கங்கன் கட்டி என்று வருகிறது. கட்டியே கங்க அரசனோ என்று ஐயுற இடமிருக்கிறது. ஒரு குறுந்தொகைப் பாடல் (11) ''வல்வேறகட்டியின் நல் நாடு'' தமிழகத்தின் வடவெல்லையில் இருந்ததாகக் குறிப் பிடுகிறது. இந்த அகநானூற்றுக்கங்கன் கி.பி. நானூற்றுக் குப் பிற்பட்டவனாக இருததல் வேண்டும். ஏனெனில் கங்ககுல முதல் மன்னன் கொங்கணிவர்மன் அல்லது கொங்குவிவர்மன் எனப்பட்டவன் கி,பி. 400ஐ ஒட்டித்தான் ஆண்டுள்ளான். பிற் காலச் சேரமன்னர்கள் யாவரும் குலசேகரன் என்றழைக்கப் பட்டதைப் போல கங்க மன்னர்கள் யாவரும் 'கொங்குனி வர்மன்' என்றழைக்கப்பட்டதாக அவர்கள் செப்பேடுகள் உணர்த்துகின்றன[6]. சுருங்கச் சொன்னால் இவர்கள் தான் கொங்கர். கங்க நாடு எருமைநாடு என அழைக்கப்பட்டது. அதை உறுதிபடுத்தும் வகையில கொங்கர் ஆவினம் ஒரு சிறந்த ஆவினம் என சங்கப்பாடல்கள் சிலவற்றால் கூறப் படுகிறது [7] 'ஆகெழுகொங்கர்' 'ஈரப்படைக் கொங்கர் ஆ' 'கொங்கர் சேதா' என்ற குறிப்புகள் கிடைக்கின்றன. ஆகவே கொங்குநாட்டைத் தமிழகத்தின் வரலாற்றுக்கு வழங்கியவர்கள் கங்கர்கள் எனலாம் கொங்கர்களை மூவேந்தர்களும் எதிர்த் திருக்கிறார்கள். பசும்பூண்பாண்டியன் கொங்கரை ஓட்டியதாக வும் [8]. குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன் கொங்குபுறம்

பெற்றதாகவும் சேரன் யானைச் செல்கெழுகுட்டுவன் கொங்கர் நாட்டை அகப்படுத்தியதாகவும் செய்திகள் கிடைக்கின்றன. மேலே சுட்டப்பட்ட கட்டி ஒரு வாண மன்னனோடு உறந்தை நாளவையில் எழுந்து கிணைப்பறை ஓசையைக் கேட்டு அஞ்சி ஓடி விட்டதாகவும் ஒரு பாடல் தெரிவிக்கிறது. இந்த நிகழ்ச்சிகளைக் கி.பி. 5ம் நூற்றாண்டில் நடந்தவையாகக் கொள்ளலாம். இதற்குச் சிறிது பின்னால் இவர்கள் அதியன் நாட்டைக் கைப்படுத்தி, தொண்டைநாடு நோக்கி வந்தாக அண்மையில் தமிழ்நாடு தொல்பொருள்துறை செங்கம் வட்டத்தில் கண்டுபிடித்த நடுகற்கள் நன்குணர்த்துகின்றன. பெரும் பாணர்களும் இதே நேரத்தில் அனந்தப்பூர் மாவட்டத்திலிருந்து தெற்கே வந்து தமிழ்நாட்டின் வடவெல்லையில் தாக்கியதாகத் தெரிகிறது. கட்டிக்குத் துணைவந்த பாண அரசனை மேலே குறிப்பிட்டேன். வட பகுதியில் இருந்து பாண நல்நாடு குறித்து கல்லாடனாரும் மாமூலனாரும் குறிப்பிடுகிறார்கள்[12] கபிலர் குறிஞ்சிப்பாட்டைப் பாடியது பிரகத்தன் ஒரு ஆரிய அரசனுக்கு தமிழ் கற்பிப்பதற்காகும். பிரகத்தன் ஒரு பாண மன்னனாகத்தான் இருக்க வேண்டும் பாணர் குலமே பிருகத் பாண (Brihad Bana) குலம் என அழைக்கப்பட்டது. பிருகத் (Brihad) பிருகத்தனாவது இயல்பே. பாணர் குடியேற்றததைச் செங்கம் கல்வெட்டுகள் ஆதரிக்கின்றன. கி.பி. 550 சேர்ந்த சிம்ம விஷ்ணுவின் கல்வெட்டு பெரும்பாணனரசரைக் குறிக்கிறது.

மேலே குறிப்பிட்ட செய்திகளிலிருந்து 5, 6 நூற்றாண்டுகளில் தென்னிந்தியாவில் பல குறுநில அரசுகள் இடம் பெயர்ந்திருக்கின்றன என்பது போதரும். கங்கரும், பாணரும் தெற்கே வந்தார்கள் ரே நாட்டுச் சோழர்கள் தெற்கேயிருந்து வடக்கே போனார்கள் இந்தக்காலத்தில் காவிரிப்பகுதியைச் சிம்மவிஷ்ணு கைப்பற்றியதற்கும் இந்நிகழ்ச்சிகளும் ஓரளவு தொடர்பு இருந்திருக்கலாம்.

சமண மதம், அதிகமாகத் தமிழகத்திற்குள் பரவத் தொடங்கியது இக்காலத்தில் தான். அதில் நிறையப் பங்கேற்றவர்கள் கங்கர்கள். கங்க மன்னர் பெரும்பாலும் சமண சார்பாளர்களாக இருந்தது வரலாற்றுக்குப் புதியதில்லை. பல பழைய சமண நிலைகள் பெரும்பாலும் வட ஆற்காடு மாவட்டத்தில் செங்கம் கணவாய் தொடங்கி காணப்படு

கின்றன. இவை கங்கர் குடியேற்றத்தைச் சார்ந்தவை தான் என்று உணர முடிகிறது.

கங்கரில் முதலிலேயே சில கிளைக்குலங்கள் இருந்தன என்பது செப்பேடுகளால் தெரியவருகிறது. வட ஆற்காடு மாவட்டத்தில் ஒன்பதாம் நூற்றாண்டு தொடங்கி பங்களர் என்பவர் காணப்படுகிறார்கள். இவர்கள் பெயர்கள் இவர்களை கங்கர்கள் என்று உணர்த்துகின்றன இவர்கள் ஏற்படுத்திய பங்கள நாடு என்ற நிலப்பரப்பு வேலூர், போரூர், குடியாத்தம், வட்டங்களை உட்கொண்டிருந்தது. இந்தக் குலத்தைச் சேர்ந்த பிருதிவிபதி என்பவன் தான் ஒன்பதாம் நூற்றாண்டில் நடந்த திருப்புறம்பியம் போரில முககிய பங்கேற்றான். இவன் கிளையினர் பலர் சோழர்கள் ஆட்சியில் பங்கு பெற்றார்கள் கொங்கு நாட்டிலும் சில கங்கர் கிளைகள் இருந்தன என்பது கொங்குமண்டல சதகத்தில் அறியப்படுகிறது. சில பாளையக்காரர்கள் காங்கேயன் என்ற துணைப் பெயர் பூண்டமை இதை வலியுறுத்தும் மாடுகளுக்குப பெயர் பெற்ற காங்கயத்தைச் சூழ்ந்து இருந்த ஒரு நாடு காங்கயநாடு எனப்பட்டது. இது காங்கேய நாட்டின் திரிபாக இருக்கும் என்று ஊகிக்கலாம்.

1. Vakataka-Gupta Age,
2. Hookote Plates
3. M.A.R. 1925 : No. 105
4. SI.I. VII, S.I.I. VIII
5. அகம் 44
6, MAR 1924, Nos: 78, 79, 80.
7. பதிற்றுப்பத்து 22,77 அகம் 79.
8. அகம். 253
9. புறம். 373.
10. பதிற்றுப்பத்து 22
11. அகம் 226.
12. அகம் 113 & 325

# தலைக்கோல்

டாக்டர் இரா. கலைக்கோவன் எம். பி. பி. எஸ்.
திருச்சி

தமிழர் கண்ணெனப் போற்றிக் கருத்துடன் வளர்த்த கலைகளுள் ஆடற்கலையும் ஒன்று. இந்த ஆடற்கலைக்குத் தமிழகம் தந்த சிறப்பைச் சங்க இலக்கியங்களில் பரக்கக் காணலாம் ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றான சிலப்பதிகாரம், அரங்கேற்றுக் காதையில் ஆடற்கலையின் இலக்கணங்களையும், நுணுக்கங்களையும் அழகாய்த் தெரிவிக்கிறது மாதவியைக் கோவலனுடன் கூட்டுவித்த இந்த ஆடற்கலைக்குத் தெய்வமாய் இந்திரன் மகன் சயந்தனை அக்காலத்து மக்கள் வழிபட்டனர் முருகனைக் குறிக்க வேல் பயன்பட்டாற் போல இந்தச் சயந்தனைக் குறிக்க ஒரு கோல் அடையாளமாய்ப் போற்றப்பட்டது இதைத்தான் தலைக்கோல் என்று இலக்கியங்கள் அறிவிக்கின்றன. ஏழு சாண் நீளமுள்ள மூங்கிலினால் அமைந்த இக்கோலின் கணுக்கள் தோறும் நவரத்தினங்கள் இழைக்கப்பட்டு இடையிடையே பொற்கட்டு இடப்பட்டிருக்கும். இந்தத் தலைக்கோலுக்கு அரண்மனையிலும், ஆடல் அரங்கிலும் சிறப்பான இடமுண்டு.

> "புண்ணியமால் வெற்பில் பொருந்து கழைகொண்டு
> கண்ணிடைக் கண்சாண் கனஞ்சாரும் —எண்ணிய
> நீளமெழு சாண்கொண்டு நீராட்டி நன்மைபுனை
> நாளில் தலைக்கோலை நாட்டு."

என்று பரதசேனாபதீயம் தலைக்கோலின் பெருமைகளைப் பேசுகிறது. தலைக்கோல் மன்னர்களாலும், மக்களாலும் போற்றப்பட்ட செய்திகளைச் சிலப்பதிகாரமும், செயிற்றியமும் திறம்பட உரைக்கின்றன.

காவிரிப் பூம்பட்டினத்து இந்திரவிழா சோழர்களின் கலையார்வத்துக்கும் இறைப்பற்றுக்கும் சிறந்ததோர் எடுத்துக் காட்டாகும் அவ்விழா நடைபெறும் இருபத்தெட்டு நாட்களிலும் ஆடலும், பாடலும், இல்லாத இடமே பூம்புகாரில் இல்லையெனலாம். இத்தகு பெருமைக்குரிய இந்திரவிழாவின் தொடக்கத்தில் மேளதாளத்துடன் தலைக்கோலுக்கு வழிபாடுகள் நிகழும். அரசர், ஆச்சாரியார், அமைச்சர், படைதலைவர் முதலிய ஐம்பெருங்குழுவினர் உடனிருந்து தலைக்கோலை எடுத்துப் பட்டத்து யானையிடம் கொடுத்து வலம்வரச் செய்து, தேரின் மேல் நிற்கும் ஆடலாசிரியர் கரங்களில் அதைச் சேர்க்கச் செய்வார்கள். ஆடலாசிரியர் அத்தலைக்கோலை யானையிடமிருந்து பெற்றுத் தேரில் அழகுபட வைத்து நகரை வலம் வருவார். இத்திருவலம் முடிந்ததும் ஆடலரங்கத்தில் அதற்கென்று அமைக்கப்பட்ட இடத்தில் தலைக்கோலை உரிய மரியாதைகளுடன் வைப்பர் அதன்பிறகே ஆடல் பாடல்கள் தொடங்கும்

சிலப்பதிகாரம் காட்டும் இந்தக்காட்சி, பண்டைத் தமிழகத்தில் தலைக்கோலுக்கு இருந்த தனிச் சிறப்பையும், பெருமைகளையும் உள்ளங்கை நெல்லிக் கனியாய்க் காட்டுகிறது தேர்ந்த கழியில் செய்வது போலவே, போரில் தோற்ற அரசர்களின் வெண்கொற்றக் குடையின் காம்பைக் கொணர்ந்து அதிலிருந்தும் தலைக்கோல் செய்வதுண்டு. இது வீரப் பேரரசர்களின் வெற்றிப் பெருமைக்குச் சான்றாய் அமைந்தது.

சிலப்பதிகாரம் போற்றிய இந்தத் தலைக்கோல் பழக்கம் சோழர்கள் காலத்தில் சிறந்தோங்கியது ஆடல் பாடல் கலைகளில் தேர்ந்த மகளிர்க்குத் தலைக்கோலி, தலைக்கோல்

அரிவை என்னும் பட்டங்கள் வழங்கப்பட்டன. ஆடல் ஆசிரியர்கள் தலைக்கோல் ஆசான் என்று அழைக்கப்பட்டனர்.

சோழர்களால் எழுப்பப்பட்ட அல்லது திருப்பணி செய்யப்பட்ட கோயில்களில் காணப்படும் ஏராளமான கல்வெட்டுகள் பல ஆடற்கலை பற்றியும் அதைப் போற்றி வளர்த்த தலைக்கோலிகள் பற்றியும் அரிய செய்திகளை அள்ளித் தருகின்றன.

திருக்கடவூர் திருக்கோயிலில் தலைக்கோல் ஆசானாக இருந்த, கலாவினோத நிருத்தப் பேரரையன் என்னும் சிறப்புப்பெயர் பெற்ற பாரசிவன் பொன்னன் என்பவருக்கு நட்டுவ நிலையாக நிலக்கொடை தரப்பட்டது.

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஆத்தூர் சோமநாதீசுவரர் கோயிலில் அழகிய பாண்டியன் கூடம் என்னும் ஆடல் மண்டபம் இருந்தது. அதில் ஆடிய சாந்திக் கூத்தனுக்கு நிலம் வழங்கப்பட்டது.

திருவொற்றியூரில் உறவாக்கின தலைக்கோலி என்னும் ஆடல்வல்லாள் இருந்தாள். திரிபுவனச் சக்கரவர்த்தி மூன்றாம் இராசராசன் முன்னிலையில், திருவொற்றியூர்க் கோயில் மண்டபத்தில் இவள் அகமார்க்கப் பாடலைப் பாடினாள். இதற்காகச் சோழ மன்னன் இவளுக்கு அறுபது வேலி நிலம் தந்ததுடன், இந்நிலங்கள் இருந்த சிற்றூருக்கு 'உறவாக்கின நல்லூர்' என்று இவள் பெயரை வைத்துப் பெருமைப் படுத்தினான்.

முதலாம் இராசராசன் மனைவியருள் ஒருவரான உலகமாதேவியார் கட்டிய ஐயாறப்பர் கோயிலில் ஐயாறன் சலியுகச் சுந்தரத் தலைக்கோலி என்னும் சிறந்த ஆடல் மங்கை இருந்ததாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன. இவள் ஆடல் பாடல்களில் வல்லவரான மூப்பது மகளிருக்குத் தலைவியாக இருந்து அக்கோயிலில ஆடற்கலையைப் போற்றி வந்தாள்

தஞ்சை தளிச்சேரிப் பெண்டிர் கல்வெட்டுகள் முதலாம் இராசராசன் காலம், ஆடற்கலையின் பொற்காலமாக இருந்ததைச் சான்றுகளுடன் எடுத்துரைக்கின்றன. இப்படிச் சோழர்களால் போற்றி வளர்க்கப்பட்ட ஆடற்கலையின் அடையாளமான தலைக்கோலுக்குச் சோழர்கள் சிறப்புச் செய்துள்ள விதமே தனி! கல்லில் எழுத்துக்களாய் வடித்தும், மகளிருக்குத் தலைக்கோலி பட்டம் தந்தும் தலைக்கோலைச் சிறப்பித்த அப்பெருவேந்தர்கள், ஆடல் அரசனான நடராசப் பெருமானின் கையிலும் தலைக்கோலை வைத்து அழியாப் புகழைத் தேடிக்கொண்டார்கள். ஆடவல்லான் படிமங்கள் எத்தனையோ தமிழகத்துத் திருக்கோயில்களில் காணப்பட்டாலும், அப்படிமங்களுக்கெல்லாம் பேரரசாய்க் கண்ணிலும் கருத்திலும் நிறைந்து, நெஞ்சில் சொல்லொணாப் பேரின்ப அலைகளைப் பிறப்பிக்கும் பெருமிதப் படிமமாய்த் திகழ்வது திருநல்லூர் மணவழகர் கோயிலில் விளங்கும் ஆடவல்லானின் அற்புத செப்புத்திருமேனிதான் கி. பி ஒன்பது அல்லது பத்தாம் நூற்றாண்டில் வார்க்கப்பட்டதாகக் கலையறிஞர்களால் கருதப்படும் இத்தெய்வத் திருமேனி ஈடு இணையற்ற அழகுடையது அமர்ந்த நிலையில் உள்ள முயலகனின் தலை மீது வலது திருக்கால் ஊன்றிய நிலையில் இருக்க, இடக் கால் தூக்கிய திருவடியாய் ஒரு புதுமையான ஆடல் தோற்

றத்தில் வடிக்கப்பட்டிருக்கும் இந்த ஆடவல்லான் படிமம் எட்டுத் திருக்கரங்களுடன் காணப்படுகிறது.

வலக்கரங்களில் மேலிருத்து கீழே துடியும் ஏடும், தலைக் கோலும் காணப்படுகின்றன வலது முன்கால் காப்பு முத் திரையில் அமைந்துள்ளன. இடக்கரங்களில் மேலிருந்து கீழே தீயகலும், மணியும் முத்தலைப் பாம்பும் உள்ளன. இடது முன்கரம் வீசிய கரமாய் வேழ முத்திரையில் அமைந் துள்ளது.

வலதுகரங்களில் மேலிருந்து கீழே மூன்றாவது கரத்தில் காணப்படும் தலைகோல், சோழர்கள் ஆடற்கலைக்கு அளித்த மதிப்பையும், அத்தனைக்கும் முதலான ஆடவல்லானின் திருக்கரங்களில் ஆடற்கலைத் தெய்வமான சயந்தனும் அடக் கம் என்பதை அழகுபட விளக்கிவிட்ட நுணுக்கத்தையும் மிக தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. எத்தனையோ பேரறிஞர் கள் இச்செப்புத் திருமேனியைப் பற்றி எழுதியிருந்தும், ஏனோ இத்தலைக்கோலை அப்பு, சூலம் என்று தவறாகப் புரிந்து கொண்டு எழுதியுள்ளார்கள். தமிழகத்து திருக்கோயில்களில் எங்கும் காணமுடியாத அதிசமாய் விளங்கும் இத்தலைக் கோலின் வடிவம் இச் செப்புத்திருமேனியில் அற்புதமாய் அமைந்திருந்தும் இப்பிழை நேர்ந்துள்ளது இறைவனின் கரங்களில் காட்டப்பெறும் கருவிகளில் ஒன்றாய் தலைக்கோ லைச் சிறபச்செந்நூல் அடையாளம் காட்டுகிறது. "பெரும் புகழ் கொண்டவனும், பேரரசனும் போரில் புறமுதுகிட்ட வனுமாகிய பகையரசனுடைய வெண்கொற்ற குடையைக் கவர்ந்து கொணர்ந்து, அதை ஏற்ற அளவில் நறுக்கி, கணுக் களின் நடுவாகிய இடங்களைப் பொன் தகட்டால் போர்த்தி

கணுக்கள் தோறும் நவமணி வடங்கள் சுற்றி அலங்கரித்து உருவாக்கப்படுவது தலைக்கோல் எனப்படும்,'' என்ற சிற்ப செந்நூலின் வரிகளைப் படித்துவிட்டு 'நல்லூரின் திருக் களத்தில் இலங்கும் இத்தலைக் கோலைப் பார்க்கும் போது கற்பனைக்கு வரிவடிவம் கிடைக்கிறது காலம் காலமாய் தமிழர்கள் போற்றி வந்த அழகுக்கலையாம் ஆடற்கலைக்கு அரசர்கள் செய்தளித்த அற்புதக் கலைவடிவங்களுள், இந்த நல்லூர் நடராசன் தனியிடம் பெறுவதே, இவர் திருக்கரங் களில் இருக்கும் தலைக்கோலாலும், இலக்கண வரம்புகளை மீறிய இவரது புதுமையான ஆடல் தோற்றத்தாலும் தான் இந்த எழிலார்ந்த படிமத்தை உருவாக்கி இதன் கரங்களில் அர்த்தம் பொதிந்த தலைக்கோலை அழகாய் வடித்திருக் கும் சோழநாட்டு வார்ப்புக் கலைஞனின் திறந்தான் எத்தனைப் போற்றக்குரியது !

---

ஆடவல்லான் : சோழர்காலத்தில் நடராசர் என்ற சிவனது கோலத்திற்கு ஆடவல்லான் என்ற பெயரினைச் சோழர்கள் சூட்டிமகிழ்ந்திருக்கின்றனர், முதல் இராசராசன் காலத்தில் ஆட வல்லானின் பல அழகிய செப்புத்திரு மேனிகள் செய்தளிக்கப் பட்டிருக்கின்றன. தஞ்சைப் பெரிய கோவிலில் இருந்த பொருள்கள் 'ஆடவல்லான்' என்ற பெயர் சூட்டப்பெற்ற கல்லால் நிறை எடுக்கப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது. தமிழ்நாட்டின் நடராசர் உருவம் உலகம் போற்றும் வகையில் உருப்பெற்றது சோழர்காலத் திலேயே ஆகும். மதுரைக் கோவிலில் இருந்த நடராசரின் திருத்த மண்டபம் 'அதிரவீசியாடுவார் திருமண்டபம்' என்று கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றது மதுரைக்கு அருகிலுள்ள பொருப்பு மேட்டுப்பட்டியில் கால்மாறி ஆடும் நிலையில் அரிய செப்புத் திருமேனி ஒன்று கிடைத்துள்ளது.

---

# அதிகார நந்தி—ஓர் அரிய செப்புத் திருமேனி

ச. ஹரிஹரன் எம். ஏ.
திருநெல்வேலி.

இந்திரஜித் எய்த பிரம்மாஸ்திரத்தால் கட்டுண்டு இராவணன் அவைக்கு கொண்டு வரப்பட்ட அனுமன் அரக்கர் குல நாயகனின் அம்சங்களைக் கண்டு பின்வருமாறு தனக்குள் வியக்கிறான் :

"என்ன அழகு ! என்ன மதிநுட்பம் ! என்ன தீரம் ! என்ன விதமான மங்கலக் குறிகள் தான் இந்த அரக்க அரசனிடம் இல்லை ? இத்தனை குணங்களும் நன்மைக் கெதிர்ப் புறமாக இல்லாவிடில் இவன் தேவர் குலத்து இந்திரனையும் பழிக்கும் வண்ணம் விளங்கியிருப்பான். தன்னுடைய கொடூரமான சிந்தனை செயல்களால் தேவர்களாலும் ஏன் அசுரர்களாலும் வெறுக்கத் தக்கவனாக ஆகிவிட்டான். கொதித்து எழுந்தாலோ இவன் இந்த உலகத்தையே கடலாக ஆக்கிவிடுவான்".[1]

தன்முன் நிற்கும் வானரத்தைப் பார்த்து திரண்ட தோள் வலி கொண்ட இராவணனா இவ்வாறான சிந்தைதனையில் ஆழ்ந்தான் ! "என் முன் நிற்பதை அன்றொரு நாள் என்னை கைலையில் சபித்த சிவ கணங்களின் தலைவன் நந்தி பகவானோ அல்லது பாணாசுரனோ இவ்வுருவில் வந்துள்ளான் ".[2] இராவணன் இவ்வாறாக தன் முன் நிற்கும் அஞ்சனையின் மைந்தனை நந்திகேஸ்வரனுக்கு ஒப்பிடுவது அதிகார நந்தியின் சிற்ப வடிவமைதியை அறிந்து கொள்ள அடிகோலுகிறது. இராமாயணத்தில் நந்திகேஸ்

வரர் பழுப்பு நிற அல்லது சாம்பல் நிற உருவடிவாக குறிக்கப்பட்டுள்ளார்.[3] அவர் சிவபெருமானின் மற்றொரு உடலாக கருதப்படுகிறார். (அபரதனு).

ஆலயங்களில் நந்திகேஸ்வரர் காளை உருக்கொண்டவராக சிவபெருமானை நோக்கி அமர்ந்த நிலையில் வடிக்கப்பட்டுள்ளார். சிவபெருமானைப் போன்று மேலிருகரங்களில் மான்மழு ஏந்தியவராகவும் கீழிருகரங்கள் அஞ்சலி முத்திரை நிலையிலும் வடிக்கப்படுவதும் இன்னொரு வகை. சில சமயங்களில் தேவியுடன் கூடியவராக நந்திகேஸ்வரர் உருவம் அமைந்துள்ளது.

நந்திகேஸ்வரரின் உருவமைதியைப் பற்றி விஷ்ணு தர்மோத்தரம் எனும் ஆகமம் பின்வரும் குறிப்பினை அளிக்கிறது 'அவர் மூன்று கண்கள், நான்கு கரங்கள், செந்நிற மேனி உடையவராக இருத்தல் வேண்டும். இடையில் புலித்தோல் அணிந்திருக்க வேண்டும். ஒரு கரத்தில் திரிசூலமும், மற்றொரு கரத்தில் வாளும், மூன்றாவது கரத்தை தலைக்கு மேல் உயர்த்தியும், நான்காவது கரத்தை ஒரு குழுவினரை ஆணையிட்டுச் செல்லும் நிலையிலும் வடிக்க வேண்டும். அவர் பார்க்கும் பார்வையே சிவாலயத்தில் வரும் பக்தர்களை ஒழுங்கு படுத்தி விடுபவராக அமைந்திருத்தல் வேண்டும்'.[4]

இத்தகைய உருவமைதியுடன் அதிகாரநந்தியின் சிற்பமோ செப்புத் திருமேனியோ கிடைத்திலது. சிவபெருமானைப்

போன்ற உருவத்துடன் கூப்பிய கரங்களுடன் அதிகார நந்தியின் உருவம் படைக்கப்பட்டுள்ளது.[5]

திருநெல்வேலி மாவட்டம், திருநெல்வேலி வட்டம் கங்கை கொண்டான் ஊரில் கைலாசநாதர் ஆலயத்தில் அதிகார நந்தியின் செப்புத்திருமேனி உள்ளது. சதுர வடிவமான பத்ரபீடத்தின் மேலுள்ள பத்ம பீடத்தில் நின்ற நிலையில் காணப்படுகிறது. நன்கு ஊன்றிய வலது காலும் சற்றே வளைந்த இடதுகாலும் நான்கு கரங்களும் கொண்டு விளங்குகிறது. மேலிரு கரங்களில் சிவனின் அம்சங்களான மான், மழுவும் தாங்கி கீழிருகரங்கள் கூப்பிய நிலையிலும் காணப் படுகிறது. தலையில் கிரீட மகுடமும், வலது காதில், நாக குண்டலமும், இடது காதில் பத்ரகுண்டலமும் அணி செய் கின்றன. முகம் மட்டும் ஒரு குரங்கின் முகமுடையதாக இருக்கிறது. பார்த்த மாத்திரத்திலேயே இதை எவரும் அனுமன் திருமேனி என்ற முடிவுக்கு வருவார்கள். ஆனால் சிவபெருமானின் மான் மழு குறியீடுகள் இதை அதிகார நந்தி என்றே உணர்த்தும். செப்புத் திருமேனியின் நிலை அவையவங்கள் வடிக்கப்பட்டுள்ள விதம், அணி செய்யும் அணிகலன்கள் ஆகியவை பிற்கால விசயநகரப் பாணியை நினைவூட்டும்.

**அடிக்குறிப்புகள் :**

1. வால்மீகி இராமயணம்-சுந்தரகாண்டம் அத்தியாயம் 49 செய்யுள் : 16—20
2 Ibid -ஐம்பதாவது அத்தியாயம்-செய்யுள் : 1-3
3. Ibid - உத்தரகண்டம் பகுதி :16

4. நந்தீ காரிய த்ரி நேத்ரேஷு சதிர் பாஹு மஹா
புஜ :
ஸீந்து ராகுண சங்கேசோ வயாக்ர சாம பரிச்சத :
த்ரி ஆல பிந்தி பாலோ ச காயோஸ்தஸ்ஸ காரயேது
சிரோகதம் த்ரி நீயம் சது தர்ஜயந்தப் ததாபரம்
ஆலோசமானம் கரீதவ்யம் தூராதாகாமினம் ஜனம்
(விஷ்ணு தர்மோத்தரம்)

5. பிபராணம் பரசும் ம்ருதே கரதலே ஈசப்ரமாணந
சலிம்
பஸ்மோத்தூளித பாண்டுரம் சசிகலா கங்க ரதபர்த்
தோஜ் வலம்
பரியாய த்ரிபுராந்தகம் ப்ரதமத : சரேஷ்டம் கணர்
வந்திதம்
ப்ரம் மேந்தராச்யுத பூஜிதாங்க்ர கமலம் ஸ்ரீ நந்தி
ரேசம் பஜே
(த்யானச்லோகம்)

---

## நந்திக்குத் திருக்கல்யாணம்

சிவபெருமானின் வாகனமான நந்தியை பல ஊர்களிலும் மனித உருவில் செப்புச்சிலையாகவும், கற்சிலையாவும் வடித்து வழிபடுகின்றனர். அதிகாரநந்தி என்று இவ்வுருவம் வழங்கப்படுகிறது.

திருமழ்பாடி என்ற ஊரிலிருக்கும் நந்திகேஸ்வரருக்குத் திருமணம் திருவையாற்றில் விமரிசையாகக் கொண்டாடப் படுகிறது. இது ஏழூர் திருவிழா என்றழைக்கப்படுகிறது. திருமணத்திற்கு பழங்களை திருப்பழனம் என்ற ஊரும், உணவைத் திருச்சோற்றுத்துறையும், வேதியர்களை வேதிக் குடியும், கண்டிமாலையைக் கண்டியூரும், பூக்களை திருப் பூந்துருத்தியும், நெய்யை திருநெய்தானமும் அனுப்பி வைப்பதாக குறிப்பிட்டு இவ்வூர் தெய்வங்கள் ஏழும் திருவையாறில் திருவிழாக் கோலம் கொள்கின்றன.

---

# தமிழ்நாட்டில் உருவ எழுத்து

நடன. காசிநாதன் எம்.ஏ,
சென்னை.

எழுத்தறிவு மக்களிடையே எவ்வாறு வளர்ச்சி பெற்றிருத்தல் வேண்டும் என்பதை ஆய்ந்து ஆராய்ச்சியாளர்கள் கீழ்காணுமாறு வளர்ச்சி பெற்றிருக்கலாம் என்ற முடிவுக்கு வந்துள்ளனர். 1) உருவ எழுத்துக்கள் (Pictograph) 2) கருத்தெழுக்கள் (Ideograph) 3) ஒலியமையெழுத்துக்கள் (Phonograph) என்ற முறையில் வளர்ச்சி பெற்றிருக்கலாம் எனக் கருதுகின்றனர்.

முதன் முதலில் ஆதிமனிதன் தம் கருத்தை அடுத்தவர்க்குப் புலப்படுத்த உருவம் வரைந்து காண்பித்திருத்தல் வேண்டும் என்றும். நாளடைவில் தாம் வரைந்து காண்பிக்கும் உருவத்துக்கு மேலும் சில கருத்துக்களைப் புலப்படுத்தியிருப்பான் என்றும், பின்னர் அக்கருத்துக்களுக்குச் சில ஒலி அமைப்புக்களைத் தோற்றுவித்திருத்தல் வேண்டும் என்றும் கருதுகின்றனர். இத்தகையதொரு ஆராய்ச்சி சென்ற ஒரு நூற்றாண்டுக் காலமாகத்தான் நடைபெற்று வருகிறது. ஆனால் நம் தமிழகத்தில் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பேயே எழுத்துக்களின் வளர்ச்சியைப் பற்றி ஆய்வு நடந்திருக்கிறதென்பதும், அத்தகைய ஆய்வில் மேற்காணும் முடிவுக்கு முன்னமேயே வந்துவிட்டனர் என்பதும் தெரியவருகிறது. அதுமட்டுமல்லாமல் உருவ எழுத்துக்கள் எந்த அடிப்படையில் தோன்றின என்பதையும் புலப்படுத்தி உள்ளனர்.

யாப்பருங்கல உரையில், அதன் இறுதி சூத்திரத்துக்கு விளக்கம் கூறுகையில், உரையாசிரியர் கீழ்வரும் பாடலை மேற்கோள் காட்டியுள்ளார்.

'உருவே உணர்வே ஒலியே தன்மையென
இருவகை யெழுத்தும் ஈரிரண்டாகும்'

எழுத்தாவது நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டிருந்து என்பதை உரு, உணர்வு, ஒலி, தன்மை என்று சுட்டுகிறது. ஒவ்வொரு வகை எழுத்துக்கும் விளக்கமான பாடல் மேற்கோள் காட்டப்பட்டுள்ளது.

காணப்பட்ட உருவம் எல்லாம்
மாணக்காட்டும் வகைமை நாடி
வழுவில் ஓவியன் கைவினை போல
எழுதப்படுவது உருவெழுத்தாகும்.

உருவ எழுத்து எவ்வாறு எழுதப்பட்டது என்பதை மேற்காணும் பாடல் புலப்படுத்துகிறது. உணர்வு, ஒலி, தன்மை எழுத்துக்கான விளக்கப்பாடல்களும் கீழ்வருமாறு காணப்படுகின்றன.

'கொண்டவோர் குறியால் கொண்டவதனை
உண்டென்று ணர்த்துவது உணர்வெழுத்தாகும்',
'இசைப்படு புல்லின் எழா அல் போலச்
செவிப்புல னாவது ஒலியெழுத்தாகும்'.
'முதற்காரணமும் துணைக் காரணமும்
துணைக் காரணத்தொடு தொடரிய வுணர்வு
அவற்றொடு புணர்ந்த வகத்தெழு வளியின்
மிடற்றுப் பிறந்திசைப்பது தன்மை யெழுத்து.'

நன்னூலுக்கு எழுதப்பெற்ற மயிலைநாதர் உரையிலும் எழுத்தின் வளர்ச்சிக்கு சில சூத்திரங்கள் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. இச்சூத்திரங்கள் கி. பி 17 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சுவாமிநாத தேசிகரால் எழுதப்பெற்ற இலக்கணத்துக்கு எழுதப்பெற்ற உரையின் பாயிரத்திலும் காணப்படுகின்றன. அச்சூத்திரங்கள் கீழ்வருமாறு.

''வடிவு பெயர் தன்மையுண் முடிவு நான்கா
நடைபெறு நாவலர் நாடிய வெழுத்தே''

வடிவு, பெயர், தன்மை (துண்) முடிவு என நால்வகை எழுத்துக்கள் வழங்கின என்பதை இச்சூத்திரம் தெரிவிக்கிறது மேலும் ஒவ்வொரு வகை எழுத்தையும் விளக்கும் வண்ணம் கீழ்வரும் சூத்திரங்கள் தரப்பட்டுள்ளன.

''கட்புலனில்லாக் கடவுளைக் காட்டும்
சட்டகம் போலச் செவிப்புல வொலியை
உட்கொளற்கிடும் உருபாம் வடிவெழுத்தே''

''வடிவு முதன் முன்மையின் வழங்கும் எழுத்திற்
படுபல பகுதிக் கிடுபெயர் பெயரே''

''தான முயற்சி தரக்கொளச் செவிப்புலன்
ஆயவொலி தன்மை-யெழுத்தாகுமே''

''உருவமுடன் மும்மையோ டொன்றிய வியல்பை
மடுவவுவன் துளி (துன்) முடிவெழுத்து.

கி.பி 8 ஆம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் தமிழ் நிகண்டு திவாகரம்,

'பெயர் எழுத்து முடிவெழுத்து வடிவெழுத்துத் தன்மை
எழுத்தென வெழுத்தின் பெயர் இயம்பினாரே,

என்று எழுத்துக்களின் பெயர்களைக் குறிப்பிடுகின்றது.

மற்றொரு நிகண்டான பிங்கலந்தை 'வடிவு பெயர், தன்மை முடிவு நான்கெழுத்து' என்று கூறுகிறது. இந்நிகண்டுகள் மேற்கூறப்பட்ட எழுத்தின் நான்கு கட்ட வளர்ச்சியைத் தான் தெரிவிக்கின்றன. ஆனால் அவ்வளர்ச்சி நிலையில் முன்னதைப் பின்னதாகவும் பின்னதை முன்னதாகவும் மாற்றிக் கூறுகின்றன.

எழுத்தில் ஏற்பட்ட நான்கு கட்ட வளர்ச்சிலையத் தெரிவிக்கும் சூத்திரங்களையடுத்து, யாப்பெருங்கல விருத்தியில் பின் வருமாறு காணப்படுகின்றது.

"(மகடு உ, ஆ, பிடி, குமரி, கன்னி, பிணவு, முடுவன், என்றின்ன சிலவெழுத்தும்)[1] அ க ச ட த ப ய முதலிய வாய வெழுத்தும். அ ச ல வ ர ங ய முதலிய இராசியெழுத்தும், கார்த்திகை முதலிய நாளெழுத்தும், தோப முதலிய நால்வகை எழுத்தும், சாதி முதலிய தன்மையெழுத்தும், உச்சாடன முதலிய உக்கிரவெழுத்தும், சித்திர காருடம் முதலிய முத்திறவெழுத்தும், பாகியல் முதலிய நாலவகையெழுத்தும், புதிதேள் முதலிய நாற்கதியெழுத்தும், தாது முதலிய வொளி யெழுத்தும், மாகமடையம் முதலிய சங்கேதவெழுத்தும், கலி முதலிய சங்கேதவெழுத்தும், பார்ப்பான் வழக்காகிய பதின்மூன்றெழுத்தும் என்று இத்தொடக்கத்தனவும், கட்டுரையெழுத்தும், வச்சிர முதலிய வடிவெழுத்தும், மற்றும் பலவகையசற் காட்டப்பட்ட எல்லா எழுத்தும் வல்லார்வாய்க் கேட்க" என்பதாகக் காணப்படுகிறது. இதில் பதினைந்து வகையான எழுத்துக்கள் குறிக்கப்பட்டுள்ளன.

கிறித்து அப்தத்துக்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்பும், சில நூற்றாண்டுகளுக்குப் பின்பும் இந்தியாவில் வழக்கில் இருந்த எழுத்துக்களைப்பற்றி சமவயங்க சுத்த என்ற சமண நூலும், லலிதவிஸ்தர என்ற பௌத்த நூலும் குறிப்பிடுகின்றன, சமண நூலில் 18 வகையான எழுத்துக்களும் பௌத்த நூலில் 64 வகையான எழுத்துக்களும் தரப்பட்டுள்ளன.

யாப்பருங்கல உரையில் காணப்பெறும் எழுத்துக்களுக்கு இன்னமும் முழுமையான விளக்கம் யாராலும் தரப்படவில்லை. தி தா. சுப்பிரமணியம் அவர்கள் 1935ஆம் ஆண்டில் 'தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடும் சித்திர எழுத்துக்கள்' (The Pictog

raphs in Tamil Literature) என்னும் கட்டுரையில் இவை பற்றி எழுதியுள்ளார்.[2] மேலும் தென்னிந்திய கோயிற் சாசனங்கள் பாகம்-3 பகுதி 2ல் சில சித்திர எழுத்துக்களை, மேற்காணும் சமண, பௌத்த நூல்களில் தரப்பட்டுள்ள சில எழுத்துக்களோடு ஒப்பிட்டு கீழ்க்காணுமாறு விளக்கியுள்ளார்.

''**ஆயவெழுத்து**'' **ஆயம்** என்றால் வருமானம். இலாபம் முதலான பொருள்களைத்தரும். கல்வெட்டுக்களிலும் இலக்கியங்களிலும் இச்சொல் வரிகள், நுழைவு வரி மற்றும் சுங்க வரியைக் குறிப்பதற்குக் கையாளப்பட்டுள்ளது. சமண நூலில் 'ஆயஸ' அல்லது ''ஆதம்ஸ' எழுத்து என்று ஒன்று குறிக்கப் படுகிறது, 'ஆதம்ஸ' என்ற சொல் சில இடங்களில் 'பொறித்த' என்னும் பொருளில் வழங்கப்பட்டிருக்கிறது. 'அய' என்றால் இரும்பு என்றுபொருள். ஆதலால் இரும்பால் பொறிக்கப்பட்ட எழுத்து என்று பொருள் கொள்ளலாம். தமிழில் வழங்கப்பட்ட 'ஆயம்' என்ற எழுத்தும், 'ஆயஸ' எழுத்தும் ஒன்றுக்கொன்று தொடர்புடையதாகக் காணப்படுகிறது,

''**இராசியெழுத்து** : 'ராசி' என்னும் சொல் இராசி மண்டலத்தையும் குறிக்கும். இராசியையும் நட்சத்திரத்தையும் குறிக்க, வான இயலும் சோதிட இயலும் சில சில உருவங்களைக் குறிப்பது நமக்குத் தெரியும். பண்டைக் காலத்திலேயே மேற் கூறப்பட்ட இரு இயல்களும் மிகுந்த முன்னேற்ற நிலையில் வளர்ச்சிபெற்றிருந்தன, இத்தகைய வளர்ச்சி சில குறியீடு களையும், படங்களையும் பயன்படுத்துவதற்குக் காரணமாக அமைந்திருக்கும். ஆதலால் இத்தகைய படங்களோ அல்லது குறியீடுகளோதான் 'இராசி எழுத்து' என வழங்கப்பெற்றிருக்கும்.

''**நாள் எழுத்து**'' நாள் என்னும் சொல் ஒரு பகல், ஒரு இரவு சேர்நத நாளைக் குறிக்கும், முற்காலத்தில் இச்சொல்

நட்சத்திரத்தைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டது. நட்சத்திரத்தைக் குறித்த நாள் என்னும் சொல்லையே மக்கள் ஒரு பகல், ஒரு இரவைக் குறிக்கப் பயன்படுத்தியிருப்பர் எனத் தெரிகிறது. தமிழகத்தில் வழங்கப்பெறும் "நாள் என்ன செய்யும் கோள் என்ன செய்யும், என்ற பழமொழி மூலம் இதனை உணரலாம். ஆதலால் நட்சத்திரம் போன்ற உருவம் எழுத்தைக் குறிக்கப் பயன்பட்டதையே நாள் எழுத்து என்று வழங்கியிருக்கின்றனர்[3]

மேற்கூறப்பெற்ற எழுத்துக்கள் எவ்வாறு வரையப்பெற்றிருக்கலாம் என்பதற்குச் சான்றாக மொகஞ்சதாரோவிலும், ஹரப்பாவிலும் கண்டெடுக்கப்பட்டுள்ள உருவ எழுத்துக்களைக் குறிப்பிடலாம். அத்தகைய உருவ எழுத்துக்கள் குஜராத் மாநிலத்திலுள்ள லோத்தல், துவாரகா போன்ற இடங்களிலிருந்தும் கண்டெடுக்கப்பட்டுள்ளன,

## ஓவியத்தில் காணப்பெறும் உருவஎழுத்து

தமிழகத்தில் முதன் முதலாக இத்தகைய உருவ எழுத்துக்கள் தென்னார்க்காடு மாவட்டத்தில் திருக்கோயிலூர் வட்டம், கீழ்வாலை என்னுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள பண்டைய ஓவியத்தில் காணப்படுகின்றன. இதில் ஐந்து எழுத்துக்கள் உள்ளன. முதல் எழுத்து தென்னங்கீற்று போன்றும், இரண்டாம் எழுத்து மத்தளம் போன்றும், மூன்றாம் எழுத்து சீப்பு போன்றும், நான்காம் எழுத்து மத்தளம் போன்றும், ஐந்தாம் எழுத்து நான்கு குறுக்குக் கால்களையுடைய சக்கரம் போன்றும் எழுதப்பட்டுள்ளன. இவ்வெழுத்துக்கள், இங்குள்ள ஓவியங்களை வரைந்தவனின் பெயராக இருக்கலாம் என்றும் கி.மு 500 லிருந்து கி.மு 1000 ஆண்டுகட்கு உட்பட்டதாகவும் இருக்கலாம் என்றும் பி. எல் சாமி குறிப்பிட்டுள்ளார்[4]

## பானை ஓடுகளில் காணப்பெறும் உருவ எழுத்துக்கள்

தமிழகத்தில் எந்தப் பகுதியில் அகழ்வாய்வு நடத்தப்பெற்றாலும் அங்கெல்லாம் கறுப்பு சிவப்பு பானைகளோடு சில உருவங்கள் வரையப்பெற்ற பானை ஓடுகள் பெரும்பாலும் பெருங்கற்காலப் பொருட்களோடேயே கிடைத்து வருகின்றன. ஆதலால் பெருங்கற்கால மக்கள் இவற்றை எழுதியிருக்கின்றனர் என்று உறுதியாகக் கூறலாம். இவ்வுருங்களும், உருவ எழுத்தின் தொடர்ச்சியே என்று கருதலாம். இக்காலக் கட்டத்தில் இவ்வெழுத்துக்கள் ஒலி வடிவம் பெற்று வழங்கப் பட்டிருக்கலாம். ஆனால் அதை நாம் அறிய முடியவில்லை. பானை ஓடுகளில் கிடைக்கும் இவ்வுருவங்களை மொஹஞ்சதாரோ, ஹரப்பா உருவ எழுத்தோடு ஒப்பிட்டு ஒரு ஆய்வை பி.பி லால் மேற்கொண்டார். அவ்வாய்வின் மூலம் பானை ஓடுகளில் காணப்பெறும் உருவங்களில் 80 சதவிகித உருவங்கள் மொகஞ்சதாரரோ, ஹரப்பா கால உருவ எழுத்துக்கள் போன்றே காணப்படுகின்றன என்று தெரிவித்துள்ளார்.[5] சென்னைப் பல்கலைக் கழகத் தொல்பொருள் ஆய்வுத்துறை சேகரித்து வைத்திருந்த பானை ஓடு ஒன்றின் மீது இருந்த உருவத்தைப் பார்த்துவிட்டு அது ஹரப்பன் கால உருவம் மாதிரியே இருப்பது அறிந்து பெரிதும் வியப்புத் தெரிவித்தார் அஸ்கோ பர்போலே என்னும் பின்லாந்து நாட்டு அறிஞர்.

## இலங்கை முத்திரை உருவம்

சில ஆண்டுகளுக்கு முன்பு இலங்கையின் வடக்குப் பகுதியான யாழ்ப்பாணத்துக்கு அருகில் உள்ள அனைக் கோடை என்ற இடத்தில் நிகழ்த்தப்பெற்ற அகழ்வாய்வில் பெருங்கற்காலச் சின்னத்தில் ஒரு செப்பு முத்திரை கண்டெடுக்கப்பட்டதாகவும் அதில் ஒரு வரியில் உருவ எழுத்துக்களும், மற்றொரு வரியில் தமிழ் பிராமி எழுத்துக்களும் பொறிக்கப்

பெற்றிருப்பதாகவும், மேற்கூறப்பட்ட இரு வரிகளுமே ஒரே பொருளைக் குறிப்பனவாக இருக்கலாம் என்றும் இந்திர பாலா என்னும் வரலாற்றறிஞர் செய்தி வெளியிட்டிருந்தார். அதில் காணப்பெற்ற உருவ எழுத்துக்கள் தமிழ் நாட்டில் பெருங்கற்காலப் பானை ஒடுகளில் பொறிக்கப்பெற்றிருந்த உருவங்கள் போன்றே காணப்பட்டன. ஆதலால் தமிழ்நாட்டு பானை ஒடுகளில் பொறிக்சப்பட்டிருக்கும் உருவங்களும் ஏதோ ஒரு பொருளை உணர்த்தும் உருவ எழுத்தாகத்தான் இருக்க வேண்டும் என்று கருதலாம். அது மட்டுமல்லாமல் கிறித்து அப்தத்தின் தொடக்க காலத்தில் வாழ்ந்த மக்கள் உருவ எழுத்தையும் தன்மை எழுத்தையும் (பிராமி) அறிந்த வர்களாக இருந்திருக்கிறார்கள். அதன் காரணமாகத்தான் பின்னாளிலும் உருவ எழுத்தைப் பற்றிய செய்தியை இலக்கிய ஆசிரியர்கள் எடுத்தாண்டிருக்கிறார்கள் என்று நம்பலாம்.

## பண்டைத் தமிழ் எழுத்துக்களோடு காணப்பெறும் உரு வங்கள்

தமிழ்நாட்டில் சில இடங்களில் பண்டைத் தமிழ் எழுத்துக் (தமிழி எழுத்து) கல்வெட்டுக்களோடு சில உருவங்களும் வரையப்பெற்றுக் காணப்படுகின்றன.[6] இதே போன்று இலங்கையில் காணப்பெறும் பண்டையக் கல்வெட்டுக்கள் சில வற்றில் அவற்றின் முன்னோ அல்லது பின்னோ அல்லது மேலேயோ, கீழேயோ சில உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அவ்வாறு காணப்பெறும் அவ்வுருவங்களையெல்லாம் பட்டியல் இட்டுத் தொகுத்துத் தந்துள்ளனர். மேலும் அவ்வுருவங்கள் எந்த கல்வெட்டின் அருகில் காணப்படுகின்றனவோ அந்தக் கல்வெட்டுக்கும் அங்கு காணப்பெறும் உருவத்துக்கும் யாதாவதொரு தொடர்பு இருத்தல் வேண்டும் என்றும் எழுதி யுள்ளனர். அவற்றில் 'ஸ்வஸ்திகா' உருவம் 'திஸா' என்னும் ஒலியைக் குறிப்பதாக உள்ளது என்று கூறப்பட்டுள்ளது. அத்தோடு ஹரப்பன் கால உருவ எழுத்துக்களைப் புரிந்து

கொள்வதற்கு இலங்கைக் கல்வெட்டுக்களும், அக்கல்வெட்டுக் களோடு காணப்பெறும் உருவங்களும் உதவக்கூடும் என்று நாம் எதிர்பார்க்கலாம் என்ற கருத்தும் தெரிவிக்கப்பட்டுள்ளது [7]

ஆதலால் தமிழகத்துப் பண்டையக் கல்வெட்டுக்களோடு காணப்பெறும் உருவங்களுக்கும் அந்தக் கல்வெட்டு வாசகங் களுக்கும் தொடர்பு கட்டாயம் இருந்தாதல் வேண்டும். இது பற்றி சில ஆண்டுகளுக்கு முன்பாகத் 'தமிழகக் கல்வெட்டுக் களோடு காணப்படும் குறியீடுகள்' என்னும் தலைப்பில் நான் ஒரு கட்டுரை எழுதியுள்ளேன். உருவங்கள் காணப்பெறும் கல்வெட்டுக்கள், வணிகர்கள் சமணத்துறவிகளுக்கு அளித்த கொடையைப் பற்றி தெரிவிக்கின்றன. தமிழ் இலக்கியங்கள், பலவகைப் பொருட்களை விற்கும் வணிகர்கள், தங்களுக்கென வெவ்வேறு உருவம் பொறித்த கொடியை நாட்டிக்கொண்டு வாணிபம் செய்வர் என்று கூறுவதால்; அவ்வணிகப் பொருட் களைக் குறிக்கும் உருவங்களாக இருக்கலாம் என்று கருத்துத் தெரிவித்திருந்தேன். அத்தோடு வேறு சில கல்வெட்டுக் களோடு காணப்பெறும் உருவங்கள் அவை காணப்பெறும் கல்வெட்டு வாசகங்களைக் கொண்டு பார்க்கையில் அவர்கள் செய்த தொழிலைக் குறிப்பதாகவும் இருக்கலாம் என்றும் எழுதியுள்ளேன்.[8]

## முடிவுரை

மேற்கூறப் பெற்றவைகளிலிருந்து தமிழர்கள் உருவ எழுத்து பற்றிய முழுமையான அறிவை ஆயிரம் ஆண்டு களுக்கு முன்பாகவே பெற்றிருந்தார்கள் என்பதையும், தமிழ கத்திலும் உருவ எழுத்துக்கள் எழுதப் பெற்றுள்ளன என்பதை யும், இவ்வுருவ எழுத்துக்களுக்கும் மொஹஞ்சோதரோ, ஹரப்பன் எழுத்துக்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதையும், தமிழகத்திலும் இலங்கையிலும் பண்டையக்

கல்வெட்டுக்களோடு காணப்பெறும் உருவங்களையெல்லாம் தொகுத்து ஆய்ந்தால் ஹரப்பன் உருவ எழுத்துக்களைப் படிப்பதற்கு அது ஒரு திறவுகோலாக அமையும் என்பதையும் நாம் உணரலாம்.

**அடிக்குறிப்புகள் :**

1. இருதலைப் பகரத்திற்குள் அடங்கிய பகுதி அச்சுப் பிரதியில் காணவில்லை. பழைய ஏட்டுப் பிரதி ஒன்றில் கண்டதாகப் பண்டித மு. இராகவையங்கார் கூறுவர். (ஆராய்ச்சித் தொகுதி பக்கம் 139)
2 Journal of Archaeologicals Society of South India.
3. தென்னிந்தியக் கோயிற் சாசனங்கள் பாகம் 3 பகுதி 2 பக்கங்கள் 1583–85
4. பி. எல் சாமி, 'தமிழ்நாட்டில் சிந்துவெளி எழுத்தோவியம் பக்கம் 77
5. B.B. Lal, Ancient India, No. 16, pages 4–24.
6. I. Mahadevan, Corpus of the Tamil Brahmi inscriptions. கல்வெட்டுக் கருத்தரங்கு, பக்கங்கள் 71–73
7. S. Paramavitana, "Inscriptions of Ceylon" Volume I, pages XXV-XXVI
8. "இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் பத்தாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை" தொகுதி 3, பக்கங்கள் 58-62

---

**தலைத்தீபாவளி**

சக்தியும் சிவமும் இரண்டறக் கலந்து ஒன்றாகி நிற்றலைக் குறித்து மேற் கொள்ளப்படும் கேதார—கௌரி விரதமே தீபாவளியாகக் கொண்டாடப்படுகிறது. இதனை ஒட்டியே கணவனும் மனைவியும் ஒத்த அன்பினராக வாழ வேண்டும் என்பதை வலியுறுத்த புதுமணத் தம்பதிகள் தலைத்தீபாவளியைச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர்–பொரா.

---

# மூவேந்தரிடை ஒற்றுமை

செ. இராசு எம்.ஏ.,
தமிழ்ப் பல்கலைக்கழகம் தஞ்சாவூர்

மூவேந்தர் ஆட்சி தமிழகத்தில் நிலவிய போது குறுநில மன்னர்களும், வேளிர்களும் எத்துணை வலிமையுடையவராக இருப்பினும் யாண்டும் மூவேந்தரே பெரிதும் சிறப்பிக்கப் பட்டனர். சேர சோழ பாண்டியர் என்ற வரிசை அகர நிரல் படக் கூறப்பெற்றாலும் இம்முறை மாறியும் வழங்கப் பெறுதல் உண்டு. தொல்காப்பியர்

'வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்
போந்தை வேம்பே ஆரென வரூஉம்,

'மாபெருந் தானையர்' எனக்கூறும் இடத்தில் சேரர் பாண்டியர், சோழர் என்ற வரிசையில் கூறப்பெற்றுள்ளனர்[1], சங்க இலக்கியத்தில் இவர்கள் **பொதுமை சுட்டிய மூவர்**[2], **முற்றிய திருவின் மூவர்**[3], **விறல்கெழு மூவர்**[4], **தமிழ்கெழு மூவர்**[5], **முரசு முழங்கு தானை மூவர்**[6] எனக் கூறப்பெற்றுள்ளனர்.

வீரஞ்செறிந்த மூவேந்தரும் பிறர் நாட்டை அடிமைப் படுத்தி அரசாள வேண்டும் என்ற எண்ணம் இல்லாவிடினும் புகழுக்காகச் செய்த பெரும் போர்கள் பல. ஒரே மொழி, ஒரே இனத்தைச் சார்ந்த தமிழக மூவேந்தரும் பிணக்கேற்பட்டுச் சண்டையிட்டு மாய்கின்றனரே ! இவர்கள் ஒன்றுபட மாட் டார்களா ? என்று எண்ணிய நல்லுள்ளங்களும் உண்டு. எப்போதாவது அரிதாக மூவேந்தருள் இருவரோ அல்லது மூவரோ ஒன்றாகக் கூடிய பொழுது அம்மாதிரியான உள் ளங்கள் மகிழ்ந்து கூத்தாடின.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத்துஞ்சிய பெருவழுதியும்

சண்டையின்றி ஒருங்கே இருத்தல் கண்டு காவிரிப்பூம்பட்டினத்துக் காரிகண்ணனார் மகிழ்ந்து பாடினார். 'இன்றே போல்கநும் புணர்ச்சி' என்று வாழ்த்தினார். பலராமனும் திருமாலும் போன்ற நீவிர் ஒன்று பட்டால் உலகம் உங்களுக்குக் கீழ் அடங்கும் என வாயார வாழ்த்தினார்.

'பால்நிற உருவின் பனைக்கொடி யோனும்
நீல்நிற உருவின் நேமியோனும் என்று
இருபெரும் தெய்வமும் உடன்நின் றாங்கு
.. ... ...... ...... இருவரும்
உடனிலை திரியீராயின் இமிழ்திரைப்
பௌவம் உடுத்த பயங்கெழு மாநிலம்
கையகப் படுவது பொய்யா காதே'

என்பது அவர் பாடிய பாடலாகும்.[7] மற்றுமொரு முறை சேரமான் மாவண்கோவும், பாண்டியன் கானப்பேர் கடந்த உக்கிரப் பெருவழுதியும் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியும் ஒருங்கிருந்த போது அவ்வையார் பாடிய பாடல் புறநானூற்றில் சிறப்பிடம் பெற்றுள்ளது.

'ஒன்றுபுரிந் தடங்கிய இருபிறப்பாளர்
முத்தீப் புரையக் காண்டக இருந்த
கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்தே
யானறி அளவையோ இதுவே வானத்து
வயங்கித் தோன்றும் மீனினும் இம்மென
இயங்கு மாமழை யுறையினும்
உயர்ந்துமேந் தோன்றிப் பொலிகநும் நாளே'

என்பது அப்பாடலாகும்.[8] சிலப்பதிகாரம் மூவேந்தரை ஒருமைப்படுத்தப் பாடிய ஒரு நூல். புகார், மதுரை, வஞ்சி என முத்தமிழ் நாட்டுத் தலைநகரங்களுள் ஒன்று கண்ணகி வாழ்வு மூவேந்தர் நாடுகளிலும் இடம் பெறுகிறது. மூவேந்தரை இளங் கோவடிகள் இணைத்துப் பாடிய இடங்கள் பற்பல.

செங்குட்டுவன் வடநாட்டு அரசர்கட்கு ஓலை அனுப்புகின்றான். இதனை

வடதிசை மருங்கின் மன்னர்க் கெல்லாம்
தென்றமிழ் நாட்டுச் செழுவில் கயல்புலி
மண்டலை யேற்ற வரைக'

என்று இளங்கோவடிகள் குறிப்பார்.[9] மேலும் முத்தொள்ளாயிரம் மூவேந்தரையும் பற்றிப் பாடப்பெற்ற ஒரு நூல். சுந்தரர் காலத்தில் சேரமான்பெருமாள் நாயனார் மதுரை சென்ற போது அங்கு ஏற்கனவே பாண்டியன் மகளை மணந்த சோழப்பெருவேந்தன் தங்கியிருந்ததாகப் பெரிய புராணம் கூறுகிறது. மூவேந்தரும் மதுரையில் மகிழ்ந்து சந்தித்து அளவளாவினர்.

'செம்பிய னாருடன் செழியர்தாம் பணிந்து சேருடன்
அளவளாவிய விருப்பாய் அமர்ந்து'

என்பது பெரியபுராணப் பகுதி.[10]

சோழர் செப்பேடுகளில் மூவேந்தர் சின்னங்கள் பொறிக்கப் பெற்றுள்ளன. பாரியைக் கொல்ல மூவேந்தர்கள் ஒன்று திரண்டதாகச் செவிவழிச் செய்தியாகக் கூறுகின்றனர். இதற்குச் சங்க இலக்கியத்தில் ஆதாரம் இல்லை. திருக்கோவிலூரில் நடைபெற்ற பாரி மகளிர் திருமணத்தின்போது மூவேந்தர் ஒன்றாக வந்ததாக தனிப்பாடல்கள் சில கூறுகின்றன.

'திங்கட்குடையணி சேரனும் சோழனும் பாண்டியனும்
மங்கைக்கு அருகிட வந்து நின்றார் மணப்பந்தரிலே!

என்பது ஒருதனிப்பாடல் பகுதியாகும்.[11] குமரி மாவட்டம் முப்பந்தல் எனுமிடத்தில் அவ்வையார் ஆலயத்தில் மூவேந்தர் வந்து கூடியதாக ஒரு வழக்கு உண்டு. பழையனூர் நீலி பழி தீர்த்து வேளாளர் தீப்பாய்ந்த இடத்தில் தீ அணையாது எரிய மூவேந்தரும் வந்து பார்த்ததாகக் கூறும் பாடலும் வழக்கில் உள்ளது.[12] களப்பிரர் காலத்தில் மூவேந்தரும் காஞ்சியில் ஒன்றாகச் சிறையில் இருந்தனர் என்ற வரலாறு

ஒன்றும் கூறப்படுகிறது. சுந்தரந்தோள் மாவலி வாணராயன் மூவேந்தரையும் பணியச் செய்தான் என்று தனிப்பாடல் கூறுகிறது.

'திக்கயங்கள் எட்டுமுட்ட வைத்தபுள் பதாகையான்
செழியர்சேரர் வளவர்வந்து திறையளக்கு முன்றிலான்'
என்பது ஒரு பாடல் பகுதி.

முதலாம் ராசேந்திரன், விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்க சோழன், இரண்டாம் ராசாதிராசன் ஆகியோர் தேவியார்களுக்கு 'முக்கோக்கிழாணடிகள்' என்ற பெயர் இருந்தமையும் நோக்கத் தக்கது.[13] கி. பி. எட்டாம் நூற்றாண்டிலிருந்து சோழர்கள் இறுதிக்காலம்வரை அரசியல் அதிகாரிகள் பலர் மூவேந்தவேளான் என்று பெயர் பெற்றிருந்தனர். அவர்களுட் சிலர் பெயர் வருமாறு: 'மூவேந்த மங்கலப் பேரரையன்'[14] 'ஆதித்தன் தேவனான மூவேந்த வேளான்'[15] 'இராமசந்திர மூவேந்த வேளான்'[16] 'தென்னவன் மூவேந்த வேளான்'[17] 'வேளாளக் கூத்தன் செம்பியன் மூவேந்த வேளான்'[18] 'அதிகாரி வீரசிகாமணி மூவேந்த வேளான்'[19]

சேலம் மாவட்டத்துக் கொல்லிமலையில் அறப்பளீசுவரர் கோயிலில் பொன்னேரியன்மனின் கல்வெட்டில் (இது ஒரு செப்பேட்டின் நகல்) 'இது சேர சோழ பாண்டியர்கள் முக்கோக்கள் ரட்சை' என்ற தொடர் காணப்படுகிறது.[20]

அண்மையில் தமிழ்ப் பல்கலைக் கழகக் கல்வெட்டுத் துறை தொண்டியில் படி எடுத்த சடையவர்மன் வீரபாண்டியனின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் (1178) மூவேந்தர்

சின்னமும் ஒன்றாகப் பொறிக்கப்பட்டுள்ளது மூன்றுக்கும் சம இடம் கொடுத்துள்ளது வரலாற்றுச் சிறப்பு மிக்கது இதில் பாண்டியர் மீன் சின்னம் பிற இடங்கள் போலச் செங்குத்தாக இல்லாமல் பெருக்கல் குறிபோன்று புதுமையாகப் பாண்டியர் காசுகளில் காணப்படுவதுபோல் உள்ளது.[21]

குறிப்புகள் :

1. தொல்காப்பியம், புறத்திணை இயல் 5.
2 புறநானூறு 357
3. மேலது 205
4. மேலது 137
5. அகநானூறு 31
6. பொருநராற்றுப்படை 54
7. புறநானூறு 58
8. மேலது 367
9 சிலப்பதிகாரம் 25—170—172.
10 பெரியபுராணம் கழறிற்றறிவார் 91, 92
11. பெருந்தொகை — 1008.
12. மேலது 1460.
13. ARE 4 of 1921 ; SII V 700; SII V 645; SIII V 456.
14. பாண்டியர் வரலாறு, தி.வை. சதாசிவப்பண்டாரத்தார். பக்.53
15. SII III 57
16. ARE 232 of 1912.
17. பிற்காலச் சோழர் வரலாறு, தி. வை. ச. பண்டாரத்தார், பக். 141.
18. ARE 675 of 1919.
19. SII III 66
20 ARE 493 of 1930.
21 இந்நூலில் வேறொரு பகுதியில் இக்கல்வெட்டின் படம் வெளியாகியுள்ளது.

# மருதுபாண்டியரின் மக்கள் நலப்பணிகள்

மீ. மனோகரன்
சிவகெங்கை.

சிவகெங்கைச் சீமையை ஆண்ட மருது பாண்டியர்கள் ஆங்கிலேயரின் ஆதிக்கத்திற்கு எதிராகப் போராடிய விடுதலை வீரர்கள் என்பதை நாடறியும். கி. பி. 1780 முதல் 1801-இல் தூக்கிலிடப்பட்டது வரை அவர்கள் அமைதியாகக் கழித்த ஆண்டுகள் மிகக் குறைவே. சில ஆண்டுகள் போரன்றி வேறெதையும் பற்றிச் சிந்தித்திட முடியாத காலம் சில ஆண்டுகள் போர்மேகங்கள் சூழ்ந்து நின்ற காலம். இப்படிப் பட்ட நிலமைகளிலும் மக்களுக்குத் தம்மால் இயன்ற நன்மை களைச் செய்வதில் முன்னோடிகளாய் விளங்கினர்.

**ஊருணிகள் :** அவற்றில் தலையாயது ஊருணிகளை உருவாக்குவதில் அவர்கள் எடுத்துக்கொண்ட அக்கறையா கும். மருதரசர் ஆட்சிக்காலம்... முந்திய ஆண்டில் வானம் பொய்த்ததால் ஏற்பட்ட அனுபவம், சிவகெங்கையில் குடி நீர்க்குளம் ஒன்று தோண்டுமாறு ஆணை பிறந்தது, அரசரி டமிருந்து. அன்று ஊருணி உருவாகிட 'தச்சு' செய்யும் விழா! குறித்த நேரத்தில் மருதரசர் வருகை புரிந்தார். ஊருணிக் கான கட்டுமானப் பணிக்குப் பொறுப்பேற்றிருந்த கொத்த னார் மருதரசரிடம் ஒரு கேள்வியை எழுப்பினார்.

கொத்தனார் :- "அரசே ! உருவாகப்போகும் ஊருணி சூரிய விருத்தியில் அமையட்டுமா ? அல்லது சந்திர விருத்தி யில் அமையட்டுமா ?"

மருதரசர் :- "அதென்ன சூரியவிருத்தி, சந்திரவிருத்தி என்று. இதில் தொழில் இரகசியம் ஒன்றும் இல்லையெனில் நான் தெரிந்துகொள்ளலாமா ?"

கொத்தனார் :- தாராளமாக அரசே ! இதிலென்ன தொழில் இரகசியம் ? அப்படியே இருந்தாலும் எங்கள் அரசரி

டம் சொல்லுவதற்கு தடையேது? அதாவது, தென்வடல் அகலமாக அமைப்பது சந்திர விருத்தி, கீழமேல் அகலமாக அமைப்பது சூரிய விருத்தி. ஆனால் சந்திர விருத்தியில் அமையுமாறு வெட்டப்படுகிற குளங்களே குடிநீர்க் குளங்களாக அமையும். மற்றபடி என்றால் சூரிய விருத்தியில் வெட்டலாம்.

மருதரசர் :- என்ன அப்படிக் கேட்டுவிட்டீர்கள்? நான் மக்களின் குடிநீர்த் தேவைக்காகத்தானே ஊருணி அமைக்க உத்தரவிட்டிருக்கிறேன். சந்திர விருத்தியில் வெட்டவேண்டியதுதானே முறை. இதிலென்ன தங்களுக்குத் தயக்கம்?

கொத்தனார் :- அரசே! எங்களிடத்திலே ஒரு நம்பிக்கை நிலவுகிறது. சந்திர விருத்தியில் குளம் வெட்டினால், வெட்டுவித்தவருக்கு வம்சம் விருத்தியாவதில்லை என்பதே அந்த நம்பிக்கை. அதனால் தான் தயக்கம் அரசே!

மருதரசர் :- அப்படியா? இதற்காகவா இத்தனை பொழுது தயக்கம்? என் குடிகளே என் மக்கள். தனிப்பட எனக்கு மக்கள் இல்லாது போயினும் கவலையில்லை. குடிநீருக்கான குளம் எப்படி அமைய வேண்டுமோ அப்படியே அமைத்திடுக!

சிவகங்கைச் சீமையில் வழிவழியாக வழங்கிவரும் இந்த வாய்மொழிக் கதைக்கு வரலாற்று ஆதாரங்கள் மிகுதியாகக் கிடைக்கவில்லை; ஆனால் மருதுபாண்டியர் உருவாக்கித் தந்துவிட்டுப்போயுள்ள ஊருணிகள் உள்ளன. அவை சாகாவரம் பெற்ற சான்றுகள். மருதுபாண்டியர் ஆட்சியில் உருவான ஊருணிகள் பெரும்பாலும் சுற்றிலும் கட்டுமானங்களுடன் கூடியவை படிக்கட்டுகள் செம்புரான் கற்கள் எனப்படும் கற்களினால் கட்டப்பட்டிருக்கும். இவற்றைப் பின்பற்றி பிற்காலத்தில் செட்டி நாட்டில் உருவான ஊருணிகள் எல்லாம் கட்டுமானங்களுடன் அமைககப்பெற்றன. சிவகெங்கையில் மருதுபாண்டியர் தம் தாய், தந்தையர் நினைவைப்

போற்றும் வண்ணம் பொன்னாத்தாள் குளம், உடையார் சேர்வை ஊருணி ஆகிய நீர் நிலைகளை நிறுவினர்.[1] சிவகெங்கை நகரின் கிழக்கில் தாமரைத்தடாகமாகத் திகழ்வது ஆத்தா ஊருணி. இவை தவிர சிவகங்கை நகரின் கிழக்கில் இலட்சுமி தீர்த்தம் எனும் திருக்குளத்தையும் வெட்டுவித்தனர்.[2] அது இப்போது தூர்ந்து போய்க்கிடக்கிறது. தம் தாயார் நினைவாக காளையார்கோயிலிலும் கிழக்கில் ஒரு ஊருணி வெட்டுவித்தனர். இதுவும் ஆத்தா ஊருணி எனப் பெயர் பெற்று விளங்குகிறது. அங்கு கோபுரத் திருப்பணி முடிந்ததும், கோயிலின் தென்புறம் 'யானை மடு' எனப்படும் திருக்குளம் உருவாக்கப் பெற்றது. காளையார்கோயிலை அடுத்து 2 கிலோமீட்டர் தொலைவிலுள்ள பட்டர்கண்மாய் எனும் சிற்றூரில் மருதுபாண்டியர் தம் தளபதி 'சுபேதார்' என்பவர் நினைவாக சுபேதார் ஊருணி எனும் ஊருணியை வெட்டுவித்துள்ளனர். காளையார்கோயிலில் போர் நிகழ்ந்து கொண்டிருந்தபொழுது ஆயுதங்கள் வடித்துக் கொடுக்கும் பட்டரையாக விளங்கிவந்த 'கொல்லங்குடி' எனும் சிற்றூரில் "வெட்டுடைய காளி-அய்யனார்" கோயில் சாலையில் ஊருணி ஒன்றைத் தோண்டச் செய்தனர், மருதுபாண்டியர். மருதரசரின் குடும்பத்துடன் தொடர்புடைய காமராசர் மாவட்டத்து நரிக்குடியிலும் தாகம் தீர்த்திட தடாகம் ஒன்றை மருதுபாண்டியர் மக்களுக்கு அளித்தனர்.[3]

இது போலவே, மருதுபாண்டியார் குன்றக்குடியில் குன்றின் தென்பால் மிகப்பெரிய தடாகத்தினை உருவாக்கினர் இதற்கு 'மருதாபுரி'[4] என்று பெயர் ஏற்பட்டது. மருதாபுரியைச்சுற்றி மருதுபாண்டியர் தென்னந்தோப்பினை உருவாக்கினர்; செய்பொன்மாரி எனும் கிராமத்தையும் அளித்தனர் இதனை மருதுபாண்டியரின் அவைக்களப்புலவரான சாந்துப்புலவர் தாமியற்றிய "மயூரகிரிக்கோவை" யில். "வேண்டிய நல்கும் மயிலார் மயில்வரை மேல்மருது பாண்டியன் பொய்கை" என்றும் "மருதுநராதிபதி சிந்தையிற செய்த

திருக்குளம்'' என்றும் போற்றுகிறார். மயூரகிரிக்கலம்பகம் எனும் இன்னொரு நூலும் இத்தடாகத்தைப் போற்றுகிறது. இவ்வூரணி தற்காலத்தில் ' மருதா ஊருணி' என்றபெயருடன் விளங்குகிறது.

அமராவதிப்புதூருக்கு அருகில் தேவகோட்டை —காரைக்குடி சாலையில் உள்ளது சங்கரபதிகோட்டை. மருதிருவர் வேட்டையாட இங்கு அடிக்கடி வருவதுண்டென்றும் அவர்களே இந்தக்கோட்டையைக் கட்டினர் என்றும் கூறப்படுகிறது இந்தக் கோட்டைக்குத் தென்புறம் அருமையான கட்டுமானம் கொண்ட பெரிய ஊருணி ஒன்றுள்ளது. படிக்கட்டுகள்செம்புரான் கற்களினால் ஆனவை, தற்சமயம் முந்திரிமரங்கள் வளர்ப்பதற்காக அரசின் ஒதுக்கப் பட்ட காடாக இருப்பதால், வெளியார் பார்வையில் படாத இடத்தில் இவ்வூருணி அமைந்துள்ளது. இதனை மருதரசர் தம் பணி என்றே கருத இடமுள்ளது. அருகே, கல்லுப்பட்டி செல்லும் சாலையில் காணப்பெறும் குளக்கற்களில் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. வைணவத்தலமான திருக் கோட்டியூர்த் திருக்குளத்தைப் புதுப்பித்துப் பொலிவுறக் செய்தவர்கள் மருதுபாண்டியரே

தொண்டியில் ஊருணியில் கலிங்கு உள்வாயிலில் 'மருது பாண்டியர் செய்து வைத்த கலிங்கு' எனத்தெரிவிக்கும் கல் வெட்டு இருப்பதாக கேள்விப்பட்டு, இக்கட்டுரையாசிரியர் அங்கு சென்று தேடியபொழுது உள்ளூர்வாசிகளும் கல்வெட்டு இருப்பதாக சொன்னார்கள். ஆனால் அப்போது குளத்தில் நீர்மட்டம் மிகுதியாய் இருந்த நிலையில் கல்வெட்டைத் தேடும் முயற்சியைக் கைவிடவேண்டியதாயிற்று. அண்மையில், தொண்டியில் தமிழ்ப்பல்கலைக் கழகக் கல்வெட்டு ஆய்வுத் துறையினர், அபூர்வமாக, சேர—சோழ –பாண்டியர் சின்னங் கள் ஒருசேர உள்ள வீரபாண்டியனின் 12-ஆம் நூற்றாண்டுக்

கல்வெட்டு ஒன்றைக் கண்டுபிடித்தபோது, அவ்வூர் காளி கணத்தான் குளத்துக்கு 9.11.1795-ல் மருது பாண்டியர் கலிங்கு கட்டிவைத்ததை உரைக்கும் இரு கல்வெட்டுக்கள் குளத்து மதகின் முகப்பில் காணப்பட்டதை உறுதி செய்து போர்க்காலத்திலும் மக்கள் நலப்பணியில் மருதுபாண்டியருக் கிருந்த வேட்கையைப்போற்றி செய்தி விடுத்துள்ளனர்.[10]

இவ்வாறு வெட்டுவிக்கப்பட்ட அல்லது அரசால் கட்டு மானம், கலிங்கு கட்டி வைக்கப் பெற்ற குளங்களை, அரசின் உதவியை எதிர்பார்க்காமல் மக்கள் தாங்களாகவே ஆண்டு தோறும் தூர் எடுக்கும் வழக்கம் சிவகங்கைச்சீமை மக்களிடம் இருந்து வந்துள்ளது இதற்கு "சேங்கை வெட்டு" என்று பெயர். சேங்கை என்பது சிறுகுளங்களைக் குறிப்பதற்கு சிவகங்கை வட்டாரத்தில் வழங்கி வரும் சொல்லாகும். இவ் வட்டாரத்தில் உள்ள நாட்டரசன்கோட்டையில் பங்குனியில் ஆண்டுதோறும் கண்ணுடைய நாயகி அம்மன் வெள்ளிரதத் திருவிழா தொடங்குவதற்கு முன்னர், 'சேங்கை வெட்டு' எனும் பெயரில் கோயில் குளத்தில் மக்கள் தாமாகவே தூர் எடுக்கும் விழா இந்நாளையிலும் நடந்துகொண்டுதானிருக் கிறது.

## கிணறுகள்

மருதுபாண்டிர் குளங்களை வெட்டியது தவிர, சாலை ஓரங்களில் கிணறுகளையும் வெட்டுவித்து மக்கள் தாகம் தீர்ப்பதில் மோகம் கொண்டிருந்தனர். பாண்டியன் கிணறு களைப் போலவே, மருதுபாண்டியர் கிணறுகளும் தேடிப் பார்த்தால் சாலையோரங்களில் தென்படக் காணலாம். சிவ கங்கை—மானாமதுரைச் சாலையில் கீழவாணியன்குடி அருகிலும். சிவகங்கை—மதுரைச்சாலையில் முத்தப்பட்டிக்கு முன்னதாகவும் இத்தகைய கிணறுகள் காணப்படுகின்றன.

காமராசர் மாவட்டம் நரிக்குடியிலும் மருதுபாண்டியர் கிணறு ஒன்று உள்ளது.[11] இவை தவிர, வேளாண்மை செழித்திட, உழவர்க்கெனத் தனியே கிணறு தோண்டச் செய்து பெரும் பணி புரிந்துள்ளனர் மருதுபாண்டியர். இக்கிணறுகள் "காரானர் கேணிகள்" என்று பெயர் பெற்றுள்ளன. இத்தகைய கேணிகள் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம் திருப்பத்தூரைச் சுற்றிக் காணப்படுகின்றன.[12]

### சத்திரங்கள்

மக்கள் தாகம் தீர்த்திட நீர்நிலைகளை நிறுவியது போலவே, நெடுந்தூரப்பயணிகள் மற்றும் ஆதரவற்றவர் பசித்துன்பம் போக்கிட சத்திரங்கள் பலவற்றைக் கட்டிவைத்தவர்கள், மருதுபாண்டியர். சிவகங்கை சமீனில் வரியாக வசூலிக்கப்பட்ட ரூ. 15—இலட்சத்தில், பிரிட்டிஷ் அரசுக்கு பேஷ்குஷ் ஆக ரூ.3. இலட்சம் கட்டியது போக, எஞ்சியதில் 3 இல் ஒரு பகுதி சத்திரங்களைப் பராமரிப்பதற்கெனச் செலவழிக்கப் பட்டதாக அறிகிறோம். அந்த அளவுக்கு, சமீன் ஏற்படும் முன்னமே, மருதுபாண்டியர் ஏராளமான சத்திரங்களை நிறுவியிருந்தனர். 'சத்திரங்கள் அனைத்துமே மருது சகோதரர்களால் கட்டப்பெற்றவை அவற்றை மேற்பார்வை செய்யும் பொறுப்பு மட்டும் சிவகங்கை அரசர்களுக்கு உண்டு. சத்திரக் கட்டிடங்களிலோ அவற்றின் பணங்களிலோ சிவகங்கை அரசர்களுக்கு எவ்வித உரிமையும் இல்லை', என்று தெரிகிறது.[13]

மருது பாண்டியர் சிவகங்கை, காளையார்கோயில், திருப்புத்தூர், திருக்கோட்டியூர், மானாமதுரை, முத்தனேந்தல் முதலிய இடங்களில் சத்திரங்களை அமைத்தனர்.[14] இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள குடியூர், அலையான்குளம், பாம்பன் முதலிய இடங்களிலும் சத்திரங்கள் நிறுவினர்.

சீனிக்காரனேந்தல் எனும் சிற்றூரில் கட்டப்பட்ட சத்திரம் அழிவுக்குள்ளாகிவிட்டது.[15] அலையான் குளத்திலிருந்த சத்திரம் மருது பாண்டியரின் தாயார் நினைவாக 'ஆனந்தாயி சத்திரம்' என அழைக்கப்பட்டது.[16] முத்தனேந்தலில் தம் அன்புக்குரிய அரசர் முத்துவடுகநாதர் நினைவாக "முத்து வடுகநாதர் சத்திரம்" ஒன்றை நிறுவினர். தொண்டியில் அறச்செல்வியைப் போற்றும் வகையில் "தர்மதேவதா சத்திரம்" எனும் பெயரில் சத்திரம் ஒன்று ஏற்படுத்தினர், திருப்பூவணத்தில் அவர்கள் நிறுவிய சத்திரத்தில் தற்போது ஊராட்சி ஒன்றிய தொடக்கப்பள்ளி நடக்கிறது காமராசர் மாவட்டம் நரிக்குடியில் 1786-இல் மருது பாண்டியர் ஒரு சத்திரம் கட்டினார்கள்: அதற்காக நரிக்குடி, ஆதித்தனேந்தல் முக்குளம், வீரக்குடி, நாலூர் நண்டுகாச்சி, கருமாயேந்தல், அத்திக்குளம், மாலூர், தர்மம், த. ஆலங்குளம், மேலப்பசலை ஆகிய 12 கிராமங்களைத் தானமாக வழங்கினார்கள்.[17]

தொண்டி—தீர்த்தாண்டதானம் சாலையில் கடலுக்குக் கால் கிலோ மீட்டர் தொலைவில் இருப்பது கலியநகரி. இங்கு வேட்டையாடுவதற்காக மருதுபாண்டியர் அடிக்கடி வருவதுண்டு. இது பழைய காசி—இராமேசுவரம் சாலையில் அமைந்திருப்பதுமாகும். இங்கு மருதுபாண்டியர் நிறுவிய சத்திரம் நாளும் பயணம் மேற்கொண்ட பல நூற்றுக்கணக்கான மக்களுக்கு விருந்து படைக்க அமுதசுரபியாக விளங்கியது. இச்சத்திரத்தில் இருபுறமும் திண்ணைகள் உள்ளன; மேலே ஓடு வேயப்பட்டுள்ளது. வடபக்கத்துத் திண்ணைப் பட்டியக் கல்லில் "மருது பாண்டி" என்று மட்டும் கல் வெட்டுக் காணப்படுகின்றது. சத்திரத்தில் உள்ளே மரத் தூண்கள் தாங்கும் உணவுக் கூடம், உக்கிராணஅறை, பிள்ளையார் கோவில் முதலியன உள்ளன. தூண்கள் மரத்தினால் ஆனவை எனினும் கல்தூண்கள் போலவே தோன்றுகின்றன. தூண்களில் அணில், கிளி முதலிய சிற்பங்கள் இருந்தவை எடுத்துச் செல்லப்பட்டுவிட்டன.

அன்னபூரணி எனப்படும் உணவுப்பொருள் வைப்பறையின் நுழைவாயிலில் கதவுநிலை மேற்பகுதி சிற்ப வேலைப்பாடு நிறைந்தது. இருபுறமும் இரு யானைகள் மாலை ஏந்திநிற்க, நடுவில் இலட்சுமி தாமரை மலரில் அமர்ந்திருக்கிறாள். இது கஜலட்சுமி, எனக் குறிக்கப்படுவதாகும். அதன் கீழ இரு புறமும் மருதுபாண்டியர் கூப்பிய கரங்களுடன் நிற்கின்றனர். முழங்கைக்குக் கீழும் ஆடை அணிந்துள்ளனர் இவை மருது பாண்டியர் உருவங்களே என மாவட்டகெசட்டியர் தந்த குறிப்பை வைத்து அங்கு சென்று இச்சிற்பத்தைத் தேடிய போது கதவுநிலையில் காணவில்லை. மீண்டும் தேடிய போது, கதவிலிருந்து உடைந்து ஒரு மூலையில் கிடைப்பதைக் காண நேர்ந்தது: ஹளெபீடு, பேலூர். சோமநாத்பூர் கற்சிற்பங்களுக்கு ஈடாக மருது பாண்டியர் செதுக்குவித்த மரச்சிற்பங்கள் பேணப்படாதுபோனது வேதனைக்குரியது.

இச்சத்திரத்தின் தென்மேற்கு மூலையில் உணவருந்து முன் தொழுவதற்கென்று, பிள்ளையார் சிலையொன்று அறைக்குள் வைக்கப்பட்டுள்ளது. இது அசாதாரணமாக ஐந்து அடி உயரமாக உள்ளது. இடப்புறம் மடியில் ஒரு பெண் அமர்ந்துள்ளாள். இவளை வல்லபை என்பார்கள். இப்படித் துணைவியுடன் தோற்றமளிக்கும் பிள்ளையார் உருவங்கள் அருகியே காணப்படுகின்றன. இப்பிள்ளையாரை 'வல்லப கணபதி' என்று அழைப்பர். இந்த வல்லவ கணபதியை ஒரு கோட்டையிலிருந்து கொண்டு வந்ததாக அறிகிறோம். மருதுபாண்டியருடன் தொடர்புடைய சங்கரபதிக் கோட்டையிலிருந்து இக்கற்சிலை கொண்டுவரப் பட்டதாக உள்ளூர் ஒன்றிய நடுநிலைப் பள்ளியின் ஆசிரியர் திரு பி, சுப்பிரமணியன் கட்டுரையாசிரியரிடம் தெரிவித்தார். பிள்ளையாரின் பீடத்தில் எண்ணைக் காப்பு கனமாக இருந்ததால், ''சின்ன மருது எனும் கல்வெட்டு இருப்பதாய் அவ்வாசிரியர் சொன்னதைக் கண்டறிய முடியவில்லை.

இந்தச்சத்திரத்தின் பராமரிப்பிற்காக 5½ கிராமங்கள மானியமாக மருதுபாண்டியரால் விடப்பட்டிருந்தன. சத்திரத்தின் தென்பால் மருதுபாண்டியர் ஒரு தோப்பு உருவாகிடச் செய்து இலுப்பை, புளி, நாவல், மா முதலிய மரங்களைவளர்த்திடச் செய்தனர். இதற்காக வெட்டப்பட்ட பெரிய சதுரக் கேணி இன்றும் உள்ளது. இலுப்பைக் கொட்டையிலிருந்து எண்ணை எடுத்து இரவில் சத்திரத்தில் விளக்கு எரிப்பதற்காகவே தோப்பு உருவாக்கப்பட்டதாம்.

இந்தக் காலத்தில் சாலை விடுதிகள் (Motels) இருப்பது போல அந்தக் காலத்தில் இல்லாத குறையை சத்திரங்கள் ஓரளவு போக்கின. அந்த வகையில் தான் மருதுபாண்டியர் சாலைகளை ஒட்டிய இடங்களில் சத்திரங்களை நிறுவினர். ஆனால் அவ்வாறு முக்கியமான சாலைகளை ஒட்டியில்லாத இடங்களிலும் ஊர்களிலும் மருது பாண்டியர் சத்திரங்களை நிறுவியுள்ளனர், அதற்குக் காரணம் நவாபின் படைகளுடன் நிகழ்ந்த போர்களினால், தலைவனை இழந்த குடும்பங்கள் பல. அப்படிப்பட்ட ஆதரவற்ற குடும்பங்களுக்கு உதவிடவும சத்திரங்களை பல இடங்களில் நிறுவியிருக்கக்கூடும். மருது பாண்டியரின கல்வெட்டுகள் மிகுதியும் கிடைத்தில. ஆனால் மக்களின் தாகத்தையும் பசிப்பிணியையும் போக்குவதில், அத்தனை போர்ச்சூழலிலும் ஈடுபாடு காட்டிய மருது பாண்டியார் நினைவு மக்கள் நினைவில், கல்வெட்டுக்களாசப் பதிவு பெற்று, நாட்டார் கதைகளாக மக்கள் நாவில் நடம் புரிகின்றன.

### அடிக்குறிப்புக்கள்

1. ந. சஞ்சீவி. மருதிருவர். பக். 78.
2. மேற்படி. பக். 72
3. Ramanathapuram District Gazetteer. p. 923.
4. Ibid. p. 906

5 உ வே சாமிநாதஐயர், மருதுபாண்டியர், செந்தமிழ் 1932
6 குன்றக்குடி தலவரலாறு — ஐந்துகோவில் தேவஸ்தானம் பக் 27.
7. மேற்படி. 28, 29
8. சோமலெ, இராமநாதபுரமாவட்டம், பக். 379.
9. மருதிருவர். பக் 75
10. தினமணி, நாளிதழ் 9-8-85
11. இராமநாதபுரமாவட்டம் 533, மருதிருவர். பக் 75:
12 இராமநாதபுரமாவட்டம் பக. 388
13. மேற்படி ப. 47
14. நா. கோவிந்தன், மருதுபாண்டியர், பக். 15
15. மருதிருவர். பக. 78
16 இராமநாதபுரமாவட்டம். பக். 271
17. Ramanathapuram District Gazatteer. p. 922
18. Ibid. p. 892
19. Ibid. p. 893

---

**வட்டி**

இன்று கடன் வாங்கியவர் செலுத்தும் வட்டியையே 'வட்டி' என்ற சொல்குறிக்கிறது. இச்சொல் சுமார் 400 ஆண்டுகளுக்கு முன்பிருந்துதான் இந்தக் கருத்தில் வழங்கப் படுகிறது. அதற்கு முன்பெல்லாம் பொலிசை, பொலியூட்டு என்ற சொற்களே வட்டிக்குப் பதிலாக வழக்கத்தில் இருந்தன. இச்சொற்கள் வழக்கிலிருந்தபோது வட்டி என்றசொல் கூடை யைக்குறித்தது. இராஜராஜன் காலத்தில் வட்டி வாணிகம செய்வார் என்பவர்கள், கூடையில் பொருள்கள் எடுத்துச் சென்று வியாபாரம் செய்தவர்கள் ஆவர் — செஞ்சி அருகில் உள்ள மேலச்சேரி கல்வெட்டு.

# மகாராஜக்கடை - ஓர் ஆய்வு

ச. கிருஷ்ணமூர்த்தி, எம்.ஏ (தமிழ்) எம்.ஏ (வர) பி எட்; டி இ,ஏ;
தருமபுரி

தருமபுரி மாவட்டம் கிருஷ்ணகிரி வட்டத்திலுள்ள மகாராஜக்கடை ஊரை அண்மையில் கள ஆய்வு செய்த போது பெருங்கற்கால கல்திட்டைகளும், ஓவியங்களும்[1] ஓவிய எழுத்துக்களும் கண்டறியப்பட்டன. பாண்டவரார் வீடு எனப்படும் கல்திட்டைகளில் ஓவியங்களும், மலை உச்சியில் ஓவியத்தில் எழுதப்பட்ட பிராமி எழுத்துக்களும் இவ்வூரின் தொன்மையை உணர்த்துகின்றன [2] அண்மையில் இவ்வூர்ப் பகுதியில் தங்கச் சுரங்கம் இருப்பதாக செய்திகள் வெளிவந்துள்ளது. குறிப்பிடத்தக்கது.[3]

**ஊரின் இருப்பிடம் :**

மகாராஜக்கடை கிருஷ்ணகிரியிலிருந்து குப்பம் செல்லும் சாலையில் வாணிக மையமாக உள்ளது, மகாராஜக்கடை நாரலப்பள்ளி ஊராட்சியில் உள்ள ஒரூராகும்[4] இவ்வூரைச் சுற்றி மலைக் குன்றுகள் உள்ளன. இவற்றை அங்கணாநாச்சி மலை என மக்கள் அழைக்கின்றனர். இம் மலையின் மறுபுறம் ஆந்திர மாநிலமாகும்.

**அங்கணாநாச்சி மலையின் தொன்மை**

அங்கணாநாச்சி மலையில் உள்ள 'மெகாலிதிக் டோம்ஸ்' எனப்படும் கல்திட்டைகளும், அவற்றில் சிலவற்றில் உள்ள ஓவியங்களும் வரலாற்றுக்கு முந்தைய காலந்தொட்டு மக்கள் இவ்விடத்தில் வாழ்ந்து வருகின்றனர் என்ற உண்மையைப் பறைசாற்றுகின்றன. மேலும் மூவாயிரம் அடிக்கு மேல் உயரமுள்ள அங்கணாநாச்சி மலையின் சிகரத்தில் ஈஸ்வரன் குகை என்ற குகைத்தளம் உள்ளது. குகையில் ஓரிடத்தில் சூலக்குறி பொறிக்கப்பட்டுள்ளது. சூலக்குறி அருகில் இருபுறமும்

வெள்ளை வண்ணத்தில் 'தமிழ்' எழுத்துக்கள் எழுதப்பட் டுள்ளன.[5] முதல் கல்வெட்டு மூன்று வரிகளைக் கொண்டுள்ளது.

"தம்ம
தொபக் கோடனயகு
காமப்ப"[6]

என்று தற்போது படிக்கப்பட்டுள்ளது. தமிழ் நாட்டில் இது வரை கண்டு பிடித்துள்ள தமிழி கல்வெட்டுகள் யாவும் சமண முனிவர்களுக்காக எடுக்கப்பட்டவை என ஒரு சாராரும்,[7] சமண மற்றும் புத்ததுறவியருக்காக எடுக்கப்பட்டதாக மற் றொரு சாராரும்[8] கூறிவருகின்றனர். சைவ, வைணவ சமயத் துடன் 'பிராமி எழுத்துக்கள்' எனப்படும் இக்குகைக் கல்வெட்டு களை இதுவரை ஒருவரும் தொடர்புபடுத்தியதில்லை. ஈண் டுள்ள தமிழி கல்வெட்டு சைவசமயத்துடன் (வேதநெறி) தொடர்பு கொண்டது போல் உள்ளது.

'தம்ம' என்ற சொல் தானம் என்ற பொருளில் பயன் படுத்தப்பட்டுள்ளது. 'தொபக்கோடன்' தானம் செய்தவன் பெயர் எனலாம். 'நல்லியக் கோடன்' போல் மகாராஜக் கடை யாகிய அங்கணா நாச்சிபனலயில் 2000 ஆண்டுகளுக்கு முன்பு இருந்த குறுநிலத் தலைவன் போலும்.[9] இவன் யக்ஞத்தை மேற்கொள்கிறான்[10] இவன் பெயருக்கு முன் யகு என்ற சொல் உள்ளது. 'பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி' 'இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி' போன்றவர்களைச் சங்ககாலத்தில் நாம் பார்ப்பதால் 'யக்ஞம்' மேற் கொண்டது இயல்பான ஒன்றே எனலாம். மற்றொரு கல்வெட்டு இம்மலையின் தொன்மையான பெயரைச் சுட்டுகிறது கல்வெட்டு வருமாறு :

"கோரு
சலம்"[11]

இரண்டுவரிசளுடன் கூடிய இக்கல்வெட்டை சமண பௌத்த துறவியர் வாழ்ந்த கற்றலம் அல்லது சிலாதலம் என்ற சொல்லுடன் தொடர்பு படுத்த முடியவில்லை. கோரு + அசலம் = கோரி என்பதற்கு அகராதியில் பார்வதி என்ற பொருளும் தரப்பட்டுள்ளது. அசலம் என்பது மலையைக் குறிக்கும் வடமொழிச் சொல்லாகும். பார்வதி அம்மையாகிய அங்கணாநாச்சி மலையே கோருசலமாக இருந்ததோ என எண்ண வேண்டி உள்ளது.

மதுரை அருகில் உள்ள ஆனைமலை கல்வெட்டில் 'இவகுன்றம்' என்ற தமிழ் எழுத்தில் கூடிய பெயரே கி.பி 7 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சம்பந்தரால் 'ஆனைமாமலை' என அழைக்கப்பட்டது டாக்டர் நாகசாமி குறிப்பிடுவார். 2000 ஆண்டுகளுக்கு முன் பார்வதியின் பெயராகிய கோரி யின் நாமத்தால் வழங்கப்பட்ட பெயரே சோழர்காலத்தில் அங்கணாநாச்சி மலை என தூய தமிழில் அழைக்கப்பட்டது போலும் (அம் + கண் + ஆ அங்கணா) மதுரையில் உறையும் அம்மைக்கு மீனாட்சி என்றும், காஞ்சியில் உறையும் அம்மைக்கு காமாட்சி என்றும், காசியில் உறையும் அம்மைக்கு விசாலாட்சி என்றும் கண்ணுடன் தொடர்பு படுத்தி நாமங்கள் வழங்கப்படுவது போல ஈண்டும் அழகிய கண்களையுடைய அம்மை என்ற பொருளில் வழங்கி உள்ளனர் மதுரையை மீனாட்சி அரசாட்சி செய்தது போல் அங்கணா நாச்சி செய்ததால் போலும் 'அங்கணா அரைசு நிலை' என சோழர் காலக் கல்வெட்டு சுட்டுகிறது மராட்டிய மாவீரன் மகாராஜ சிவாஜி இம் மலையை வென்றபின் இவ்வூர் மகாராஜக் கடையாயிற்று என்பர்.[12] ஆயின் அங்கணா அரைசு நிலை என்ற தொடரில் உள்ள ஆரைசு நிலை''[13] என்ற சொல்லே வடமொழியாக்கப் பட்டு மகாராஜக் கடையாயிற்றோ என்று ஆசங்கை எழுகிறது.[14] வண்ணத்தில் கூடிய தமிழ் எழுத்துக்கள் பொறிப்பாக இல்லாமல் ஓவியமாக இருப்ப

தாலும் மேற்கண்ட வாசிப்பு சரியென அறுதியிட்டு கூற முடிய வில்லை. எனினும் சூலத்தை ஈண்டுபார்க்கும்போது சைவ நெறியுடன் இம்மலையைத் தொடர்பு படுத்த முடியும் குகை உள்ள இடம் ஈஸ்வரன் சனி என்றே மக்கள் வழங்கு கின்றனர் நம் கருத்தை உறுதிசெய்வது போல் பண்டவா ரார் வீடு என மக்களால் அழைக்கப்படுவது கல்வெட்டுக் களில் உள்ள சிவ ஓவியங்கள் அமைந்துள்ளன. குறிப்பாக நடராசரது 'பிரபை' போன்ற ஓர் உருவம் உள்ளது. காவடி போன்ற உருவமும் உள்ளது. மேலும் தாய்த் தெய்வத்தை உணர்த்துவது போன்ற வயிறு பெரிதாகக் காட்டப்பட்ட ஓவியமும் குறிப்பிடத் தக்கதாகும். ஓவியங்கள் யாவும் வெள்ளை வண்ணத்தில் அமைய தாய்த் தெய்வம் போன்ற பெண் உருவம்மட்டும் கருப்புநிறத்தில் இருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். வெள்ளை வண்ணத்தில் கூடிய தமிழ் எழுத்துக்களும் பாண்டவரசர் வீட்டில் உள்ள பெருங்கற்கால ஓவியங்களும் சமகாலத்தவை என்பதால் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தை அறுதியிட்டு குறிப்பிடலாம். வண்ணத்தில் கூடிய கல்வெட்டு சைவ சமயத்துடன் அல்லது வேத நெறியுடன் தொடர்புடைய தாகக் கருதலாம். சோழர் காலத்தில் மூன்றாம் இராசராசன் ஆட்சி காலத்தில் ஜெயங்கொண்ட சோழ எயிடாழ்வார் பெருமாள் மகன் அடிமைகளின் தலைவனாகப் பணிபுரிவதாகத் தன்னைத் தானே இட்டுக்கொண்டு எழுதித் தந்ததை ஒரு கல்வெட்டில் பார்க்கிறோம் கல்வெட்டில் 'அங்கணப்பற்று நாடு' என்றே அழைக்கப்பட்டுள்ளமை பார்க்கிறோம்

மலைமீது கோட்டையும், மசூதியும், அனுமார்புடைப்புச் சிற்பமும், வெங்கடரமணர் கோயிலும் பார்வதி பரமசிவன் உதிரிச்சிற்பமும், பிறவும் பிற்காலத்தில் தோன்றியவையாகும். பாரமஹால் கோட்டைகளில் ஒன்றாக இக்கோட்டையும் சுட்டப்படுகிறது. கம்பி நாயுடு மும்முடி சின்ன வீரப்பநாயுடு ஆகியோருடன் இவ்வூர் தொடர்பு கொண்டுள்ளது மராட்டிய

மன்னன் சிவாஜி மற்றும் முஸ்லீம்கள் ஆகியோருடனும் தொடர்பு கொண்ட இவ்வூரில் சுமார் 300 ஆண்டுகளுக்கு முன் திருவண்ணாமலை அரணி, மற்றும் ஆந்திராவின் சில பகுதிகளிலிருந்து குடியேறிய அகமுடைய முதலியார் என்ற சாதியினரே இன்று 90% உள்ளனர். தெலுங்கையும் இவர்கள் பேசுகின்றனர் மலையையொட்டிய காசிரைம் போடு, பருத்திப்போடு போன்ற இடங்களே முன்னர் மக்கள் வாழ்ந்த இடங்களாகும். இன்றுள்ள ஊர் 300 ஆண்டுகளுக்கு முன் உருவாக்கப்பட்டதாகும்.

## அடிக்குறிப்புக்கள்

1. இங்குள்ள பெருங்கற்கால ஓவியங்களையும் தமிழி எழுத்துங்களையும் ஏப்ரல் 85ல் கண்டுபிடித்தேன். மகாராஜக்கடை ஊர் ஆய்வின் போது திரு ஜெயராமனும், திரு பூவப்பனும் உறுதுணையாக வந்தனர். திரு நாராயணன் வழக்கறிஞர் வேண்டிய உதவிகள செய்தார்.
2 சேலம் மாவட்ட விவரநூல் விஜயநகர அரசர் காலந்தொட்டே இவ்வூரின் வரலாற்றைக் குறிப்பிடுகிறது. தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை கல்வெட்டாய்வாளர் திரு இராஜகோபால் முனறாம் இராசராசன் மற்றும் விஜயநகர அரசர் கால கல்வெட்டுகளை படியெடுத்ததுடன் மலையின் மீதுள்ள அனுமன் புடைப்புச் சிற்பம் போன்றவற்றை ஏற்கனவே ஆய்வு செய்துள்ளார்.
3. ஜூலை 1985 தமிழ்நாடு அரசு சட்டமன்ற விவாதத்தில் தெரிவிக்கப்பெற்ற கருத்து'
4. நாரலப்பள்ளி ஊராட்சியின் தலைமை ஊராக மகாராஜக் கடை உள்ளது சந்தை கூடும் இடமாகவும் உள்ளது. தொகுதி அலுவலர் அலுவலகம் காவல் நிலையம், மேநிலைப்பள்ளி போன்றவையும் இவ்வூரில் உள்ளன புளி

இவ்வூரில் மிகுதியாக காய்ககிறது. ஏராளமான ஆடு களும் இவ்வூரில் உள்ளன. தங்கம் வெட்டி எடுப்பதற்கு முன்னரே இவ்வூர் செல்வச் செழிப்புள்ள ஊராகவே உள்ளது.

5. வண்ணத்தில் கூடிய தமிழி எழுத்துக்களைக கல்வெட்டே அல்ல' என திரு. அ. இராசேந்திரன் போன்றோர் குறிப் பிடினும் பெருமபாலான கல்வெட்டறிஞர்கள் கல்வெட்டு தான என்று குறிப்பிடுகின்றனர். 1985 மார்ச்31 பூண்டியில நடைபெற்ற வரலாற்றுககு முந்தைய கால கருத்தரங்கில் மேற்படிகருத்து உருவாயிற்று நேரில் ஆய்வு செய்த என்னைப் பொறுத்தவரை இவை தமிழ் பிராமி கல்வெட் டேயாகும்.
6. Three landmark inscriptions found recently in Tamil Nadu. என்ற கட்டுரையில திரு நடன காசிநாதன் அவர்களும இவ்விதம் படித்துள்ளதையே நானும் ஏற்கிறேன்.
7. டாக்டர் இரா. நாகசாமி, மயிலை சினி வேங்கடசாமி போன்றோர் இவ்விதம கூறி உள்ளனர். கல்வெட்டியல், மறறும் சமணமும் தமிழும் பார்கக.
8. திரு சோ.ந. கந்தசாமி பெளததம என்ற நூலின ஆசிரியர், டாக்டர் தெ. பொ. மீ—தமிழ் மொழி வரலாறு போன் றோர் இவ்விதக் கருத்துடையவர்கள்.
9. சென்னபபா, கங்கப்பா, சாநதப்பா போல காமப்ப உள்ளது.
10. யக்கும் குறித்த தமிழி கல்வெட்டு இதுவே எனலாம்.
11. கலவெட்டு முழுமையாக வாசிககவேண்டும்.
12. சேலம் மாவட்ட விவரநூல்.
13 தருமபுரி கல்வெட்டுகள் தொகுதி
14. இந்தகருத்தை திரு. பூங்குன்றன் அவர்கள் குறிப்பிட் டார்கள்.
15. 30 5.84 தினமலர் பத்திரிகை.

# பொன்மழை

**ச. பரணன்** எம்.ஏ., டி,இ,ஏ;
கரூர்.

மூன்றாம் குலோத்துங்கசோழனின் "புயல் வாய்த்து மண் வளரப் புலி யானையும் சக்கரமும்" எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியில் "தாங்கரும் போர் வடுகை வென்று வேங்கை மண்டலந்தனதாக்கிப் **பொன்மழை** பெய்துறங்கை யென்னும் பொன்னகர்புக்கு" என்று வருகிறது. இதில் 'பொன்மழை' என்பதன் பொருள் என்ன? அது பெய்தது எப்போது? என்ற வினாக்களுக்கு விடைகாண எழுந்ததே இவ்வாய்வு.

## தந்தேச்வரி ஆலயக் கல்வெட்டு கூறும் பொன்மழை

காகதீயர்களின் தலைநகராக விளங்கிய வாரங்கல்லில் பொன்மழை பெய்ததாக தந்தாவாரம் என்னும் ஊரிலுள்ள தந்தேச்வரி ஆலயத்தின் [மத்திய பிரதேசத்திலுள்ள ஒரு கிராமம்] கல்வெட்டு கூறுகிறது [1] இக்கல்வெட்டு கிரந்தம், மற்றும் நாகரியில் எழுதப்பட்டுள்ளது. அதில் கூறப்பட்டுள்ள செய்தியின் சுருக்கம் "விக்கிரம ஸம்வத்ஸரம் 1760 (கி. பி 1703)ல் திக்பாலதேவன் என்பான் தந்தாவாரத்துக்குக் குடும்பயாத்திரை செய்து தன் குலதெய்வமான தந்தேச்வரி தேவியை, வழிபட்ட செய்தியைத் தெரிவிக்கிறது அதிலே அவனுடைய பரம்பரை கூறப்படுகிறது. பஸ்தர்ராஜ வமிசத்தைச் சேர்ந்த அவர்கள் வாரங்கல் நகரத்துக் காகதீய வமிசத்துப் பிரதாபருத்திரன் சகோதரனை அன்னமராஜன் வழி வந்தவர்கள் என்றும் பிரதாபருத்திரன் யவனர்களிடம் (முகமதியர்களிடம்) தோல்வியுற்று நாட்டை இழந்தான், என்றும் பொனமழை (கனகவர்ஷம்) பெய்ததால் உண்டான கலவரத்திலே அவன் உயிரை இழந்தான் என்றும், அதன்மீது

பிரதாபருத்திரன் தம்பியான அன்னமராஜன நாட்டைத் துறந்து, வெளியேறி பஸ்தர்ப் பகுதியை அடைந்து அங்கே தனக்கெனத் தனி ராஜ்யம் ஒன்று அமைத்துககொண்டான் என்றும் கூறுகிறது [2]

மேற்காணும் கலவெட்டில் காகதீய வம்சம் பற்றி கூறப் படுவதால் காகதீய வரலாற்றினை சுருக்கமாக காண்போம்.

**காகதீய அரசு**

மேலைச் சாளுக்கிய மன்னனான ஆரம் விக்கிரமாதித்தியன் என்பவன் 'பேடன்' எனபவனுக்கு 'அநுமக்கொணடா' எனற நிலப்பகுதியைத் தானமாக வழங்க,[3] அதுவே பின்னாளில் காகதீய அரசு தோனறக் காரணமாக அமைந்தது. தக்காணத்தின் தென்கிழக்கில் தெலிங்கானா பகுதியில அமைந்துள்ள இடமே காகதீயர்களின் அரசாண்ட பகுதியாகும்.

தமிழகத்தில் மூன்றாம் குலோத்துங்கன் மன்னனாக வீற்றிருந்தபோது காகதீய நாட்டில் கி.பி. 1195-9 வரை ருத்திரதேவன் என்பவன் அரசனாக இருந்தான். இவனை தேவகிரியைத் தலைநகராகக்கொண்டு ஆட்சி புரிந்த சேவுணர் எனப்படும் யாதவ மன்னனான ஜைத்ரபாலன் போரிலே வென்று கொன்று விடுகிறான். இச்செய்திகளை யாதவ மன்னர்களின் ராஜப்பிரசஸ்தியால் காண்கிறோம் [4]

ருத்திரதேவனை வென்ற ஜைத்ரபாலன், மற்றொரு போரில் திரிலிங்காதிபதி எனபவனையும வெனறு அவனிடம் சிறையிலடைபட்டுக்கிடந்த கணபதி என்பவனை விடுதலை செய்து காகதீய நாட்டிற்கு அரசனாக முடிசூட்டுகிறாான.

இதனை "கருண சாகரமான அம்மன்னன் (ஜைத்ரபாலன்) கணபதியைச் சிறையிலிருந்து வெளி கொணர்ந்து அவனை அரசனாக முடிசூட்டினான்" என்று கல்வெட்டுக் கூறுகிறது.[5]

இக்கணபதி யார்? என்பதில் வரலாற்று அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு காணப்படுகிறது. ஜைத்ரபாலனால் போரில் கொலலப்பட்ட ருத்திரதேவனுக்குப்பிறகு காகதீய நாட்டை ஆள அவன வழியில் பிள்ளையில்லை. எனவே ஜைத்ரபாலன் கணபதியை அரசனாக்கினான் என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனால் உப்பரப்பள்ளிச் சாசனமும்,[6] கர்ணபரம்பரைச் செய்திகளும், கணபதியை ருத்திரதேவனின் மகன் என்றே கூறுகின்றன. டாக்டர் எம். ராமராவ் எழுதிய வாரங்கல் காகதீயர்களின் சரித்திரம் என்னும நூலில், ருத்திரதேவனின் தம்பியாகிய மகாதேவனுடைய மகன் கணபதி யென்று கூறுகிறார்.[7]

இதுவே பொன்மழை பெய்ததாகக் கூறப்படும் காகதீய நாட்டின் வரலாறு ஆகும்.

## குலோத்துங்கனும், பொன்மழையும்.

கி. பி. 1199ல் கணபதி காகதீய நாட்டு மன்னனாகப் பட்டமேறிய அதேயாண்டில மூன்றாம் குலோத்துங்கன் அவனுடன் போரிட்டு காகதீயர்களின் தலைநகரான வாரங்கலை கைப்பற்றுகிறான். குலோத்துங்கனின் திரிபுவனம் கல்வெட்டில் சோழர் ஆட்சி வடக்கே சக்கரக் கோட்டத்திலிருந்து, தெற்கே இலங்கை வரை பரவியிருந்ததாகக் கூறுகிறது. இதனை இவனின் மெய்க்கீர்த்தியிலும் "ஆழி மண்டலமும், ஈழ மண்டலமும்" என்னும் தொடரால் அறிகிறோம். காகதீயநாடு சக்கரக் கோட்டத்தில் அடங்கிய நிலப்பகுதியாகும். [ஆழி மண்டலம்]

காகதீய நாட்டை வெற்றி கொண்டதை மெய்க்கீர்த்தியில "பொன்மழை பெய்துறங்கை யென்றும், பொன்னகர் புக்கு" என்றும் கூறுகிறது உறங்கை யென்ற, மெய்ககீர்த்தியில குறிக்கப்படும் நகர் வாரங்கல் தான் என்று துணிந்து கூற முடியாது என்று சதாசிவ பண்டாரத்தார் தனது பிற்காலச் சோழர் வரலாற்று நூலில் கூறுகிறார். ஆனால் நீலகண்ட சாஸ்திரி, T.N சுப்பிரமணியன் போன்ற அறிஞர்கள் வாரங்கல் தான் உறங்கை என்று கூறியுள்ளனர்.[8] வெற்றிகொண்ட குலோததுங்கன் 'பொன்மழை பெய்து' பின்னரே அந்நகரில் நுழைகிறான்.

## பிரதாபருத்திரனும், பொன்மழையும்

இவ்வாய்வின் தொடக்கத்தில், குறிப்பிட்ட தந்தேச்வரி ஆலய கல்வெட்டில் கூறப்பட்ட பிரதாபருத்திரனை முகமதியர்கள் காகதீய அரசினை வென்று அதன் மன்னனான பிரதாபருத்திரனை தில்லி சுல்தான் கியாஸ் உத்தின என்பானின் மூத்த மகனான உலூக்கான் சிறைபிடித்து தக்க காவலுடன் டில்லிக்கு அனுப்பி வைத்தான். ஆனால் வழியில் நர்மாநதி தீரத்தில் தன் விருப்பப்படியே உயிர்துறந்தான பிரதாபருத்திரன் என்று வரலாறு கூறுகிறது. மேலும இந்நிகழ்ச்சிகள், கி பி 1323-ல் நடந்தேறின.[9]

தந்தேச்வர் ஆலய கல்வெட்டோ, பிரதாபருததிரன் யவனர்களிடம, தோல்வியுற்று நாட்டையிழந்து, பொன்மழை பெய்நதால உண்டான கலவரத்தில் கி.பி 1703-ல் இறநதான என்று கூறுகிறது இத்லிருந்து தந்தேச்வரி ஆலய கல்வெட்டில் உள்ள செய்தி ஓரளவு மட்டுமே உண்மை என்று தெரிகிறது காலம் சுமார் 400 ஆண்டுகள் வேறுபடுகிறது.

நாம் இங்கு கால ஆராய்ச்சியில் இறங்காமல் செய்தியினை மட்டுமே பார்க்கும்போது, பொன்மழை பெய்ததால் பிரதாபருத்திரன் இறந்தான் என்று கல்வெட்டும், வரலாற்றுப் படி சிறைப்பிடிக்கப்பட்டு டில்லி கொண்டு செல்லும்போது பிரதாபருத்திரன் வழியில் இறந்தான் என்றும் அறிகிறோம்.

**பொன்மழை என்றால் என்ன ?**

புராணச் செய்தியாக, ஏதேனும் ஒன்று பொன்மழை என்ற பெயரில், அந்நாட்டில் நிகழ்ந்திருக்க வேண்டும். அல்லது மண்மேட்டில் புதைந்திருந்த பொற்காசுகள், அதிக மழையினால் கரைந்து, மேட்டிலிருந்து விழுந்தபோது அதனை பொன்மழை பெய்ததாக மக்கள் முற்காலத்தில் நம்பியிருக்க வேண்டும் அல்லது முற்காலத்தில் வெற்றி கொண்ட மன்னன் யாரேனும் வெற்றியின் அடையாளமாக அந்நாட்டு மக்களுக்கும், வீரர்களுக்குப், பொன்னையும், பொருளையும் வாரி வழங்கியிருக்க வேண்டும். அது பற்றி பொன்மழையென்ற, தொடர்வழக்கில் வந்திருக்க வேண்டும். இவ்வாறின்றி வானிலிருந்து. பொன்மழையா, பெய்தது என்று பொருள், கொண்டால், அது இயற்கை இறந்த நிகழ்ச்சியாக (Super-Natural) மட்டுமே அமையும்.

காகதீயநாட்டில் பொன்மழை பற்றிய குறிப்புகளை கால அடிப்படையில் பார்க்கும் போது நமக்கு முதலாவதாக மூன்றாம் குலோத்துங்கனின், மெய்க்கீர்த்தியிலுள்ள தொடரே கிடைக்கிறது.

காகதீய மன்னன் கணபதியை, வெற்றிகொண்டு வாரங்கலை அடைந்த வெற்றியை, நம்மவர்கள் மெய்க்கீர்த்தியில், கூறும் போது அந்நாட்டோடு, தொடர்புடைய, பொன்மழை என்ற நிகழ்ச்சியினை நினைவூட்டும் வண்ணம் ''பொன்மழை

பெய்துறங்கையென்றும் பொன்னகர் புக்கு'' என்று கூறினர் போலும்.

அடுத்து தந்தேச்வரி ஆலய கல்வெட்டுக்கூறும் செய்தியில் முகமதியர்களிடப், தோல்வியுற்று நாட்டை இழந்து உயிர் துறந்த பிரதாபருத்திரனை, கற்பனையைக் கலந்து பொன் மழை பெய்ததால் உண்டான கலவரத்தில் இறந்தான் என்று கூறுகிறது. அவ்விதம் அவன் இறப்பினைக் கூறுவதில் பெருமைப் படுவதாகவும் தெரிகிறது. ஏனெனில் மன்னர்கள் எவருமே தங்கள் வெற்றிகளை மட்டுமே இலக்கியத்திலும், செப்பேடுகளிலும், கல்லிலும் கூறினார்களேயன்றி, தங்கள் தோல்விகளைத் துணிந்து கூறினார்கள் இல்லை. இந்நோக்கில் தந்தேச்வரி ஆலய கல்வெட்டினைப் பார்க்கும்போது பிரதாபருத்திரன் இறப்பினை, அந்நாட்டோடு தொடர்புடைய பொன்மழையினை இணைத்து, அதன் காரணமாக இறந்தான என்று கூறினர் எனக் கொள்ளலாம்.

இறுதியாக பொன்மழை பற்றிய செய்தி ஒன்று மாலிக்க பூர் படையெடுப்பினால் ஹரிஹரரும், புக்கரும் நாடிழந்து முனிவர் வித்யாரணியரைச் சரண் அடைந்தனர், அவரும் துங்கபத்திரை நதிக்கரையிலே, ஸ்ரீசக்ரவடிவிலே ஒரு நகரம் அமைக்க சொன்னார் பொருள் இல்லாமல், எப்படி பெரு நகர் அமைப்பது? என்று ஹரிஹரரும், புக்கரும் கலங்கிநின்ற வேலையில் வித்யாரணிய முனிவர் புவனேசுவரி தேவியை வேண்டி, தேவியின் அருளால், அந்த இடத்திலே பொன் மழை பொழிந்தது என்று ஒரு செய்தி கூறப்படுகிறது. மேற்படி வித்யாநகர் கி.பி. 1336ஆம் ஆண்டு அமைக்கப்பட்டது, என்று சக்தியிதழில் சிருங்கேரி தர்பார் என்னும் கட்டுரையில் காணப்படுகிறது.[10]

'பொனமழை' தொடர் காகதீய நாட்டோடு ஏதோ வொருவகையில் ஒன்றிய புராணத்தின் அடிப்படையிலோ அல்லது அரசியல் அடிப்படையிலோ தொடர்புடையதாக இருந்திருக்கிறது. பொன்மழை என்பது என்ன என்பதை அறுதியிட்டுத் திட்டவட்டமாகக் கூற இயலவில்லை. இனி வரும் ஆய்வுகளில் இதன் பொருள் வெளிப்படக் கூடும்.*

அடிக்குறிப்புகள்

1. Ep. Ind. Vol. XII No. 30, pp. 242—50.
2. An. Rep. on S. I. Epigraphy 1909, para 66.
3. The early history of the Deccan part. IX, p. 577. Edited by G Yazdani.
4. Brombay Gazetter Vol I, part II pp. 238—9, Verse 41 in p. 272.
5. Indian Antiquvary Vol XIV, page 316, see also Vol XXI p. 197.
6. Hyderabad Archaeological series No. 3, Verse 21—24,
7. The Kakatiyas of Warangal p. 53, by Sr. M. RamaRao.
8. South Indian temple Inscriptions Vol III part II page 169. The cholas. by K. A. N. p. ["Waragal sometimes, called Erungallu, a name which is early tamilised into Urangai"]
9. The early Muslim expansion in South India pp. 118—120 see also. The Kakatizas of warangal by Dr. M. RamaRao. p. 98.
10. சக்தி—தீபாவளிமலர் 1984—சிருங்கேரிதர்பார் கட்டுரை —பக். 118. தென்னிந்தியக் கோயிற்சாசனம் பக்கம் 3, பகுதி 2. பக் 169 – 175

*பொன்மார், செம்பொன்மாரி என்ற பெயரில் தமிழ் நாட்டில் இன்று ஊர்கள் உள்ளதும் ஆய்வுக்குரியது

# சமுதாய நலப்பாக்கும் தொல்லியல் கண்டு பிடிப்புகள்.

அரங்க. பொன்னுசாமி, எம்.ஏ. (தொல்லியல்), எம்.ஏ. (வரலாறு), டிப். மானிடவியல், எம். லிட்.,
சென்னைப் பல்கலைக் கழகம்.

இன்றைய உலகில் ஒவ்வொரு நாளும் புதிய புதிய அறிவியல் கண்டுபிடிப்புக்களைப்போலத் தொல்லியல கண்டு பிடிப்புகளும் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. இவை மக்களை ஆச்சரியத்திற்கு உள்ளாக்கிக் கொண்டிருக்கின்றன.

அமெரிக்க ஐக்கிய நாட்டில் புளோரிடாவிற்கருகாமையில் ஒரு சவக்குழியைத் தொல்லியல் அறிஞர்கள் அகழ்ந்து பார்த்ததில் ஏழாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இரண்டு மனித மூளைகள் கண்டுபிடிக்கப்பட்டன. அந்த மூளைகளில் உயிரின் அமில மூலக்கூறுகள் (DNA) இருப்பதும் அறிவியல் அறிஞர்களால் அறியப்பட்டுள்ளது. (INDIAN EXPRESS- 16-12-84)

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் அரசாண்ட சீன நாட்டு மன்னன் ஒருவனின் கல்லறையைத் தொல்லியல் நெறிமுறைப்படி அகழ்வு செய்து பார்த்ததில் தாவரங்கள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இருப்பது தெரியவந்தது. அது இன்னது என்று சரியாக அறிவதற்காக அவற்றை அப்புறப் படுத்தாமல் கிருமிகள் இல்லாமல் பதப்படுத்தப்பட்ட சமுக் காளத்தால் மூடிவைத்து. சில நாட்கள் கழித்து சமுக்காளத்தை அகற்றிப்பார்த்த பொழுது சிறு சிறு தாவர நாற்றுகள் முளை விட்டிருப்பது தெரிய வந்தது. அந்த நாற்றுக்கள் பத்திர மாகப் பாதுகாத்து வளர்க்கப்பட்டன. நாற்று செடியாகியது

மலர் மலர்ந்தது. காய்காய்த்தது காய்முற்றிக் கனியாகவும் மாறியது. அந்தப்பழம் தக்காளிப் பழம் என்பதை அறிந்த தொல்லியல் அறிஞர்களும் ஆச்சரியத்திற்குள்ளானார்கள். (INDIAN EXPRESS- 2-3-85)

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலேயே தக்காளி பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதைக் கூறுவதற்கான ஆதாரமாக இது இருந்த போதிலும், ஈராயிரம் ஆண்டுகள் கழிந்த பின்னும் தக்காளிவிதை முளைவிடுகின்ற அளவிற்கு எப்படி பாதுகாப்பாக இருந்தது என்பதுதான் இன்றைய அறிவியல் அறிஞர்களுக்கு ஒரு சவாலாக உள்ளது.

ஓராண்டுக்குள் பயன்படுத்தப் படாதவிதைகள் வீரியத் தன்மையை இழந்துவிடுகின்றன என்பது இன்றைய வேளாண்மைத்துறை வல்லுனர்கள் தரும் தகவலாகும். ஆகவே ஈராயிரம் ஆண்டுகளுக்குப்பிறகும் முளைவிடுகின்ற அளவிற்கு தக்காளி விதைகள் எப்படி பாதுகாக்கப் பட்டன என்பதை அறிவியல் கண்ணோட்டத்தில் ஆய்வு செய்து கண்டு பிடிக்கப்பட வேண்டு மென்பது நமது அவாவாகும்

---

### தீபாவளி

நரகாசுரன் என்ற அரக்கன் நினைவாக தீபாவளிப் பண்டிகை கொண்டாடப்படுவது நாம் அனைவரும் அறிந்த ஒன்றே! இப்பண்டிகை கொண்டாடப்படும் நோக்கத்திற்கு இன்னும் சில காரணங்கள் இதோ !

(1) மகாவீரர் பரிநிர்வாணம் அடைந்த நாளே தீபாவளியாகக் கொண்டாடப்படுகிறது. (2) விக்கிரமாதித்தன் முடி சூட்டி விக்கிரம சகாப்தம் தொடங்கிய நாளே தீபாவளியாகக் கொண்டாடப்படுகிறது. (3) மகாபலிச் சக்கரவர்த்தி முடி புனைந்த நாளே தீபாவளியாகக் கொண்டாடப்படுகிறது. (4) இராமன் வனவாசம் முடிந்து அயோத்தி மாநகர் திரும்பிய நாளே தீபாவளியாகக் கொண்டாடப்படுகிறது.

தீபாவளிப் பண்டிகையை 'தீபாவலி' என்றும், 'தீவாலி' என்றும், 'தீபஒளி' என்றும் கூடக் குறிப்பர் 'தீபாவளி' என்பதற்கு 'விளக்கு வரிசை' என்றும் பொருள் கொள்வர்

கார்காலத் தொடக்கம் ஆவதால் ஒவ்வொரு நாளிலும் இருள் நேரம் அதிகமாக இருக்கும். எனவே விளக்குகள் முக்கியத்துவம் பெற்றன.

---

# தஞ்சை மராட்டியர் அரண்மனைக்கூடம்

ம. இராமகிருஷ்ணன் எம். ஏ.
அரசினர் கலைக்கல்லூரி அரியலூர்.

சங்க காலம் முதல் சிறப்பெய்திய தஞ்சாவூர் சோழர் காலத்தில் அவர்களின தலைசிறந்த தலை நகராக திகழ்ந்தது சோழர்களுக்குப் பின் பிற்காலப் பாண்டியர்கள் நாயக்கர்கள் இந்த நகரை ஆண்டனர். பின்னர் மராட்டிய மன்னன ஏகோஜி (உஷாஜி போன்ஸ்லேயின் மகன்) தஞ்சையைக் கைப்பற்றி அவர்களின் அரசை இங்கு ஏற்படுத்தினான். சிறந்த போர்த் திறமையும், கலைத் திறமையும்கொண்ட இவ்வரசர்கள் பெரும் கோட்டைகளையும் அரண்மனைகளையும் அமைத்து சோழர்களைப் போல் தஞ்சைக்கு அழகைக்கூட்டி பெருமை சேர்த்தனர். இத்தகைய அரசு ஆங்கிலேயர்களின் வாரிசு இல்லாக் கொள்கையின் படி 1855ல் கைப்பற்றப்பட்டு தற்போதைய மாவட்டங்களில் ஒன்றாக மாற்றப்பட்டது

**மராட்டிய அரண்மனை கூடத்தின் வரலாறு :** இராம சௌதா (இராமர் மாளிகை) என்றழைக்கப்பட்ட நாயக்கர் அரண்மனை தங்களுக்கு நல்ல இராசி இல்லை என்றும். தாங்களும் நாயக்கர்களைப் போன்றதொரு சிறந்த அரண்மனை எழுப்ப வேண்டுமென்று கருதியும் ஏகோஜியின் மகன் சாஹஜீ (Sahaji 1684–1711) இராம சௌதாவுக்கு எதிரே 'சிவ சௌதர்' (சிவ மளிகை) என்ற பெயரில் மராட்டிய அரண்மனைக் கூடத்தை (தர்பார் ஹால்) கட்டுவித்தார் வைணவத்தை பின்பற்றிய விஜய நகர மன்னர்களின் கீழ் அரசாண்டமையால் தஞ்சை நாயக்கர்கள் தாங்கள் எழுப்பிய அரண்மனைக்கு வைணவ பெயரிட்டுள்ளனர்

ஆனால் அவர்களை அடித்த வந்த மராட்டியர் சைவத்தை பின்பற்றி அதன் பெயரில் தங்கள் அரண்மனைக்கு பெயரிட்டுள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

**கட்டிட அமைப்பு :** நீண்ட சதுர அமைப்புடன் மேற்கு நோக்கி நிற்கும் அரண்மனைக் கூடம் முன் பாதி தாழ்வாரமாகவும் பின்பாதி, உயர்ந்த அரியணை மேடையாகவும் அமைககப்பட்டுள்ளது. மேடைப்பகுதி மூன்று தூண்களைக் கொண்ட 6 வரிசைகளைக் கொண்டது. இவற்றில் முதல் மற்றும் இறுதி வரிசைத் தூண்கள் சுவற்றுடன் ஒட்டி தாங்கி நிற்கின்றன. இத் தூண்கள் எண்கோண அமைப்புடன் சுமார் 40 அடி உயரமுடையவை. ஒவ்வொரு தூணின் மேற்பகுதியும் அலைகளைப் போலக் குவிந்து கூரையுடன் இணைகிறது

கூரையில் பூ வேலைப்பாடுகள் அழகுற தீட்டப்பட்டுள்ளன மேடையில் சுவரை ஒட்டிய மத்தியப் பகுதி அரசன் அமரும் இடமாகச்சற்று உயர்ந்து மேலே குடை விரிந்தாற் போன்று நான்கு பெரிய தூண்கள் தாங்கிய விதானத்துடன் வண்ணமிகு கண்ணாடி பொருட்கள் பதிக்கப்பட்டு தனிப் பொலிவுடன் காணப்படுகிறது கூடத்தின் மையப் பகுதி தூண்களின் வட்டமாகச் சென்று குவிகிறது. மற்ற பகுதி வண்டிக் கூரை போன்று குவிகிறது. முன் தாழ்வாரம் உயர்ந்த பெரும் மரத் தூண்களால் தாங்கி மேற்கூரை ஓடால் வேயப்பட்டுள்ளது முன் தாழ்வாரத்திலிருந்து மேலே கூடத்திற்கு செல்ல மத்தியில் பரந்த கருங்கல் படிகள் அமைக்கப்பட்டுள்ளன.

அரண்மனைக் கூடத்தின் இருபுறமும் அதை இணைக்கும் மேல் புறமும் நாயக்கர் பாணியில் பிரகாரம் (Corrider) கட்டப்பட்டுள்ளது. தற்போது மேற்கு பகுதி இடிந்துள்ளது.

இதன் மத்தியில் நீள சதுரமுள்ள விளையாட்டுத் திடல் உள்ளது. இது குத்து சண்டை, மல்யுத்தம், கோழிச் சண்டை, ஆடுச் சண்டை மற்றும் விழா நிகழ்ச்சிகளும் நடைபெறும் இடமாக திகழ்ந்தது. அந் நிகழ்ச்சிகளை அரசன், உயர் அதிகாரிகள், மற்றும் அமைச்சர்கள் அரசவை மத்திய கூடத்திலும், அரசு அலுவலர்களும், பொதுமக்களும் பிரகாரத்தினின்றும் கண்டு களிப்பர். அரசமா தேவியர் கூடத்தின் வடபுறமுள்ள இரண்டடுக்கு மாளிகையின் மேலிருந்து பார்க்கும வசதியுடன் சன்னல்கள் அமைக்கப் பட்டுள்ளன. கூடத்திற்கும் தாழ்வாரத்திற்கும் இடைப்பட்ட மத்திய இரண்டு தூண்களுக்கிடையே ஊஞ்சல் கட்டி அரசன் ஆடி மகிழ்வது உண்டு. குறிப்பாக வசந்த காலத்தில் **வசந்த பஞ்சமி** என்ற விழாவில் அரசன் ஆடுவான். அவ்வமயம் தேவியர்கள் தண்ணீர் மற்றும் மஞ்சள் நீர் தெளித்து மகிழ்வர்.

**அரண்மனை ஓவியங்கள் :** மராத்திய அரண்மனைக் கூடத்தில் அவற்றை அமைத்த சாஹஜி (Sahaji 1684-1711) காலத்திய ஓவியங்கள் கடைசி மன்னர் இரண்டாம் சிவாஜியின் (1855) ஓவியங்களும் குறிப்பிடத்தக்கவை.

**வடக்குச்சுவர் ஓவியம்** இச் சுவரில் இரண்டு அடுக்கு களில் ஓவியங்கள் ஒன்றின் மேல் மற்றொன்றாக தீட்டப் பட்டு உள்ளன. மன்னன் தன் சிற்றரசர்கள் மற்றும் தளபதி களுடன் வேட்டைக்கு சென்று வேட்டையாடும் காட்சியும், இருள் சூழ்ந்ததும், தீபம் ஏந்தித்திருப்பும் காட்சிகளாக தீட்டப்

பட்டுள்ளது. மறு பக்கத்தில் புலியை வேட்டையாடி வரும் காட்சியும் அழகாகத் தீட்டப்பட்டுள்ளது இச் சுவரின் மேலே பள்ளிகொண்டபெருமாள் உருவமும் அவர் இடது புறத்தில் காளிங்க நர்த்தனர் உருவமும் காட்சியளிக்கின்றன. அதன் கீழ் சீனிவாச பெருமாள் நின்ற நிலையிலும், அவர் பக்கங்களில் மலர் ஏந்திய பெண் உருவங்களும் வரையப் பட்டுள்ளன.

**கிழக்குச்சுவர் ஓவியம் :** சுவரில் வடபுறம்மேல் அடுக்கில் முருகன் தன் தேவிமார்கள் வள்ளி, தெய்வானையுடன் காட்சி யளிக்கின்றார். இவரது வாகனம் மயில், அழகாகத் தீட்டப் பட்டுள்ளது. இவற்றையடுத்து பண்டரிபுரம் பாண்டுரங்கன் தன் இரு தேவியர்களுடன் காணப்படுகிறான். பாண்டு ரெங்கனின் உடற்பகுதி நீலநிறத்திலும், அவன் தேவியர்கள் இள மஞ்சள் நிறத்திலும் காட்டப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கவை. இவர்களின் இருபுறங்களிலும் துவார பாலகர்களின் உருவங்களும் காணப்படுகின்றன. பொதுவாக இத் திரு வுருவங்கள் மிகுந்த ஆடை, அணிகளுடன் ஏற்ற வண்ணத்தில் நாயக்கர்கள் பாணியில் மராட்டியர் காலத்திலும் சிறப்பாகத் தீட்டப்பட்டு இருக்கின்றன.

**மராத்திய அரசர்களின் அமைச்சர்களின் உருவங்கள் :** இவற்றை அடுத்தாற் போல் மத்தியப் பகுதியில் மராட்டிய மன்னர்கள் தஞ்சை பெருவுடையாரை வழிபடும் காட்சி அழ குறத் தீட்டப்பட்டுள்ளது. பெருவுடையாரின் வலப்புறம் முறையே எகோஜி அவரது இரண்டாவது மகன் சரபோஜி, மற்றும் உதவியாளரும், அதன் எதிர்ப்புறமாக ஏகோஜியின் முதல் மகன் சாஹஜி, மூன்றாம் மகன் துக்கோஜி மற்றும் உதவியாளருமாக, முகலாய பாணியில் உடை அணிந்து, இடுப்பில் வாளுடன் சிவனை வழிபடும் காட்சி பேருவகை

அளிக்கும் வண்ணம் தீட்டப்பட்டுள்ளது. இவ்வுருவங்களுக்கு கீழே மராட்டிய கடைசி மன்னன் இரண்டாம் சிவாஜி அமர்ந்த கோலத்திலும் அவனது வலப்புறத்தில் கலோராவ் அப்பா என்னும் அமைச்சரும் இடப்புறத்தில் வரகப்பையா என்னும் அமைச்சரும் நின்ற கோலத்தில் காணப்படுகின்றனர். அமைச்சர்களின் தலைப்பாகை மற்றும் ஆடை, அணிகலன்கள் தமிழனுக்கே உரித்தான பாணியில் வடிக்கப்பட்டு அரசர் முன் பணிவோடு நிற்கும் பாணி இவ்வரண்மனைக்கே தனிப் பெருமையை சேர்க்கிறது. கிழக்குச்சுவரில் தென் புறத்தில் சத்யபாமா ருக்மணியுடன் வேணுகோபாலன் காட்சியளிக்கின்றார் தென்புற சுவரில் உள்ள ஓவியங்கள் சிதைந்த நிலையில் உள்ளன. அரண்மனை வடபுற அறையில் வடக்கு சுவரில் நடராசர் கூர் தேவி சிவகாமி மற்றும் விநாயகரும் உள்ள காட்சியும் மத்தியில் இராமரின் பட்டாபிஷேக காட்சியும், ஓரமாக சரஸ்வதியும், அதன் கீழ் முருகனுமாக அழகான காட்சியும் தீட்டப்பட்டுள்ளன.

**சுதை உருவங்கள் :** அரண்மனை கூடத் தூண்களின் கடவுளின் திருவுருவங்கள், அவதாரங்கள் மற்றும் மல்யுத்த வீரர், பாம்பாட்டி, கோமாளி, நாட்டிய மகளிர், போர்வீரர் என்ற பல்வேறு சுதை உருவங்கள் சிறப்பாக வடிக்கப்பட்டுள்ளன வடபுற சுவரில் மேற்கு பகுதியில் சிவன் – பார்வதி திருமணம், திருமால்—லட்சுமி திருமணக்காட்சிகள் சுதையில் வடிக்கப் ட்டுள்ளன. மேலும் திருமாலின் 10 அவதாரங்களான (தச அவதாரங்கள்) மீன், ஆமை, பன்றி, நரசிம்மம், வாமனம், பரசுராமர், பலராமர், இராமர், புத்தர், கல்கி அவதாரங்கள் சுதை உருவாக ஒவ்வொரு தூணின் மேலும் அழகாக வடிக்கப்பட்டுள்ளன

இவை தவிர அரண்மனைக் கூடத்தின் மையத்தில் நீதி காவலர்களாக தூண்களுக்கு மேலே கூரையை ஒட்டி யானை

யின் மீது தன் தேவியுடன் இந்திரனும், கருடன் மீது தன் தேவியுடன் விஷ்ணுவும், எருதின் மீது தன் துணைவியுடன சிவனும், அன்னத்தின் மீது தன் தேவியுடன் பிரமனும் உள்ள காட்சி மாளிகையை மேலும் அலங்கரிக்கின்றது.

**சுரங்கப்பாதை:** அரண்மனைக் கூடத்தில் அரசன் அமரும் இருக்கைக்கு வலப்புறம் கிழக்குச் சுவரை ஒட்டினாற் போல் வடக்கு—தெற்காக சுமார் 36' நீளமும், 3' அகலமும், 8' ஆழமும உள்ள சுரங்கப்பாதை அரசர்களின் இரகசிய பாதையாக இருந்திருக்கிறது. இதே போன்று கூடத்தின் இட புறமுள்ள பிரகாரத்தின் தென் பகுதியிலும் இருந்ததாக கூறப்படுகிறது. மற்றொரு கூடத்தின் வெளியே இவ்வரச பரம்பரையினர் இன்று இருந்து வரும் அரண்மனை வளா கத்திலும் உள்ளது.

1. Imperial Gazettee of India, Madras Vol. II
2. தஞ்சையில் தற்போதுள்ள கலைக்கூடம்

---

**தஞ்சையில் சோழர் அரண்மனை**

தஞ்சையில் விசயாலயன் வழிவந்த பிற்காலச் சோழர்களால் கட்டப்பெற்ற அரண்மனை ஒன்று இருந்திருக்கின்றது. இது தஞ்சைப்பெரியகோவில் கல்வெட்டுக்களில் 'தஞ்சாவூர்கோவில் இருமுடிசோழன்' என்று குறிப்பிடப்படுகின்றது. இதிலமர்ந்து முதல் இராசராசன் பல ஆணைகளை வழங்கியிருக்கின்றான், தற்போதுள்ள தஞ்சைமாநகரில் இது எப்பகுதியில் இருந்தது என்று தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் தஞ்சையில் இவ்வரண்மனை அழிவிற்குள் ளாகியதை பாண்டியர் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. 'சுந்தரபாண்டியன் தஞ்சையும் உறந்தையும் செந்தழல் கொளுத்தி', மாடமாளிகை கூட கோபுரங்களை அழித்துப் பெருமை கொண்டு விளங்கியிருக்கின்றான்.

# மனை ஆய்வு முறை.

வே இராமன், D.A.S;
மனோரரா

## மனை நூல்

பண்டைத் தமிழ்ப் பெருங்குடி மக்கள் தமது குடியிருப்புக்குத் தேவையான கிராமம், நகரம், பட்டினம் முதலியவற்றை நிர்மாணம் செய்து வானுயர்ந்த கோபுரங்களையும், மாடமாளிகைகளையும் அமைத்து பெருமையோடும் சிறப்போடும் வாழ்ந்து காட்டியுள்ளனர். இதனைக் காண்போர் கண்ணையும், கருத்தையும் கவருகின்றவைகளாயுள்ள அரண்மனை, மாடமாளிகை மற்றும் கூடகோபுரங்களையும் காண்பதன் மூலம் அறிகின்றோம்.

தொழில்திறன படைத்த கலைஞர்கள் தாம் கையாண்ட அனுபவங்களைத் தொகுத்து நமக்கு இலக்கண நூல்களாகத் தந்துசென்றுள்ளனர். அந்நூல்களை 'சிற்ப சாஸ்திரம்'' என்கிறோம இச்சிறப நூல்கள் சிற்பக்கலை மற்றும கட்டிடக் கலையின் அமைப்பை மிக விரிவாக கூறுபவைகளாகும் இச் சிற்ப நூல்களில் மிகவும் தொன்மையானதும் இற்றை நாள் வரையிலும் எல்லோராலும் கையாண்டு போற்றப்படுகின்றதுமான நூல் ''மயமதம்'' ஆகும். இந்நூல் ''கிராமம், நகரம். பட்டினம், அரண்மனை, மாளிகை. கோயில், குளம, கிணறு'' போன்றவைகள் எவ்வாறு அமையவேண்டும் என்பதனை மிக விரிவாக எடுத்தியம்புகின்றது. கட்டிடககலை, சிற்பக்கலை அமைப்பை மட்டுமின்றி மனையைப் பற்றியும் இந்நூல் கூறுவதால் இது மனை நூல் என்றும சிற்பக்கலைஞர்களால போற்றப்படுகின்றது.

**வாஸ்து**

தேவர்களும், மனிதர்களும் எந்தெந்த இடங்களில் வசிக்கின்றார்களோ அந்தந்த இடங்கள் "வாஸ்து" அல்லது "பூமி" என்றழைக்கப்படுகின்றது

கிராமம், நகரம் அமையும் நிலப்பகுதியையும்; அரண் மனை, மாளிகை, கோயில் அமையும் மனையிடங்களையும் வாழ்வுக்கு எற்றதாக அமையவும், அங்கு வசிக்கும் மக்கள் எல்லாவித நலன்களையும் பெறவும் தேர்ந்தெடுக்கும் நிலப் பகுதி அதாவது மனையை சோதித்து அதன்பின்னரே நிர் மாணித்தல் மிகவும் அவசியம் என்பதை மனைநூல்கள் வலியுறுத்திக் கூறுகின்றன,

இறைவனுக்குக் கோட்டமும், மன்னருக்கு அரண் மனையும், பெருமக்களுக்கு மாடமாளிகையும் நம் முன்னோர் திறம்பட வகுத்துள்ளனர் என்பதனை 'புகார், மதுரை, காஞ்சி போன்ற நகரங்களின் அமைப்பிலிருந்தும் அறியமுடிகின்றது, புகாரின் அமைப்பைப் "பட்டினப்பாலையும்", "சிலம்பும்", மதுரையின் பொலிவைப் "பரிபாடலும்", காஞ்சியின் அமைப்பை "தண்டியலங்காரமும்" கூறுவதிலிருந்து மனை நூல்களின் உயர்வை உணரமுடிகின்றது

புகார், மதுரை, காஞ்சி, திருவரங்கம், திருப்பரங்குன்றம், திருவாவினன்குடி, பழமுதிர்சோலை போன்ற இடங்களில் அமைந்துள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க கோயில்கள் யாவும் மனைநூல்கள் மரபுப்படியே அமைக்கப்பட்டுள்ளன என்றும் அறியமுடிகின்றது

**ஏழுவகைக் கூறுகள்:**

"ஓரிடத்தின் மண்ணின் நிறம், மணம், அமைப்பு, வளர்ந்துள்ள செடி, கொடி, மரங்கள், பூசை, சுவை, அதன் செறிவு மென்மை ஆகிய ஏழுவகைக் கூறுகளையும் ஆராய்ந்து சிறந்த மனையைத் தேர்ந்தெடுக்க வேண்டும்" என்று மயமதம் வலியுறுத்திக் கூறுகின்றது

**நால்வகை இனத்தார்க்கு மனை பேதம்:-**

மேலே கூறப்பட்ட ஏழுவகைக் கூறுகளைக் கொண்டு ஒவ்வொரு இனத்தாரும் வசிக்கக்கூடிய இடத்தையும் பெரியோர்கள் வரையறுத்துள்ளனர். அவை முறையே,

***பிராமணர்:*** *சச்சரமாகவும், வெளுப்பு நிறமாகவும், அத்திமரங்களையுடைய தாகவும், வடக்கே தணிந்ததாகவும்,* துவர்ப்பு, இனிப்பு இவைகள் நன்கு கலந்த சுவையுடையது மான மனையானது பிராமணர்களுக்குச் சிறந்தது என்றும், அந்தமனை சுகத்தையளிக்கக் கூடியது என்றும்

**க்ஷத்திரியர் :** அகலத்தைக் காட்டிலும் எட்டில ஒருபங்கு அதிக நீளமாக இருப்பதும், சிவப்பு நிறமாக இருப்பதும், கசப்புச் சுவையுடையதும், கிழக்கில் தணிவாகயிருப்பதும், விஸ்தாரமாக இருப்பதும் அரசமரத்துடன் கூடியதுமான மனையானது க்ஷத்திரியர்களுக்கு சிறந்தது என்றும், அந்த மனை எப்பொழும் சகலவிதமான பொருள்களையும் அளிக்கக் கூடியது என்றும்

**வைசியர்:** அகலத்தைக் காட்டிலும் ஆறில் ஒரு பங்கு அதிக நீளமுள்ளதும், மஞ்சள் நிறமானதும், புளிப்புச்சுவையுள்ளதும் அரளிமரத்துடன் கூடியதும், கிழக்கில் தணிந்திருப்பதுமான மனையானது வைசியர்களுக்குச் சிறந்தது என்றும இம்மனை சுப சோபனங்களையளிக்கக் கூடியது என்றும்

**சூத்திரர் :** அகலத்தைக் காட்டிலும் நான்கில் ஒரு பங்கு அதிக நீள முடையது, கிழக்கில் தணிந்திருப்பதும், கருப்பு நிறமானது, உறைட்டுச்சுவையுடையதும், ஆலமரத்துடன கூடியதுமான மனையானது சூத்திரர்களுக்குச் சிறந்தது என்றும் இம்மனை தனம், தானியங்களை அளிக்கக்கூடியதும் என்றும் இவ்விதமாக பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர்களுக்கு தனித்தனியே மனைபேதங்களையும், அதனால் கிடைக்கக்கூடிய பலன்களையும் விரிவாக சிற்பநூல்களில் காண முடிகிறது.

*சிறப்பான மனை வகைகள்*

**நாதத்தால்:** குதிரை, யானை, மூங்கில், வீணை, கடல் இவைகளுடைய நாதம் போன்றதும்,

**மணத்தால்** புன்னைப்பூ, ஜாதிமுல்லைப்பூ, தாமரைப்பூ இவைகளின் மணமுடைய மனையும்,

**உணர்ச்சியால்** ஒரே விதமான நிறமுடையதும், அழுத்தமானதும், ஈரமுள்ளதும், சரங்களுக்கு இதமான உணர்ச்சியையும் தரக்கூடிய மனையும்

**வனத்தால்:** வில்வம், வேம்பு, நொச்சில் போன்ற மரங்கள வளர்ந்தும், சமதளமாகயுள்ள மனையும்

**சுவையால்:** கசப்பு, உறைப்பு, துவர்ப்பு, புளிப்பு, இனிப்பு ஆகிய ஆறு விதமான சுவையுள்ளதுமான மனையும் எல்லாவித சுகங்களையும், நீண்ட ஆயுளையும் தரக்கூடிய தெனவும், இவ்விதம் சிறந்த மனையை தேர்ந்தெடுக்க வேண்டும் எனறும் மனைநூல்கள் விரிவாக கூறுகினறன.

வலப்பக்கமாக நீரோட்டமுடையதும், ஆணின் கை, இடுப்பு மட்டத்தில் ஈரம காணப்படுகின்ற மனையும் மிகவும சிறந்த தென்றும், மனதிற்கு இன்பத்தை தரும் என்றும் மனைநூல் மேலும் சிறப்பித்துக் கூறுகின்றது.

***மனையின் தன்மை.***

இங்ஙனம் மனையைத் தேர்ந்தெடுத்த பின்னர் அந்த இடத்தின் தன்மையை ஆய்வு செய்யவேண்டும் சம அளவில் வட்டமான ஓர் பள்ளம் செய்து, பள்ளத்தை நீரால் நிரப்பி நீரில் அழகும், வாசனையும் பொருந்திய மலர் ஒன்றினை இடவேண்டும் அம்மலர் இந்திரன் திக்கில் நின்றால் கற்பு நிலை பொருந்திய பெண் மவடியாவாள் நச்சு உயிரினங்களால் அச்சமும், தீயினாலும் கள்ளர் பயத்தினாலும் பொருள் விருத்தியில்லாமல் நாசமாவாள் என்றும் எமன் மூலையென்னும் தென்திக்கில் மலர் நின்றால் மனதில் சிந்தனையும், கவலையும் உண்டாவதோடு பலரால் கலகமும், தீமை, வியாதி முதலியவைகளும் அது அளிக்கும் என்றும் கன்னி மூலையில் மலர் நின்றால் பொருளும், அன்னமும், இலட்சுமி பிரகாசமும், நவதானிய லாபமும், பிறவிச் செல்வமும், எந்நாளும் நீங்காமல் வற்றாத கடல்போல் மென்மேலும் பெருகும் என்றும் வருணன் மூலையில் அம்மலர் நின்றால் செல்வம் குறையாது. நினைத்தகாரியமும் ஆரம்பித்த தொழில்களும் வெற்றியை தரும் என்றும், வாயு மூலையில் அம்மலர் நின்றால் க்ஷயரோகத்தில் மரணமும், சகல பாக்கியமும் அழிந்துபோகும். மேலும சகோதரர் அல்லது எஜமானர் சித்தப்பிரமையாவார் என்றும் குபேரன் திக்கில் மலர் நின்றால் தனதான்யம் சம்பத்தும், புத்திரசந்தானமும், ஆயுள் விருத்தியும், பாக்கியமும், அபயம் என்று வருவோர்க்கு பொருளுதவி செய்யும் மஹாபுண்யவானாக இருப்பான என்றும் ஈசன்ய மூலையாகிய பரமசிவத்தின் திக்கில் அம்மலர் நின்றால் எல்லாவித செல்வமும், ஆயுளும், புத்திர சம்பத்தும் வாழ்வும் மென்மேலும் பெருகி நிலைநிற்கும் பெரியோர்களுக்கு துறவிகளுக்கும் அன்னதானம் கொடுக்கக் கூடிய வல்லவனாயிருப்பான் என்றும் ஒவ்வொரு திக்கிலும் மலர்

நிற்பதன்மூலம் மனையின் பலனை அறிந்து மனையை தேர்ந்தெடுப்பது வளமான வாழ்வுக்குச் சிறந்ததாகும்.

**நீக்கப்படவேண்டிய மனை**

தயிர், நெய், தேன் இவைகளின் மணமுள்ளதும், ரத்தம், சவம், மீன், பறவை இவைகளின் நாற்றமுள்ளதும், நான்கு வீதிகளின் நடுவிலும், அரண்மனையை ஒட்டியிருப்பதும், முள் மரங்களுடன் கூடியதும், வட்டமாகவும், முக்கோண வடிவமாகவும், கோணலாகவும், ஆமையை போலிருப்பதும் மீன் வடிவமாகவிருப்பதும், பாம்புகளுக்கு இருப்பிடமானதும், சங்கரனுடைய பூந்தோட்டமாகவிருப்பதும், புழுக்களுடன் கூடியதுமான பூமியும், எவருக்கும் பொருந்தாத பூமியாகும். எனவே இப்படிப்பட்ட பூமியை தேர்ந்தெடுப்பது சிறப்பல்ல எனலாம்.

**தோஷம் (குறை) நீங்க :-**

மனையில் ஏதேனும் தோஷங்கள் (குறைகள்) இருந்தால் அதனை அகற்றுவது மிகவும் அவசியமாகும். எனவே எஜமானன் சுத்தமாக இருந்துகொண்டு தேர்ந்தெடுக்கப்பட்ட மனையை வணங்கியும், தேவதைகளுக்கு பூஜை செய்தும், மங்களகரமான நாதங்களுக்கிடையில்,

"இந்த பூமியில் வசிக்கக்கூடிய பூதங்களும், தேவதைகளும், கொடியவர்களும் இந்த பூமியிலிருந்து விலகி வேறிடத்திற்கு செல்லவேண்டும். இந்த மனையை நான் வசிக்க எடுத்துக்கொள்ளப் போகிறேன்" என்ற மந்திரத்தை சொல்ல வேண்டும்.

பிறகு மனையை உழுது கோமியம், சாணம் கலந்து சகலவிதமான விதைகளையும் அந்த பூமியில் விதைக்க வேண்டும். விதைகள் முளைத்து செழித்து பருவமடைந்ததும் மனை

யில காளைகளையும், கன்றோடுகூடிய பசுவையும் வசிக்கும்படி செய்யவேண்டும். இதனால் பசுக்கள் உலாவியும், காலடிப் பட்டும், முகர்ந்து பார்க்கப்பட்டும், அதன் சப்தங்களினால் அம்மனையிலிருந்த தோசங்கள் (குறைகள்) யாவும் நீங்கி மணம்பெற்றதாகி மிகச்சிறந்த மனையாகின்றது. மேலும் இம்மனையில் புண்ணிய தீர்த்தங்களை தெளிப்பதனாலேயும் மனையானது எல்லாவித மங்களங்களையும் பெறுவதாகின்றது.

**மனை முகூர்த்தம் செய்யும் மாதம்**

பலவகைகளிலும் ஆய்வு செய்து தேர்ந்தெடுக்கப்பட்ட மனையில் சித்திரை, வைகாசி, ஆடி, ஆவணி, ஐப்பசி, கார்த்திகை, தை, மாசி மாதங்களில் நல்ல நாளில் முகூர்த்தம் செய்ய நன்மைகள் பல உண்டாகும். பிற மாதங்கள் செய்வது நல்ல பலனை தராது என்பதாகும்.

**தானம்**

மனை முகூர்த்தம் செய்யும்போது பொன்தானம், ஆடை தானம் செய்வதும், பெரியவர்களுக்கெல்லாம் தாம்பூலமரியாதை செய்வது மனதிற்கு திருப்தியையும், மனமகிழ்வையும் உண்டாக்கும்.

இங்ஙனம் நம் முன்னோர்கள் மனையை பலவாறு சோதனைகள் செய்து சிறந்த மனையை தேர்ந்தெடுத்தும் அதன் பின்னரே நிர்மாணம் செய்து மிகச் சிறப்போடும், பெருமையோடும் வாழ்ந்துகாட்டினர் என்பது தெளிவு.

[**ஆதார சிற்பநூல்கள்** மயமதம், சர்வார்த்த சிந்தாமணி]

# வெண்கொற்றக்குடை

**துரைசாமி**
காவேரிப்பட்டினம்

கோயில் விழாக்களின் போது இறைவனுக்குக் குடை பிடிப்பதை நாம் காணலாம் முற்காலத்தில் அரசர்கள் வெளியில் செல்லும் போது ஏவலாளர் குடைகளைப் பிடித்து வந்தனர். ஏறக்குறைய இன்றுள்ள கோயில் குடைகளைப் போலவே தான் மன்னர்களின் குடைகளும் இருந்துள்ளன. இக்குடைகளை வெண்கொற்றக் குடைகள் என்று இலக்கியங்களும் கல்வெட்டுகளும் குறிப்பிடுகின்றன.

வெண்கொற்றக் குடை உண்மையில் வெயிலிலிருந்தும் மழையிலிருந்தும் மன்னனைக் காத்தது. ஆயின் வெள்ளைக் குடிநாகனார் என்ற சங்க காலப்புலவர் 'வருத்தமுற்றகுடிக்கு அருள் செய்யவே (நிழல் தரவே)' என்கிறார்.

''தென்கடல் வளாகம் பொதுமையின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமையோர்''

பற்றி அறிவுடைநம்பிக்கு நக்கீரனார் எடுத்துக் கூறுவார்.

மன்னனின் அருளை (ஈரத்தை)ப் புலப்படுத்தும் அடையாளமாக வெண்கொற்றக் குடையைப் பார்க்கிறோம்.

தன் நாட்டு மக்களுக்கு அருள் செய்யும் மன்னன் மாற்றரசரை வெற்றி கொள்ள வேண்டும். இதுவே கொற்ற வெண் குடையாகும். (கொற்றப்–வெற்றி)

இளங்கோவடிகள் மங்கல வாழ்த்தில் திங்களின் குளிர்ச்சிக்கு உவமையாகச் சோழனின குளிர்வெண் குடையைக் குறிப்பிடுகிறார். முதலில் அரசருக்குக் குடை பிடிக்கும் பழக்

கம் தோன்றி பின்னர் இறைவனுக்கும் ஏற்பட்டிருக்க வேண்டும். எனினும் ஒன்றை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

அரசனுடைய குடை கோயில்களை வலம் வரும்போது தாழ்த்திப் பிடிக்க வேண்டும் என புறநானூறு குறிப்பிடுவதால் சங்க காலத்திலேயே மன்னனை விட கடவுளுக்கு முதன்மை தந்ததைப் பார்க்கிறோம்.

மேலும் பேரரசனுடைய குடை முன்னாலும் அவனுக்கு அடங்கிய சிற்றரசர் குடைகள் பின்னாலும் செல்ல வேண்டும் என்பதையும் புறநானூறு குறிப்பிடுகிறது. தொல்காப்பியம், புறத்திணையியலில் அரசருடைய குடையை விதந்தோதுகிறது. ஆநிரைகவர்தல், மீட்டல் தொடர்பான வெட்சித் திணையில் கூறாமல் வஞ்சித்திணையில் 'குடை நாள் கோள்' பற்றி தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இவ்வாறு குறிப்பிடுவதற்கு நச்சினார்க்கினியர் அருமையான காரண மொன்றைக் குறிப்பிடுவார். 'நிரைகோடற்கு ஏவிய அரசருள் நிரை கொண்டோருக்கும், நிரை கொள்ளப்பட்டோருக்கும் விரைந்து ஏக வேண்டுதலின் குடை வெட்சித்திணையில் கூறவில்லை' என்கிறார். மற்றொரு காரணமும் நாம் குறிப்பிடலாம் மாற்றாருக்குத் தெரியாமல் களவு மேற்கொள்ள வேண்டிய போரில் (நிரை கவர்தல் மீட்டல்) அரசரின் குடை தேவையில்லையன்றோ ? மேலும் ஆநிரைகவர்தல் மீட்டல் போருக்கு போர் வீரர்களே போதும். மன்னன் செல்ல வேண்டியதில்லை. சென்றாலும் குடை தேவையில்லை. ஆயின் வஞ்சித்திணையின் போது மன்னனோ, மன்னனின் சார்பாக பெரிய படைத் தலைவனோ போருக்குப் புறப்படும் போது குடை தேவையாகிறது. வாளும், குடையும், முரசும் போருக்குச் செல்லும் போது முக்கியபங்கை வகிக்கின்றன. தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை போன்ற இலக்கண நூல்கள் குடை குறித்து பல செய்திகளைக் குறிப்பிடுகின்றன.

சேரன் செங்குட்டுவன் வடதிசைப் போருக்குச் செல்லு முன் "வாளும் குடையும் வடதிசை பெயா கென" ஆணை யிட்டதைச் சிலப்பதிகாரத்தில் பார்க்கிறோம்,

போரில் எதிரியின் குடையைச் சிதைப்பது அல்லது கைப்பற்றுவது மன்னருக்குப் பெருமையாகும். மாற்றார் குடையை வீழ்த்துபவரை வீரரின் பேராண்மையாகச் சிலப்பு குறிப்பிடும். பல்லவமன்னன் பரமேஸ்வரனும் சாளுக்கிய வேந்தன் விக்கிரமாதித்தனும் போரிட்டபோது சாளுக்கியன் குடை சிதறியதாக கூரம் செப்பேடு குறிப்பிடுகிறது. போரில் வெற்றி பெற்ற மன்னன் தோற்ற மன்னனின் முடியைக் கழலாகச் செய்து காலில் அணிந்தது போல் எதிரியிடம் கைப்பற்றிய வெண் கொற்றக்குடையின் காம்பைக் கொண்டு தலைக்கோல் செய்தனர். நாடகமகளிர் அரங்கேற்றத்தின் போது தலைக்கோலைத் தந்து பட்டம் வழங்கியதாக சிலம்பு குறிப்பிடுகிறது பிற்காலக் கல்வெட்டுகளில் 'தலைக்கோலி' பெயர்களைப் பார்க்கிறோம் சான்றாக உடையார்குடி கல் வெட்டில் ராம்முடிச் சோழ தலைக்கோலியைப் பார்க்கிறோம்,

### சிற்பங்களில் வெண்கொற்றக்குடை

தற்போது கோயில்களில் காணப்படும் குடைகளைப் போல முற்கால அரசர்களின் குடைகளும் இருந்திருக்க வேண்டும் என்று நாம் ஏற்கனவே கூறியதற்கேற்ப சிற்பங்களும் உள்ளன. பல்லவர் காலத்தைச்சேர்ந்த காஞ்சி வைகுண்டநாதர் கோயிலில் பல சிற்பங்கள் உள்ளன. அரசனின் அருகே வெண் கொற்றக்குடையும் வைக்கப்பட்டுள்ளது பொதுவாகச் சிற்பங்களில் அரசனை மற்றவரிடமிருந்து வேறுபடுத்திக் காட்ட முடியும் (கிரீடமும்), வெண் கொற்றக்குடையும், துணை புரிகின்றன எனலாம்.

தருமபுரி மாவட்டம் எண்ணற்ற நடுகற்களைத் தன்னகத்தே கொண்டுள்ள வரலாற்றுச் சிறப்புவாய்ந்த மாவட்டமாகும். இம்மாவட்டத்தில் சில இடங்களில உள்ள நடுகற்களில் வெண் கொற்றக்குடையும் காட்டப்பட்டுள்ளன தருமபுரி நகரிலேயே வனச்சரக அலுவலகத்தில் உள்ள நடுகல்லில் குடை காட்டப்பட்டுள்ளது இச்சிற்பத்தில் இறந்துபட்ட வீரனும். அவன் மனைவியும் நின்றிருக்க வீரனுக்கு ஒரு சேவகன் குடை பிடித்தவாறு உள்ளான். குதிரை பிடித்தபடியும் ஒருவன் உள்ளான் கி. பி. 14-15 நூற்றாண்டைச் சேர்ந்த இந்நடுகல் வீரன் சிற்றரசனாகவோ அன்றி குறுநிலத் தலைவனாகவோ இருந்திருக்க வேண்டும். தருமபுரி பகுதியில் அரசாண்டவன் போலும். இதேபோல் கிருஷ்ணகிரி நகரில் பெங்களூர் செல்லும் சாலையிலும் குடையுடன்கூடிய சிற்பம் உள்ளது. மேலும் வேப்பனப்பள்ளி ஊராட்சி ஒன்றியத்தில் சின்னசமுத்திரம் என்ற ஊரில் குடையுடன்கூடிய அரசனுடைய நடுகல் சிற்பம் உள்ளது. மேலும பல இடங்களில குடையுடன்கூடிய நடுகல் சிற்பங்கள் இம்மாவட்டத்தில் இருக்கவேண்டும் கல்வெட்டுடன் கூடிய வெண் கொற்றக குடை கீழுள்ள அரசன் சிற்பத்தை ஆய்வாளர்கள் கண்டுபிடித்துள்ளனர். தர்மபுரி மாவட்டம் ஆதனூர், காத்தாடிக்குப்பம், அகரம் ஆகிய இடங்களில் உள்ளன.

வெண் கொற்றக் குடையைப்பற்றிக் குறிப்பிடும்போது சோழர்களின் கல்வெட்டுகள் நினைவுக்கு வருகின்றன.

"அகில புவனமும் களிப்பதோர்
புதுமதிபோல் வெண்குடை மீமிசைநிழற்ற"

விக்கிரமசோழன் கல்வெட்டு

"வெண்குடை நிழற்கீழ் செங்கோலோச்சி."

குலோத்துங்கன் கல்வெட்டு.

மேலும் பல கல்வெட்டுகளில் குடை பற்றி நாம் காணமுடியும்

திருமால் வாமன அவதாரம் எடுத்தபோது கையில் குடையுடன் காட்சி அளித்தார் நாமக்கல் போன்ற குடைவரைக்கோயில்களில் திருமாலின் வாமன அவதாரத்தைக் காணலாம். அசுரர்கள் ஆறுமுகப் பெருமானுடன் போர்செய்த போது போர் செய்யமுடியாது படைக்கலத்தை யெறிந்துவிட்டு விசனத்துடன இருக்கையில் தன் குடையை ஒருமுக எழுனியாகச் சாய்த்து குமரனாடிய கூத்தைக் குறிக்கவும் 'குடை' என்ற சொல் பயன்படுகிறது முற்காலத்தில் அரசனுக்குரிய குடை வெண்மை நிறத்தில் இருந்தாலும் மக்கள புழக்கத்தில் பல்வேறு குடைகள் இருந்ததாகத் தெரிகின்றன. செங்குடை, பீலிக்குடை, பஞ்சவர்ணக்குடை அவற்றுள் சிலவாகும் மேலும் துணியினால் மட்டுமின்றி பல்வேறு பொருட்களில் கூடிய குடைகளும் இருந்துள்ளன. சான்றாகத் தாழங்குடை, சம்பங்குடை, பனங்குடை போன்றவற்றைக் குறிப்பிடலாம். இன்றும் பல்வேறு வடிவில், பலநிறக் குடைகள் நாட்டில் புழக்கத்தில் உள்ளன.

---

## சிறுமலையில் பழங்காலக் குகை ஓவியங்கள்

திண்டுக்கல்லுக்கு அருகேயுள்ள சிறுமலையில் அருவி மலை என்றொரு இடம் உள்ளது. இங்கே அருவி ஒன்று அழகுற அமைந்துள்ளது. இதற்கருகேயுள்ள ஒரு குகை வடிவிலமைந்த பாறைச் சரிவில் 2000–3000 ஆண்டுகட்கு முற்பட்ட பழங்கால மக்களின் ஓவியங்கள் உள்ளன. வெண் துகளாலும் செந்தூரத்தாலும் வரையப்பட்ட ஓவியங்கள் பல தீட்டப்பட்டுள்ளன. தலைக்குப் பின்னே வளையத்தோடு கூடிய மனித உருவங்கள் விலங்குகளைச் சண்டையிட வைக்கும் காட்சி, மனிதர்கள் பல்வேறு நிலைகளில் வேட்டையாடும் காட்சி, எலும்புக்கூடு தாய்த் தெய்வ உருவம் முதலியவை இங்குக் குறிப்பிடத்தக்கவையாகும் தமிழ் நாட்டில் வேறு இடங்களில் இல்லாத அளவிற்கு இங்கு மனித வாழ்க்கை நிகழ்ச்சிகள் அதிகமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன. பாண்டிய நாட்டிலும் பழங்கால மக்கள் மிகப்பழங்காலத்தே வாழ்ந்திருந்த நிலையைக் காட்டும் வரலாற்றுச் சின்னங்கள் இவை.

---

# திருக்குறுக்கை வீரட்டானம்

கோ. முத்துச்சாமி எம்.ஏ, பி.லிட்; டிப்.இன்.டீச்;
சென்னை.

எட்டு வீரட்ட தலங்களான திருக்கண்டியூர், திருக்கோவலூர், திருவதிகை, திருப்பறியலூர், திருவிற்குடி, திருவழூர், திருக்குறுக்கை, திருக்கடையூர் ஆகிய சிவத்தலங்களில் ஒன்று திருக்குறுக்கை. இது காமனை எரித்த புராண வரலாறு உடைய ஊர். இவ்வூர் தஞ்சைமாவட்டம் மயிலாடுதுறை வட்டத்தில் உள்ளது. இது இன்று 'கொறுக்கை' என்று மருவி வழங்குகின்றது. கல்வெட்டுக்களிலும் அப்பரடிகளது பதிகங்களிலும் 'திருக்குறுக்கைவீரட்டம்' என்றே அழைக்கப்பட்டிருக்கின்றது. காவிரியின் வடகரையில் அமைந்த 63 சிவத்தலங்களுள் இது 26 வது தலமாகப் போற்றப்படுவது.

இங்கு 'கடுக்காமரம்' மிகுதிகாரணமாக 'கடுவனம்' என்றும், உமையம்மை யோகம் மேற்கொண்டதால் 'யோகீசபுரம்' என்றும், காமனைத் தகனம் செய்ததால் காமதகனபுரம், என்றும், இங்கு கங்கை நீர் கைகளில் குறுக்கப்பட்டதால் 'குறுக்கை, என்றும் இவ்வூருக்குப் புராணப் பெயர்கள் உள்ளன.

**குறுக்கைநாடு**. சோழர் காலக்கல்வெட்டுகளில் இவ்வூரை மையமாகக் கொண்டு 'குறுக்கைநாடு' அமைந்திருந்தது தெரியவருகிறது. 'குறுககை நாட்டுக் கடலங்குடியான கங்கைகொண்ட சோழச்சருப்பேதிமங்கலம்', 'வடகரை குறுக்கைநாட்டுத்திருவேள்விக்குடி' என்ற பிறஊர்க் கல்வெட்டு வரிகள் இதைத் தெளிவாக்குகின்றன. வடகரை என்பது காவேரியின் வடகரை ஆகும். முதலாம் இராசராசன்

காலத்தில் வடகரை என்பதற்குப் பதிலாக, 'இராசேந்திர சிங்க வளநாட்டுக் குறுக்கை நாடு' என்று இது அழைக்கப்பட்டிருக்கிறது இவ்வளநாடு காவிரிக்கும், சிதம்பரத்தை அடுத்த வெள்ளாற்றிற்கும் இடைப்பட்ட பகுதியாகும்.

**கல்வெட்டுச்செய்திகள்:** இங்கு விக்கிரமசோழன், இராஜாதிராஜன் மூன்றாம் குலோத்துங்கன் மூன்றாம் ராஜராஜன் ஆகிய சோழமன்னர்களது கல்வெட்டுகளும் வீரப்பிரதாபதேவராயர், புக்கராயர், வீரப்பிரதாப கிருஷ்ணதேவராயர் ஆகியோர் கல்வெட்டுகளும் உள்ளன. 1917 ஆம் ஆண்டு இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கையில் இவ்வூர்க்கல்வெட்டுகள் 31 வெளியிடப்பட்டுள்ளன.

**குகைகள் :** சோழர்காலத்தில் குகை என்ற சொல்லாட்சி மடங்களுக்குப் பயன்படுத்தப்பட்டது. திருக்குறுக்கையில் திருநாவுக்கரசர் குகை இருந்தமை சோழர் கல்வெட்டுகளால் தெரியவருகின்றது வைகாசித் திருவிழாவிற்கு வெளியூர் அடியவர்கள் இவ்வூர் வரும்போது இக்குகையில் உணவருந்த ஏற்பாடுகள் செய்யப் பட்டிருந்தன. கோயிலில் திருத்தாண்டகப்பாடல்கள் பாடவும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. திருஞானசம்பந்தர் பெயரிலும் ஒருகுகை இவ்வூரில் இருந்தது. இதற்கும் நிலங்கள் தானமாக வழங்கப்பட்டுள்ளன. (219/1917, 233/1917)

**இடங்கை வலங்கை:** விஜயநகரமன்னர் வீரப்பிரதாப தேவராயர் காலத்தில் இடங்கை 98 சாதியாரும் வலங்கை 98 சாதியாரும் ஒன்றுகூடி அதிகப்படியாகவும் நியாயத்திற்குப் புறம்பாகவும் விதிக்கப்பட்ட வரிகளை எதிர்த்துக் குரலெழுப்பித் தீர்மானங்கள் நிறைவேற்றியுள்ளனர். (216/1917)

50 ஆண்டுகளாக உழுவார் இல்லாதும் உரிமை கொண்டாடுவோர் இல்லாதும் கிடந்த நிலத்தை ஊர்ச்சபையார் கைப்பற்றி விலைக்கு விற்றுள்ளனர். இந்நிலம் வரிநீக்கப்பட்டு இந்நிலத்திலிருந்து வரும் வருவாய் கோயிலின் பூசைக்காகவும், படையல்களுக்காகவும், மலர்களுக்காகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது (224/1917)

குலோத்துங்கசோழன் காலத்தில் கருப்பூர் என்ற ஊர் செல்லப்பிள்ளை செம்பியன் கோனார் என்பவரால் கோயில் திருப்பணிகளுக்காகவும் வழிபாட்டிற்காகவும் வழங்கப்பட்டுள்ளது [217,218/1917]

**கோயில் அடிமைகள்:** நூற்றுக்கு மேற்பட்ட ஆண், பெண் அடிமைகள் விலைக்கு வாங்கப்பட்டு இக்கோயிலுக்குக் கொடுக்கப்பட்டுள்ளனர். குலோத்துங்கன் காலத்திலும் இராஜாதிராஜன் காலத்திலும் தரப்பட்ட இவர்களது பெயர்கள் கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளன சோழர் காலத்தில் செல்வந்தர்களால் மனிதர்கள் விலைக்கு வாங்கப்பட்ட சமுதாயப் போக்கை இக்கல்வெட்டு தெளிவுறுத்துகிறது [223/1917]

இராஜாதிராஜனின் அகப்பரிவாரத்தைச் சேர்ந்த பணிமகள் அரையன் உமையாழ்வி என்பவள் பனையூரில் திருச்சாமுண்டீஸ்வரமுடையார் கோயிலில் பள்ளியறை நாச்சியார், ஆட்கொண்டநாயகதேவர் செப்புத்திருமேனிகளைச் செய்து கொடுத்து அவற்றின் வழிபாட்டிற்காக நெல்லுக்காகப் பணமும் கொடுத்துள்ளாள். சிறிது காலத்தில் இவ்வழிபாட்டுக்கான நெல்வரவு நின்றுவிடவே, சபையார் அக்கோயிலிருந்து பணத்தைக் கைப்பற்றி அந்த வழிபாட்டிற்கான நெல் வருவாயை மீண்டும் உண்டு செய்து வழிபாடு நடத்தியுள்ளனர் (228/1917)

மேலும் 50 விளக்குகள் ஒரே சமயத்தில் தானமாக வழங்கப்பட்டதையும், கற்பூரம் வழங்கப்பட்டதையும், வீடு ஒன்றும் வாங்கி வழங்கப்பட்டதையும், கிணற்றில் நீர் எடுத்துக்கொள்வது வாய்க்கால் வெட்டுவித்துக் கொள்வது போன்றவற்றிற்கு அளிக்கப்பட்ட அனுமதிகள் பற்றியும், சிவந்தவனப் பெருமாள் என்ற காலிங்கராயன் தன்பெயரில் மூன்றாம் ராஜராஜன் காலத்தில் சிவந்தவனப்பெருமாள் சந்தி என்ற சந்தியை எற்படுத்தியதையும் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன, கிருஷ்ணதேவராயரது கல்வெட்டு அவரது வெற்றிகளையும், சோழமண்டலத்தில் அவர் தானமளித்த சிவன், விஷ்ணு கோயில்களின் பட்டியல்களையும் தருகின்றது [235/1917]

**தேவாரப்பாடல்:** திருக்குறுக்கை வீரட்டானத்தை அப்பரடிகள் பதிகம் பாடிச்சிறப்பித்துள்ளார். இப்பதிகங்கள் மாலும் அயனும் இறைவனின் அடிமுடி காணமாட்டாத வரலாறு, காலனை அழித்த வரலாறு, தந்தை தாளை பெருங்கொடுமழுவால் வீசிய சண்டியின் வரலாறு, திருமால் தனது கண்ணையே மலராக வைத்து வழிபட்டுச் சக்கரம் பெற்ற வரலாறு, கண்ணப்பர் வரலாறு, மறைக்காட்டில் எலியாக இருந்து விளக்கினைத் தூண்டி எரியச் செய்து மறு பிறவியில் மாவலியாய் வந்த வரலாறு, கணம்புல்ல நாயனார் வரலாறு, இராவணன் கயிலையை எடுத்த வரலாறு, அர்ச்சுனன் பாசுபதம் பெற்ற வரலாறு போன்றவற்றைப் பேசி இறைவனின் சிறப்பைக் காட்டுகின்றன.

இப்பதிகங்கள் கூறும் வரலாற்றில் சிலந்தி கோச்செங்கண்ணானாகப் பிறந்து வழிபட்டவரலாறும் ஒன்று. அப்பதிகம்:

“சிலந்தியு மானைக் காவிற்றிரு நிழற் பந்தர் செய்து
உலந்த வணிறந்த போதே கோச் செங்கணானு மாகக்
கலந்த நீர்க்காவிரி சூழ் சோணாட்டுச் சோழர் தங்கள்
குலந்தனில் பிறப்பித்திட்டார் குறுக்கை வீரட்டனாரே”

இப்பதிகச் செய்தி மாறவர்மன் குலசேகர பாண்டியனுடைய ஒருகல்வெட்டால் 700 ஆண்டுகளுக்கு முன்பே உறுதி செய்யப் பட்டுள்ளது திருவானைக்கா கோயிலுக்குத் தானமாகக் கொடுத்த நிலத்தைக் குறிக்கும் போது "இவர்க்கு விற்றுக் குடுத்த நிலமாவது உள்ளூர் திருப்புடை விளாகத்து சிலந்நியைச் சோழனாக்கினான் திருத்தோப்புக்கு நீர்பாய்கின்ற வாய்க் காலுக்கு மேற்கு" என்று குறிப்பிடுகின்றது.

***கோயிலின் காலம்:*** இக்கோயில் கல்வெட்டுகள், செப்புத் திருமேனிகள, சிற்பங்கள் ஆகியவற்றின் கால அமைதியைக் கொண்டு நோக்கும் போது இக்கோயிலின இன்றைய கட்டட அமைப்பின் காலம் கி பி 11–12 ஆம நூற்றாண்டு எனப் புலனாகின்றது சண்டிகேஸ்வரர் ஆலயத்தில் விக்கிரம சோழன கல்வெட்டு (232/1917) இருப்பதை நோக்கும் போது அக் கோயிலும இக்காலத்தயது எனத் தெரிகின்றது இவ்வூரில மேலும ஒரு சிவன் கோயிலும் மாரியம்மன வீரன் கோயில விநாயகர் கோயில்களும உள்ளன. அவற்றில் கல்வெட்டுகள் இல்லை.

---

## தமிழ் நாடு

பண்டைக்காலத்தில் தமிழ்நாடு, ஆந்திரா, கேரளம், கர் நாடகப் பகுதிகளைக் கொண்டு விளங்கியதால் திராவிடம என்று பொதுவாக அழைககப்பட்டது ஆங்கிலேயரால Madres Presidency என்று இப்பகுதிகள் அழைககப்பட்டன மொழிவாரி மாநிலப் பிரிவினைக்குப் பிறகு சென்னை (அ) மதராஸ் மாநிலம் என்று அழைக்கப்பட்டு 1967 ல சட்ட சபை தீர்மானத்தின காரணமாகத் தமிழ்நாடு என்று அழைக்கப்பட்டது.

700 ஆண்டுகளுக்கு முன்பே கோப்பெருஞ் சிங்கன் என்ற காடவமன்னனது வைத்தீஸ்வரன கோயிலக் கல்வெட்டு 'தமிழ்நாடு' என்ற சொல்லைப் பின் வருமாறு குறிப்பிட்டிருக கிறது. "இந்நாயனார் திருக் ..... வகெனறு பிள்ளை சோழ கோனார திருமுகம் உடையார் தமிழ்நாடு ... அழைத்து இப்படியே நொநதா விளக்கு எரிப்பதாகவும்"

— கோ முத்துச்சாமி

---

# பெருங்கரையும் திருமலையும்

*சி. முனிசாமி*, எம், ஏ; டி. இ.ஏ;
தரங்கம்பாடி.

இராமநாதபுரம் மாவட்டத்திலடங்கிய பரமக்குடி வட்டத்தின்கண் உள்ள பெருங்கரை என்பது ஒரு சிற்றூர். இவ்வூர் பரமக்குடி மதுரை செல்லும் நெடுஞ்சாலையில் பரமக்குடியிலிருந்து மேற்கே 13 கி.மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரின் வடபுறத்தே சாலைக்கு அண்மையில் சுயம்பு சொக்கநாதர் ஆலயம் எனப்படும் திருக்கோயில் ஒன்று உள்ளது. அக்கோயிலில் கி. பி 17 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டொன்று உள்ளது. அக்கல்வெட்டு அண்மைக் காலத்தேதான் தமிழ் நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் படியெடுக்கப் பட்டுள்ளது.[1] அதில் சேதுபதி எனும் திருமலைச் சேதுபதி பற்றிய குறிப்பு காணப்படுகிறது. அக்குறிப்பு மேற்கூறிய சேதுபதி மன்னரின் ஆட்சியாண்டில சிறிது மாற்றத்தை ஏற்படுத்தியுள்ளது. இச்செய்தி வரலாற்றுக்கு உறுதுணையாக அமையும் என்ற நம்பிக்கையாலும் ஒரு புதிய செய்தியாக இருப்பதாலும் ஒரு சிறிய ஆய்வுரையாக இங்கே இடம்பெறுகிறது

**கல்வெட்டு :-**

1. ஸ்வஸ்தி ஸ்ரீ
2. சாகாத்தம்
3. (1597) ரெம
4. ல்ச் செல்லா
5. நின்ற ஆனந்
6. த ஸூ காத்தி
7. கை மீ (4) உ டெ
8. தன் கரை ரா
9 சை வள நாட
10. ான பெருங்க
11. ரைச் சுயம்பு
12. சொக்கனாத
13. ர் மீனாட்சியம்
14. மைக்கு இவ்வூ
15. ரில் தெய்வக
16 ன்னியா பிள்ளை

17 தெய்வராயபிள்
18. ளை அவர் பெண்
19. சாதி வீராயியம்
20. மையும் தங்களுக்கு
21. ப் புண்ணியமா
22 ச்குற திரவியம்
23. அவர் மச்சினன்
24. பரதேசி முத்திை
25. ர வெள்ளை ஆ தெவ
26. ர் குருக்கபண்ட
27. ராமதை சிறுவா
28. ற்றுக்கும் கட்டளை
29 யிட்டுச் செல்ல பெ
30 ரன்னும் சோ
31. யில் கட்டிக்குடுத்து
32 அந்தப் படிக்கு அவ
33. ர் சுவாமி கோயி
34. ல் கல்லிறுலேயு
35. ம் அப்மன் கோ
36. யில் பூசை மடம்
37. செங்கலிறுலே
38. யும் அன்னதான
39. மடம் நந்தவா
40. ன முதலானதி
41. ம் செய்து நயிறு
42. ர் கோயில் முன்த
43. லம் நப்பிமாை
44. ரக் கொண்டு சம
45. பிடோச்சணே
46. பன்னணி சோடச
47. உபசாரம் நித்திய
48. திறிகால பூசை
49. அன்ன தானம்
50. உண்டாக்கி இரண்
51. யகெற்மம் திரும
52. லைச் சேதுபதி
53. ரகுநாத தேவர் முன்
54. உள்ளூரில் சன்னதி''

—என்று முடிகிறது.

பொருள் :- சகாப்தம் 1597ன் (அதாவது கி.பி.1675ன) மேல் செல்லா நின்ற ஆனந்த வருடம் கார்த்திகை மாதம் நான்காம் தேதி தென்கரை ராசை வளநாடான பெருங்கரை யில் சுயம்பு சொக்கநாதர், மீனாட்சியம்மை ஆகிய இறைவண இறைவி இருவருக்கும் கருங்கல்லினாலும், செங்கல்லினாலும் திருக்கோயில் கட்டப்பட்டது என்றும, அத்திருப்பணியைச் செய்தவர்கள. 1. தெய்வகன்னியாபிள்ளை. 2. தெய்வராய பிள்ளை, அவர் மனைவி வீராயிஅம்மை ஆகியவர்கள் என்றும், கோயில் திருப்பணி செய்து நிறைவுற்றபின் நயினார் கோயில்

முன் தலநம்பிமாரைக் கொண்டு இரண்யகற்பம் திருமலைச் சேதுபதி ரகுநாத தேவர் முன்பாக அக்கோயில் மகா குப்பாபிஷேகம் செய்யப்பட்டது என்றும், பின்னர் அதிலிருந்து தான் அவ்வூரில் திருக்கோயில் நின்று நிலவியது என்றும் அக்கல்வெட்டிலிருந்து நமக்குத் தெரிய வருகிறது.

மேற் குறிப்பிடப்பட்ட கல்வெட்டுத் தொடரில் காணப் படும் ''இரண்ய கற்பம் திருமலைச் சேதுபதி ரகுநாததேவர்'' என்னும் தொடர் இரகுநாத தேவர் எனும் திருமலைச் சேதிபதி மன்னருக்குரிய பட்டப பெயர்களுள் ஒன்று என்ப தனை கீழ் வரும் செய்தியால் அறியலாம்.

திருமலைச் சேதுபதி மன்னனுக்கு 'தேவை நகரதிபன்', 'சேது மூலரக்ஷ துரந்தரன்', 'தொண்டியந்துறைக்காவலன்', 'வைகை வள நாடன்', 'பரத நாடகப் பிரவீணன்'.[2] போன்ற பல்வேறு பட்டப் பெயர்கள் உண்டு. இதே போன்று 'இரண்ய கற்பம்' என்பதும் அம்மன்னனுகக வாய்க்கப் பெற்ற பட்டப் பெயர்களுள் ஒன்றாகும்.

'இம்மன்னனின் ஆட்சிக் காலத்தில் ஏராளமான புலவர் பெருமக்கள் ஆதரிக்கப்பட்டுள்ளனர் அக்காலத்தில் தான் மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர் 'தளசிங்க மாலை' என்னும் பாடலையும், பொன்னாங்கால் அமிர்த கவிராயர் என்பவர் 'ஒரு துறைக் கோவையையும்' பாடியுள் ளார்கள், சிலேடை நயம் தோன்றப் பாடிய அமிர்தகவிராய ருக்கு அரசன் நானூறு பொற்றேங்காய்களை பரிசாக வழங் கினான் என்ற வரலாற்றுச் செய்தி ஒன்று உண்டு,[3] இதனால் அம்மன்னனுக்கு 'இரண்யகற்பதனாதிபதி', என்ற பட்டப் பெயர் ஏற்பட்டிருந்ததில் வியப்பேதுமில்லை எனவே 'இரண்ய கற்பம் திருமலைச் சேதுபதி ரகுநாததேவர்'' என்பது மேற்கூறிய மன்னனின் பட்டப் பெயர்களுள் ஒன்று

என்பதும், பிற சேதுபதி மன்னர்களுக்கு வாய்க்கப் பெறாத ஒரு சிறப்புப் பெயரை அம்மன்னன பெற்றிருந்தான் என்பதும் தெளிவாகிறது.

ஆகவே, மேற்கூறப்பட்ட கல்வெட்டுத் தொடரில் காணப்படும் "இரண்ய கற்பம திருமலைச் சேதுபதி ரகுநாததேவர்" என்னும தொடர் திருமலைச் சேதுபதி மன்னனுக்கே உரிய பட்டப் பெயர் என்பதும், அக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்ட சகம் 1579 (அதாவது கி.பி. 1675) ஆம் ஆண்டு பெருங்கரை என்ற ஊரில் கோயில் எழுப்பப்பட்டு கும்பாபிஷேகம் நடைபெற்ற சமயம் அம்மன்னன் உயிரோடிருந்துள்ளான் என்பதும் தெள்ளிதின் புலனாகிறது

மேலும் இச்செய்தி வரலாற்றறிஞர்களுக்கு ஒரு அறை கூவலாய் அமைந்துள்ளது என்று கூறினாலும் அது மிகை யாகாது. ஏனெனில் சேதுபதி மன்னர்களின வரலாற்றைத் துருவிப் பார்த்த அறிஞர் பெருமக்களுக்கு இக்கல்வெட்டுச் செய்தி கிடைக்கப் பெறாமைதான் காரணம் என்று சொல்லலாம்.

சேதுபதிகள் வரலாற்றை ஆய்ந்த திரு. V. ரங்காச்சாரி, திரு S, நடராசன், திரு. K. சேஷாத்திரி போன்ற அறிஞர் பெருமக்கள் திருமலைச சேதுபதி மன்னரின ஆட்சியாண்டைப பற்றிக் குறிப்பிடும்போது அவர் கி. பி. 1645 முதல் 1670 வரை தான இருந்திருக்கக் கூடுமென்று சந்தேகத்தோடு கூறிப்போந்துள்ளனர்.[4]

ஆயினும் திரு.R. சத்தியநாத ஐயர், நெல்சன போன்றவர்கள்தம் குறிப்புக்களிலிருந்து[5] திருமலைச் சேதுபதி மன்னரின் ஆட்சியாண்டு கி.பி. 1645லிருந்து கி. பி. 1674 வரை மேலும் நான்கு ஆண்டுகள் கூடுதலாகிறது. திரு R சத்தியநாத ஐயரவர்கள் அனுமந்தகுடி கல்வெட்டைச்

சான்றாக வைத்துக் கொண்டு திருமலைச் சேதுபதி மன்னரின் ஆட்சியாண்டு கி பி. 1674 வரை என்று அறுதியிட்டு கூறியுள்ளார். பெருங்கரை கல்வெட்டோ திரு ஐயரவர்களின் கருத்துக்கு உறுதுணையாக அமைவதோடு மட்டுமின்றி மேற்கூறிய குழப்பங்களுக்கும் சந்தேகத்திற்கும் இடமின்றி ஒரு முற்றுப்புள்ளியாய் அமைந்துள்ளது

எனவே மேற்குறிப்பிடப் பட்ட பல்வேறு கருத்துக்களிலிருந்தும் நமக்குத் தெரிய வருவது என்னவென்றால் இரகுநாத தேவர் எனும் திருமலைச் சேதுபதி மன்னர கி.பி. 1645 முதல் 1675 வரை உயிரோடு இருந்து ஆட்சி புரிந்துள்ளார் என்பதேயாகும். இதனால், இக்கருத்து வரலாற்றுக்கும், வரலாற்றறிஞர்களுக்கும் உசாத்துணையாய் அமையும் என்ற திட நம்பிக்கை கிடைக்கிறது.

**மேற்கோள் நூல்கள்:-**

1. கட்டுரையாளர் 1983-ஆம் ஆண்டு இராமலிங்க விலாசம் அருங்காட்சியகக் காப்பாட்சியராக பணியாற்றிய போது படியெடுக்கப்பட்ட கல்வெட்டுகளில் ஒன்று.
2. Revenue Consultations. 1795 Vol. 64.B. p. 2494 மற்றும் திருப்பத்தூர் கல்வெட்டு சகம், 1589க்குரியது.
3. K. சேஷாத்திரியின் டாக்டர் பட்டத்திற்கான ஆய்வுத் தொகுதி
5. V. ரஙகாச்சாரி, op. cit, p, 1196.

# வீரபாண்டியனைக் கொண்ட வட்டெழுத்துக் கல்வெட்டு

டாக்டர். வெ. வேதாசலம் / டாக்டர். கோ. விசயவேணுகோபால்
மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்

இராமநாதபுரம் மாவட்டம், இராசபாளையம் அருகில் 8மைல் தொலைவில உள்ளது கொல்லங்கொண்டான். இவ் வூருக்கு மேற்கே 2கி மீ தொலைவில் உள்ள சிறிய கிராமம் நக்கனேரி. இக்கிராமததில் வட்டப்பாறை ஒன்றில் இக்கல் வெட்டு வெட்டப்பட்டுள்ளது. அரசு ஆவணங்களில் இது வட்டப்பாறை ஊருணி என்று குறிக்கப்பட்டுள்ளது[1] இதே பாறையின் வேறொரு பக்கத்தில் மற்றொரு கல்வெட்டு இருந்ததாகவும் பின் கல்லுடைக்கும்போது சிதைக்கப்பட்டு விட்டதாகவும் கிராமமக்கள் தெரிவிக்கின்றனர்.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ சோழன் தலை கொண்ட கோ வீரபாண்டி
2. யற்கு யாண்டு யரு இவ்வாண்டு ஆண்மர் நாட்டு
3. த் தேவதான பிரஹ்மதேயம் தேவி அர்மச் சதுர்வேதி
4. மங்கலத்து[2] வடக்கில் வாயிலித் திருமலை மேற்
5 ஸ்ரீ சூளாமனி விண்ணகரென்று பெயரிட்டு அண்டநாட்
6. டு பெருமூர்த்தி தென்னவனுத்தர மந்திரி ஆயின சூ
7. ளாமணி கிழவன் எடுப்பிச்ச ஸ்ரீ கோயிலில் நாரா
8. யண ஸ்வாமிகளுக்குத் தென்னவனுத்தர மந்திரி வைச்ச
9 திருநொந்தா விளக்கு ஒன்று இதொரு திருநொந்தா வி
10. ளக்குக்கு நியதம் உழக்கு நெய்மூட்டாமற சோளா
11 ந்தக நாராயத்தோடொக்கும் உழக்காலட்டுவதாக இ
12. த் தேவி அம்மச் சதுர்வேதி மங்கலத்திருக்கும் படை

13. த் தலைவன் உலகங் குற்றாலம் இத்தென்னவனுத்தர மந்
14. திரி பக்கற் கொணடு சாவா மூவா பேராடு எயரு இவை மஹா
15. ஸபையாரகைஷ.

*அரசனும் காலமும் :*

வீரபாண்டியன் கி.பி 946–966வரை ஆண்டவன் அம்பா சமுத்திரத்திலுள்ள எறிச்சாவுடையார் கோவிலில் காணப்படும் (SII XIV 95) கல்வெட்டுக் குறிப்பு ஒன்று இவனுடைய 12 ஆவது ஆட்சியாண்டில் மிதுன மாதத்தில் சூரிய கிரகணம் நடந்ததாகக் குறிப்பிடுகிறது. இக்குறிப்பினை வைத்து இவன் பட்டத்திற்கு வந்த ஆண்டு கி பி. 946 என முடிவு செய்துள் ளனர் இக்கல்வெட்டு வீரபாண்டியனின் 15 ஆவது ஆட்சி யாண்டைக் குறிட பிடுவதால் இக்கல்வெட்டின் காலம் கி பி 961 என்றாகிறது

வீரபாண்டியன் முற்காலப் பாண்டியப் பேரரசின் இறுதி அரசன் ஆவான். இவனுக்குப் பின்னர் பாண்டிய அரசு சோழர் கைக்கு மாறிவிடுகிறது. பின்னர் பாண்டி நாட்டைச் சோழ பாண்டியர் ன்னும் சோழ அரசரின் பிரதிநிதிகள் ஆளத் தொடங்குகின்றனர். (திருவாலங்காட்டுச் செப்பேடு – இரா சேந்திர சோழன் – கி.பி 1018) இவர்கள் ஆட்சி 50 ஆண்டு கள் நீடித்தது (கி பி. 1070 வரை) இவனுடைய கல்வெட்டு கள் பள்ளி மடம், கீழ்மாத்தூர், விஜயநாராயணம், ஸ்ரீவில்லி புத்தூர், பெருங்குளம், எதிர்கோட்டை, சுசீந்திரம் ஆகிய இடங்களில் கிடைத்துள்ளன.

**கல்வெட்டுச் செய்திகள் :**

சோழன் தலை கொண்ட வீரபாண்டியனின் 15 ஆவது ஆட்சியாண்டில் அண்டநாட்டுப் பெருமுரைச் சேர்ந்த தென்ன

வன் உத்தர மந்திரி ஆயின சூளாமணிக் கிழவன் என்பவன் ஆண்மர் நாட்டுத் தேவதானப் பிரம்மதேயமாகிய தேவியம்மச் சதுர்வேதி மங்கலத்தின் வடக்கேயுள்ள திருமலை எனும் மலைமீது ஸ்ரீ சூளாமணி விண்ணகரமென்ற பெயரில் திருமாலுக்கு ஒரு திருக்கோயில் கட்டி அங்கு எழுந்தருளியுள்ள நாராயண ஸ்வாமிகளுக்குத் திருநொந்தா விளக்கு ஒன்று வைத்த செய்தியைக் குறிப்பிடுகிறது இக்கல்வெட்டு இவ் விளக்கெரிப்பதற்காகத் தினம் உழக்கு நெய் தருவதற்காகத் தேவிஅம்மச் சதுர்வேதி மங்கலத்திருக்கும் படைத்தலைவனான உலகன் மகன் குற்றாலம் என்பவனிடம் 75 சாவா மூவாப் பேராடுகள் ஒப்படைக்கப்பட்டன. இக்கல்வெட்டால் நமக்குச் சில புதிய செய்திகள் தெரிய வருகின்றன. முதலாவது வீரபாண்டியனுக்குச் சூளாமணிக் கிழவன் என்பவன் உத்தர மந்திரியாக இருந்தான் என்பது. மற்றொரு செய்தி பாண்டி நாட்டில் வைணவ சமய வளர்ச்சி தொடர்பானது. இக்கல் வெட்டின் மூலமே ஆண்மர் நாட்டில் ஒரு மலைமேல் திருமாலுக்குச் சூளாமணி விண்ணகர் என்ற பெயரில் கோயில் எடுக்கப்பட்டமை தெரிய வருகிறது. இன்று இக்கோயில் இல்லை வீரபாண்டியன் சைவனாயினும் இவனிடம் பணி புரிந்த அலுவலர்களுள் ஒருவன் வைணவ சமய வளர்ச்சிக் குத் தொண்டு செய்ய அனுமதித்துள்ளமை அக்கால அரசின் சமயக் கோட்பாட்டைப் புரிந்துகொள்ள உதவுகிறது

இக்கல்வெட்டில் குறிப்பிடப்படும் ஆண்மர் நாட்டுத் தேவி அம்மச் சதுர்வேதி மங்கலம் தேவதானமாகவும் பிரம்மதேய மாகவும் ஒருசேர விளங்கியுள்ளது வீரபாண்டியனின் தாய் சேரள இளவரசி மூலம் பிறந்தவனே இவ்வீரபாண்டியன். மேலும் வீரபாண்டியனுக்கு 'வீரகேரளன்' என்ற பட்டப் பெயரிருந்தமை சிவகாசிச் செப்பேடுகள் மூலம் தெரிய வருகிறது[4] அம்ம என்ற பின்னொட்டோடு வரும் பெயர் இது வொன்றேயாகும். பொதுவாகத் தமிழில் 'அம்ம' எனக் குறுக யிறுதியாக வருவதில்லை, மலையாளம், கன்னடம், தெலுங்கு

போன்ற பிற திராவிட மொழிகளில் வருவதுண்டு. எனவே 'அம்ம' எனவரும் குற்றுயிரீற்றாக கொண்டு இதனை மலையாள வழக்கென ஊகிக்கலாம் தேவி அம்ம என்பது தனது தாயினையோ அல்லது தாய்வழி உறவினர்களுள் ஒருவரையோ குறிக்கலாம். பெரும்பாலும் தன தாய நினைவாக இவ்வூர்க்குப் பெயரிட்டனன் போலும். பொதுவாக வரலாற்றாசிரியர்கள் உத்தரமந்திரி என்ற தொடர் முதலமைச்சர் போன்ற பதவியைக் குறிக்கிறது எனக் குறிப்பிடுவர். பாண்டியர் கல்வெட்டுக்களைப் பதிப்பித்த ஏ. எஸ் இராமநாத ஐயர் உத்தரமந்திரியை 'Minister of the Pandya king' என்றும் கே. வி இராமன் ''இவரைத் தலைமை அமைச்சர் என்று கருதலாம்'' என்றும் குறிப்பிடுவதைக் காண்க[5] இவ்விளக்கம் பொருத்தமற்றதாகும் அம்பாசமுத்திரம் எறிச்சாவுடையார் கோவிலில் காணப்படும் வீரபாண்டியனின் கல்வெட்டொன்றில் சூளாமணிக் கிழவன் என்பவன் 'வாய் கேழ்வி' யாகக் குறிப்பிடப்படுகின்றான் பிற கல்வெட்டுக்களிலும் 'திருவாய்க் கேள்வி' என்ற அதிகாரி பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. அரசனின் ஆணையைக் கேட்டு உரியவர்க்கு அறிவிக்கும் பணியாளனே திருவாய்க் கேள்வி அல்லது வாய்க் கேள்வி எனப்பட்டான். (கல்வெட்டில் ளகர ழகர மாற்றத்தால் வாய் கெழ்வி என வந்துள்ளது.) வாய்க். கேள்விக்கு இணையான வடமொழிச் சொல்லாக உத்தரமந்திரி என்ற தொகைச் சொல் பயன்படுத்தப்படுகிறது. எனவே இவ்வலுவலன் மந்திரிப் பதவிக்கு இணையானவனாகக் கருதப்பட்டிருக்கலாமே தவிர முதலமைச்சர் அல்லது தலைமை அமைச்சர் எனக் கருதுதற்கு இடமில்லை

இது போலவே கல்வெட்டுக்களில் குறிக்கப்பெறும் படைத் தலைவன் எனும் பெயரும் வரலாற்றாசிரியர்களால் சேனைத் தலைவன எனப் பொருள் கொள்ளப் பெற்றுள்ளது.

கே. ஏ. நீலகண்டசாத்திரியார் படைத்தலைவன் என்னும் தொடர்க்கு "Captain of the troops" எனப்பொருள் செய்தலைக் காண்க.[6] ஆனால் படைத்தலைவன் எனும் இப்பட்டம் இடையர்க்குரிய பட்டமாக விளங்கி வந்துள்ளது "இவ்வூர் வெட்டிகுடி இடையன் படைத் தலைவன்" எனக் கல்வெட்டில் குறிப்பிடப்படும் உலகங்குறநாலம் என்பவன் சேனைத் தலைவன் அல்லன் இடையரினத்தைச் சேர்ந்தவனே எனக் கொள்ளல் வேண்டும் உலகங்குற்றாலம் என்ற பெயர் வழக்கு உலகன் மகன் குற்றாலம் என்ற பொருளைத் தரும் இவ்வாறு இயற்பெயர்கள் னகர ஈறு உறவு முறையைக் குறிக்கும் வகையில் மகரமாகத் திரியுமென்று தொல்காப்பியர் விதி கூறியிருத்தலின் இம்மரபு கி பி 961 வரையிலும் நடைமுறையிலிருந்தமையை இக்கல்வெட்டு நமக்கு உணர்த்துகிறது.

வீரபாண்டியன் தன் பட்டப் பெயராகிய "சோழாந்தகன்" என்பதனை அளவைப் பெயர்கட்கும் பயன்படுத்தியமை இக் கல்வெட்டில் வரும் "சோளாந்தக நாராயம்" எனும் தொடரால் அறியலாம் இவ்வாறு இக்கல்வெட்டு நமக்குச் சில புதிய செய்திகளைப் புலப்படுத்துகிறது.

**அடிக்குறிப்புகள்**

1. இக் கல்வெட்டினைக் கட்டுரையாளர் நக்கனேரித் தொடக்கப்பள்ளித் தலைமை ஆசிரியர் திரு சின்னமணி அவர்களின் உதவியோடு 1981 இல் கண்டறிந்தார்.
2. கல்வெட்டில் இத்தொடர் கிரந்த எழுத்தில் அமைந்துள்ளது அச்சகத்தே இவ்வெழுத்துக்கள் கிடைக்காதகால் தமிழ் எழுத்துக்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. இவ்வாறே வரி 5-இல் சூடாமணி எனவும் வரி 14-15 இல் **மஹாஸபையார் [illegible]** எனவும் வருவன மூலத்தில் கிரந்த எழுத்துகளில் உள்ளன.
3. S. I I Vol XIV Nos. 79--96
4. பாண்டியர் செப்பேடுகள் பத்து. பக். 183—185
5. S I I. Vol XIV p 1; கே. வி. இராமன், பாண்டியர் வரலாறு பக் 156.
6. Colas. p 456.
7. S I. I Vol XIV No 82

# கீழ்வாலை வரிவடிவங்கள்

இரா. பவுன்துரை
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்

தமிழ்நாட்டில் வரலாற்றுக்கு முந்திய காலத்துப் பாறை ஓவியங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. தமிழக வரலாற்றுத் தொன்மையைக் காட்டவல்ல இவ்வோவியங்கள் சுமார் 18 இடங்களில் இதுவரை கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

கீழ்வாலை, தென்னார்க்காடு மாவட்டம் விழுப்புரம் நகரிலிருந்து திருவண்ணாமலைக்குச் செல்லும் வழியில் 23 கி.மீ தூரத்தில் உள்ளது. இக்கிராமத்திலிருந்து 1 கி.மீ. தூரத்தில் ஓவியம் தீட்டப்பெற்ற குன்று அமைந்துள்ளது. இக்குன்று 'இரத்தக் குடைக்கல்' என்று அழைக்கப்படுகின்றது. இங்கு விலங்குகள், படகு, சூரியன், ஆயுதம், வில், பறவை முகத்துடன் கூடிய மனிதர்கள் போன்ற ஓவியங்கள் காணப்படுகின்றன. இங்கு காணப்படும் மற்றொரு சிறப்பு ஐந்து வரிவடிவங்களாகும். இவ்வரிவடிவங்களை சிந்துவெளி நாகரிக வரிவடிவங்களுடன் ஒப்பிட்டுக் காணும் முயற்சியே இந்த ஆய்வாகும். இந்த ஆய்வு திரு. ஐராவதம் மகாதேவன் அவர்களுடைய சிந்துவெளி வரிவடிவ ஆய்வு முடிவைக்கொண்டும், சோவியத்து ஆய்வாளர்களின் குறிப்புகளைக் கொண்டும் ஒப்பிட்டுக் காணப்பட்டுள்ளது.



கு.1 கு.2 கு.3 கு.4 கு.5 கு.6

சிந்துவெளி வரி வடிவங்கள்

கீழ்வாலை வரி வடிவங்கள்



கு.1 கு.2 கு.3 கு.4 கு.5

*வரிவடிவம்—கீ.1*

சிந்துவெளி வரிவடிவத்தில் இவ்வடிவம் இடம் பெறுகின்றது. இவ்வடிவத்திற்கு kutu — குட்டு — (thunder) எனும் பொருள் கொடுக்கப்பட்டுள்ளது. இதனை இடி அல்லது இடியுடன் கூடிய மேகக் கூட்டத்தைக் குறிப்பதாகக் கொள்வர்.

சிந்துவெளி வரிவடிவத்தில், ஒரு நீண்ட கோடும் அதனிடையே குறுக்காக 4 சிறு கோடுகளும் உள்ள வடிவம் (சி 1) உள்ளது. இவ்வரிவடிவம் போன்றே கீழ்வாலையிலும் காணப்படுகின்றது. இவ்விருவரிவடிவங்களும் மாறுபாடின்றி உள்ளன எனவே அப்பொருளினையே இவ்வரிவடிவத்திற்கும் கொள்ளலாம் கீழ்வாலையில் காணப்படும் இவ்வரிவடிவம் இடி அல்லது இடியுடன் கூடிய மழைக் காலத்தைச் சுட்டுவதாகக் கொள்ளலாம். இக்கருத்திற்கு வலுவூட்டும் வண்ணம் இங்குக் காணப்படும் பாறை ஓவியம் அமைந்துள்ளது. ஒரு படகில் நால்வரில் இரண்டாவதாக நிற்கும் மனிதனின் கையில் துடுப்பு ஒன்று காணப்படுகின்றது. இச்சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு காணுமிடத்து அப்பகுதியில் இடியுடன் கூடிய மழை பெய்திருக்கலாம் எனக் கருத இடமுண்டு. எனவே இவ்வரிவடிவத்திற்கு 'இடி – இடியுடன் கூடிய மழை' எனப் பொருள் கொள்ளலாம்.

*வரிவடிவம்—கீ.2*

கீழ்வாலையில் காணப்படும் வரிவடிவங்களில் இதுவும் ஒன்று இவ்வடிவத்தைப் போன்று சிந்துவெளி வரிவடிவத்திலும் உள்ளது. ஆனால் மிகச் சிறிய மாற்றத்துடன் கீழ்வாலையில் உள்ளது. சிந்து வரிவடிவத்திற்கு (சி2) கொள்-kol

க்கன குறிக்கப்படுகின்றது. இதற்கு உடைமை, ஏற்புடைய (வர்) எனும் பொருளும் இவ்வரிவடிவத்துடன் காணப்படும் பிற வரிவடிவங்களுக்கு கொள்–கர்–kol–kar ; கொள்–கண்ட (த்து) – kol - kanta - at (tu) அதாவது the holder – hero's (Power) என்று கூறப்படுகின்றது. தலைவனைக் குறிப்பன வாகவும் அவனது ராஜாங்கத்தைச் சுட்டுவனாகவும் குறிக் கப்படுகின்றது. கொள்-கர் எனும் வரிவடிவம் சுமார் 14 இடங் களில் காணப்படுவதாகக் கூறப்பட்டுள்ளது.

இருப்பினும் கீழ்வாலையில் காணப்படும் வரிவடிவத்திற்கு 'ஒரு தலைவனின் கீழ் ஊர்வலமாகச் செல்லுதல் அல்லது ஆவியாகச் செல்லுதல் எனப் பொருள் கொள்வதாக அமையும் எனலாம்

*வரிவடிவம்—கீ. 3*

சிந்துவெளி வரிவடிவத்தில் இவ்வரிவடிவத்திலுள்ள எழுத்தமைதியானது சற்று மாறுபட்ட நிலையில் உள்ளது (சி3). எழுதும் முறையில் சில மாற்றங்கள் ஏற்படுவது இயல்பு இவ்வரிவடிவத்திற்கு சொர்க்கம், தேவலோகம், உயர்ந்த தன்மையைச் சுட்டும் பொருளாகவும், வடதிசையைக் குறித் திடும் வரிவடிவமாகவும் பொருள் காணப்பட்டுள்ளன.

கீழ்வாலையில் காணும் வரிவடிவத்தின் பொருள் சொர்க்கம் அல்லது தேவலோகம் எனும் பொருளில் அமைய வில்லை எனலாம் மாறாக வடதிசையைக் குறிக்கும் பொருளாகக் காணலாம்

*வரிவடிவம் – கீ 4*

சிந்துவெளியில் காணப்படும் இவ்வரிவடிவத்திற்கு (சி 4) செல்லும் ஊர்வலம் அல்லது அணியெனப் பொருள் காணப்

பட்டது. இதற்கு (அ) வடதிசை (ஆ) இசைக்கருவி என இரு பொருள் சுட்டும் வண்ணம் உள்ளதாகக் கூறுவர். கீழ் வாலையில் காணப்படும் இவ்வரிவடிவத்திற்கும் சிந்துவெளி வரிவடிவத்திற்கும் வேறுபாடு இருப்பதாகத் தோன்றவில்லை. எனவே இதற்கு 'வடதிசை' என்று பொருள் காண இடமில்லை எனக் கூறவும் இயலாது. இருப்பினும் இசைக் கருவியைச் சுட்டும் வரிவடிவம எனக் கூறலாம அல்லது 'வடதிசை நோக்கி இசையொலி எழுபபி ஆரவாரமாகச் செல்லுதல்' எனப் பொருள் காணவும வாய்ப்புண்டு

**வரிவடிவம் – கீ.5**

கீழ்வாலையில் காணும் இவ் வரிவடிவம் சிந்துவெளி வரிவடிவத்தில சற்று மாறுபட்டுக் காணப்படுகிறது. இது போன்ற சிந்து வரிவடிவத்திற்கு பண்டு (pantu) என்றும் இதற்கு வருடம், காலம் அல்லது வயது, விழா எனப் பொருள் குறித்துள்ளனர். சிந்து வரிவடிவத்தில் காணப்படும் வட்டத்துள் ஆறு பிரிவுகளாகப் பிரிக்கும் வண்ணம் கோடிடப் பட்டிக்கிறது இதற்கு காலத்தின் ஆறு பிரிவுகளையும் குறிப்பதாகக் கணக்கிட்டுள்ளனர் பொதுவாக இவ்வரிவடிவம் காலத்தை, பொழுதைச் சுட்டும் வண்ணம் அமைந்துள்ளது என்பர். சிந்துவில் (சி.5) போன்றுகாட்டப்பட்டுள்ள வரி வடிவம் உள்ளது இதற்கு நிலவு, தேவதை எனப் பொருள் கண்டுள்ளனர். (சி.6) வடிவத்திற்கு ஆழி எனும் பொருள் குறிக்கின்றனர்.

ஆனால் மேற்குறிக்கப்பெற்ற வரிவடிவங்களிலும் பிற வரிவடிவங்களிலும் கீழ்வாலையில் காணப்படும் வரிவடிவம் போன்று காணமுடியவில்லை. இருப்பினும் தலைவன் ஆட்சி என்ற பொருளில் காண்பதை விட இங்குள்ள வரிவடிவம் காலத்தைச் சுட்டுகின்றது எனக் கருத இடமுண்டு.

கீழ்வாலையில் காணப்படும் இந்த ஐந்து வரிவடினத் திற்கும் பொருள் காண்பதால் அவற்றை இணைத்துப் பொருள் காணுதல் அவசியமாகும். அவை கீழ்க்காணும் பொருளில் அமைந்துள்ளன. எனலாம்.

கீ.1 இடியுடன் கூடிய மழை பெய்தல்
கீ.2 தலைவனுடன் அணியாகச் செல்லுதல்
கீ.3 வடதிசை நோக்கிச் செல்லுதல்
கீ.4 இசையொலியெழுப்புதல்
கீ.5 வ்ழாக் காலம்

கீ. 5 -என்றும் வரிவடிவத்திற்கு விழாக்காலம் எனக் குறிக்கப்படுகிறது விழா'வேட்டையாடுதல்' குறித்து அமை கின்றது. வரலாற்றுக் காலத்திற்கு முந்திய மனிதன் இடம் விட்டு இடம் பெயரும் வாழ்வையும், உணவுக்காக வேட்டை யாடுதலையும் கொண்டவன். எனவே அவனது விழா வேட்டையாடுதலை முன்னிட்டு ஏற்படும் ஒரு சடங்கு அல்லது மந்திர முறையெனக் கருதலாம்.

கீ. 4 -என்னும் வரிவடிவத்திற்கு இசையொலியெழுப்பு தலையும் கீ. 3 -என்பதற்கு செல்லும் திசை வடதிசை யாகவும் கூறப்படுகிறது. இங்கு வடதிசை நோக்கி ஒலி யெழுப்பிச் செல்லுதல் என்றும் அவ்வணியானது அக் குழுவின் தலைவனது கீழ் செல்வதாகவும் (கீ.2) சுட்டப்படு கின்றது.

இத்தகைய விழாக்கால ஊர்வலத்தின் போது அல்லது வேட்டைக்குச் செலலும் ஓர் ஊர்வலத்தின் போது இடி யுடன் கூடிய மழை பெய்வதாகப் பொருள் (கீ.1) அமை வதைக் காணலாம்.

எனவே கீழ்வாலைக் குறியீடுகளுக்கு ஒட்டு மொத்தமாக 'இனக் குழுத் தலைவனது தலைமையில் வடதிசை நோக்கி இசையொலி எழுப்பி வேட்டைக்குச் செல்லும் விழா நடை பெறுகின்ற பொழுது இடியுடன் கூடிய மழை பெய்வதாகக் பொருள்' கொள்ளலாம்.

**இடமிருந்து வலம் :**

இவ்வரிவடிவ எழுத்தமைதி "இடமிருந்து வலமாக" எழுதப்பட்டுள்ளது. சிந்துவெளி தொல் வரி வடிவங்களை ஆய்வு, செய்த அறிஞர் சிலர், அவை 'வலமிருந்து இடமாக' அமைந்துள்ளன என்றும், சிலர் இடமிருந்து வலமாக அமைந்துள்ளன என்றும் கூறுவர். கீழ்வாலையில் காணப் படும் தொல் வரிவடிவங்கள் இடமிருந்து வலமாக அமைந் துள்ளன.

கீழ்வாலை வரிவடிவ ஆய்வானது ஒரு சிறிய ஒப்பாய்வு முயற்சி தான். இத்தொல் வரிவடிவங்களைப் பற்றி மேலும் பல ஆய்வுகள் தேவைப்படுகின்றன.

---

**பகை திருந்த**

"கருணாகரசசோழ முத்தரையன் மாப்பாக்கத்தில் பூசலிலேபட்டமையில் இவநால் வந்த பகை திருந்த வைத்த திருநுந்தா விளககு ஒன்று" எனறு பகைமையை மறப்பதற் காக விளக்கு வைக்கப்பட்டதை கல்வெட்டு ஒன்று தெரிவிககின் றது திருவக்கரை விக்கிரமசோழன்க ல்வெட்டு (கி பி.1130

# குளக்கீழ்

வெ. வேதாசலம், எம்.ஏ., டி.இ.எ,
மதுரை.

இன்று இந்தியநாடு மாநிலம், மாவட்டம், வட்டம் என்று பல்வேறு பிரிவுகளாகப் பிரிந்திருப்பது போன்று பழந்தமிழ் நாட்டுப் பகுதியும் பல்வேறு பிரிவுகளாகப் பிரிந்திருந்தன. இவற்றிற்குரிய பல்வேறு பெயர் வடிவங்களைத் தமிழ்நாட்டுக் கல்வெட்டுக்களில் காணமுடிகின்றது இவற்றில் பெருநிலப் பரப்பைக் குறிக்கும் பிரிவுகள் மணடலம், வளநாடு, பாடி, ராச்சியம், உசாவடி என்று அழைக்கப்பட்டன. இதில் வளநாடு எனபது முற்காலப் பாண்டிய நாட்டில் சிறுநிலப்பிரிவைக குறிககும் நாட்டுப் பிரிவாகவும் விளங்கியுள்ளது. சோழர்கள் காலத்தில் இரணடு ஆறுகளுக்கு இடையே அமைந்த பெரு நிலப்பரப்பைக் குறிக்கும சொல்லாகவும் இது விளங்கியுள்ளது.[1] இப்பெருநில நாட்டுப்பிரிவுகளின் கீழமைந்த சிறுநிலப் பரப்பைக் குறிக்கும் நாட்டுப் பிரிவுகள் நாடு, கூற்றம், முட்டம், இருக்கை. நிலை, கரைவழி நாடு, கண்டம், வட்டம், நாட்டாற்றுப்போக்கு, வளநாடு என்று பிரிக்கப்பட்டிருந்தன. சிறுநில நாட்டுப்பிரிவுகளில் ஒன்றாக குளக்கீழ் என்றழைக்கப பெற்ற நாட்டுப்பிரிவும் பழந்தமிழ்நாட்டில் பல இடங்களில் இருந்துள்ளது இச்சிறுநில நாட்டுப்பிரிவைக் குறித்த ஆய்வு தமிழ்நாட்டில் பண்டைய நாட்டுப் பிரிவுகளின் (Political and Geographical divisios) தோற்றமும் வளர்ச்சியும் குறித்த பல அடிப்படையான சமூகவரலாற்றுச் செய்திகளைத் தருகின்றது.

இந்நாட்டுப் பிரிவுகளின் தோற்றத்திற்கு காரணங்கள் பல கூறப்பெற்றிருக்கின்றன,[2] தமிழ்நாட்டில் கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு முன்புள்ள பழந்தமிழிலக்கிய காலத்தில்

(சங்ககாலம்) பெரும் நிலப்பரப்பைக் குறிக்கும் நாடுகளாக மூவேந்தர் நாடுகளும் அவர்களைச் சார்ந்து வாழ்ந்த சிற்றரசர்களது நாடுகளுமே இருந்தன. அவற்றிற்குக்கீழே ஊர்களே அந்நாடுகளின் அடுத்த ஆட்சிப்பிரிவு என்ற முறையில் விளங்கியிருக்கின்றன. பாரி ஆண்ட பறம்புநாடு முன்னூறு ஊர்களைக் கொண்ட நாடாக விளங்கியிருக்கின்றது மூவேந்தர் நாடுகளும் பிற சிற்றரசர் நாடுகளும இவ்வாறே ஊர்களாகப் பிரிந்திருந்தன. இதனை 'நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்' என்ற அகப்பாடலின் வரியும் உறுதிப்படுத்துகின்றது.[3] சங்ககாலத்தின் இறுதிக்குப் பிறகு இந்நிலை மாறிய தொடக்ககாலத்தில் பலவூர்களைச் சேர்ந்த மக்களின் வாழ்விடம் குடும்பஉறவு, தொழில், நீர்ப்பாசனம் என்ற ஏதாவது ஒன்றோடு சமூக, பொருளாதார, அரசியல் அடிப்படையில் பிணைப்புடைய ஊர்களைச் சார்ந்த மக்கள் தங்களது சமூகநலனைப் பாதுகாத்துக் கொள்ளும் வகையில் ஏற்படுத்திக்கொண்ட அமைப்பே இச்சிறுநிலப்பரப்பைக் குறிக்கும் நாட்டுப்பிரிவுகளாகும். (இன்றும் மதுரைமாவட்டத்தில் இவ்வழக்கத்தின் தொடர்ச்சியாக மேலூர்பகுதியுள்ள கள்ளர் சமூகத்தினைச் சார்ந்தவர்களும் உசிலம்பட்டி, திருமங்கலம், மதுரை ஆகியவட்டத்திலுள்ள பிறமலைக்கள்ளர்களும் அவர்கள் வாழ்கின்ற பகுதியை மாகாணம், நாடு என்ற பல பிரிவுகளாக வகுத்து அதற்கொன்று தலைவர்களை நியமித்து தங்களது சமூகநலனைப் பாதுகாக்கும் செயலகளில் ஈடுபட்டு வருகின்றனர்) காலப்போக்கில் இவற்றையே பாண்டியர், சோழர், சேரர், பல்லவர் போன்ற தமிழ்நாட்டை ஆண்ட அரசகுலங்கள் தங்களது நிர்வாகத்திற்குத் துணைநிற்கும் வகையில் தங்களது நாடுகளின் ஆட்சிப்பிரிவுகளாக இவற்றைக் கொண்டன இவற்றில் பல சீர்திருத்தங்களைச் செய்தன. இவற்றின் அடிப்படையில் பிற்காலத்தில் பல சிறுநிலநாட்டுப் பிரிவுகளையும் பெருநிலநாட்டுப்பிரிவுகளையும் உருவாக்கின. தமிழ்

நாட்டில் தொடக்காலத்தில் வாழ்விடங்களை மையமாகக் கொண்டு சிறு நாட்டுப் பிரிவுகள் உருவாகின. வேளாண்மைத் தொழில் வளர்ச்சிபெற்று நிலவுடைமைச் சமூகஅமைப்பு வளர்ந்த பின்னர் நீர்ப்பாசனம், வேளாண்மை ஆகியவற்றை மையமாகக் கொண்டு நாட்டுப்பிரிவுகள் தோன்றலாயின தமிழ்நாட்டில் ஏற்பட்ட இச்சமூக வரலாற்று வளர்ச்சியின் போக்கில் நீர்ப்பாசனம், வேளாண்மை ஆகியவற்றின் அடிப் படையில் பல நாடுகள் தோன்றி வழக்கில் இருந்திருப்பதை கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.

ஊர்ப்பகுதியில் பாய்கின்ற ஆறுகள், வாய்க்கால்கள் ஆகியவற்றைக் கொண்டும் அவ்வூர்ப்பகுதிகளில் காணப்படும் ஏரி, குளம் முதலிய நீர்நிலைகளைக் கொண்டும் இந்நிலப் பிரிவுகள் வகுக்கப்பெற்று பெயரிடப்பெற்றுள்ளன. கரைவழி என்று ஆற்றின் போக்கில் இருந்த நாட்டுப்பிரிவுகள் அழைக் கப்பட்டன. இவை வடகரை, தென்கரை என்று திசைபிரித்து குறிப்பிடப்பெற்றன அவ்வாறுகளிலிருந்து பல ஏரிகளுக்கும் சிறுகுளங்களுக்கும் நீரை எடுத்துச்சென்ற பெருங்கால் களின் போக்கிலமைந்த ஊர்கள் (எ கா நாட்டாற்றுப்போக்கு மீகுண்டாறு, கீழ்குண்டாறு) அப்போக்கைச் சார்ந்த ஊர் களாகக் குறிப்பிடப்பெற்றன. இதில் நாட்டாறு என்பது சிறு நாடுகளைச் சார்ந்த நாட்டவர்களால் பாசனத்திற்காக உருவாக்கப்பெற்ற பெரும் ஆற்றுக்காலாகும். இதனாலேயே இவ்வாற்றுக்கால் போக்கில் அமைந்த ஊர்கள் நாட்டாற்றுப் போக்கு என்று குறிப்பிடப்பெற்றன. இராமநாதபுரம் மாவட் டம் பரமக்குடி வட்டத்தில் வைகையிலிருந்து பிரியும் பெரும் ஆற்றுக்கால் ஒன்று இன்றும் ‘நாட்டார்கால்’ என்றழைக்கப் பட்டு வருவது குறிப்பிடத்தக்கது. இதே போன்று ஏரி, குளம், போன்ற நீர்நிலைகளைச் சார்ந்து அமைந்திருந்த விளை நிலங்களும் மக்கள் வாழும் ஊர்ப்பகுதிகளிலும் அந்நீர்

நிலைகளின் பெயரால குளக்கீழ் என்றழைக்கப்பட்டது. போன்று ஏரிக்கீழ், பேரேரிக்கீழ், தடாகத்தின்கீழ் என்றும் அழைக்கப்பெற்றன.

மழைநீரையும், ஆற்றுநீரையும் தேக்கிவைத்து நீர்ப் பாசனத்திற்குப் பயன்படுத்தும் நீர்நிலைகளின் அடிப்படையில் நாட்டுப்பிரிவுகள் வகுக்கப்பெற்று வழங்கப்பெறும் பண்டைய வழக்கம் தமிழ்நாட்டின வடபகுதியான தொண்டைநாட்டுப் பகுதிகளிலும் தென்பகுதியான பாண்டிய நாட்டிலுமே பெருவழக்கில் இருந்திருக்கின்றது. இவ்வகையான போக்கு கொங்குநாட்டிலும், சோழநாட்டிலும் அருகியே காணபபடு கிறது. இவற்றில் ஏரிக்கீழ், தடாகத்தின்கீழ், நிலைக்கீழ் என்ற பெயரில் வரும் நாட்டுப்பிரிவுகள் தொண்டை நாட்டி லேயே அதிகமாக உள்ளன. இதே பொருளில் அமைந்த 'குளக்கீழ்' என்றழைக்கப்பெறும் பெயர் வழக்கம் பாண்டிய நாட்டில் மட்டுமே காணப்படுகின்றது. ஏரிக்கீழ் என்ற பெயரில் அமைந்த ஒருநாடு பாண்டிய நாட்டில் இருந்திருக்கின்றது[4]. இதற்குக் காரணம் இம்மாவட்டத்திலுள்ள விளைநிலங்கள் வேளாண்மைக்கு அவ்வப்பகுதியிலிருந்த குளங்களையே (கண் மாய்) நம்பியிருந்தமையேயாகும். இதன் காரணமாகவே குளங்களை நம்பியிருந்த விளைநிலங்களும் அவற்றில் வேளாண்மைத்தொழில் செய்யும் ஊர்க்குடியிருப்புப்பகுதிகளும் அவற்றின் பெயரால் அந்நீர்நிலைகளின் கீழ் என்று அழைக் கப்பெற்றன.

கொங்குநாட்டில் இது போன்ற சிறுநாட்டுப்பிரிவுகளின் பெயர்கள் காணப்படாமைக்குக் காரணம் அப்பகுதியிலிருந்த பெரும்பாலான நிலங்கள் மலையும் மலைசார்ந்த குறிஞ்சி நிலப்பகுதிகளையும் காடும் காடுசார்ந்த முல்லைநிலப் பகுதிகளையும் கொண்டு விளங்கியமையே ஆகும். மேலும்

இங்கு வேளாண்மைத் தொழிலைவிட வேட்டை யாடுவதும் ஆடு, மாடு வளர்ப்பதும் முக்கிய தொழில்களாக விளங்கியிருக்கின்றன இப்பகுதியில அமைந்த ஆற்றின் போக்கில் மட்டும் வேளாண்மைத் தொழில் செய்யப்பட்டது. இதனால் இங்கு ஆற்றின்போக்கைக் கொண்டு 'கரைவழி' என்று நாட்டுப் பிரிவுகள் வகுக்கப்பெறுவது வழக்கமாக உள்ளது.

சோழநாட்டைப் பொறுத்தமட்டில் முழுக்க முழுக்க வளமான ஆறுகளையும் அவற்றிலிருந்து பிரிந்த ஆற்றுக் கால்களையும் கொண்டு நீரைக் குளங்களில் தேக்கி வைத்து பாசனம் செய்யாமல் நேரடியாக வேளாண்மைக்குப் பாசன நீர் பயன்படுத்தப்பட்டமையால் இங்கு ஏரிகளில் நீரைத் தேக்கி பாசனம் செய்யும் முறை இல்லாது போயிற்று இதனால் நீர்நிலைகளை வைத்து நாட்டுப்பிரிவுகள் சோழநாட்டில் வகுக்கப் பெறவில்லை. ஆற்றின் போக்கை ஒட்டிய நீர்ப்பாசனத்தின் அடிப்படையிலும் சோழநாட்டில் நாடுகள் வகுக்கப் பெற்றன இங்கு குறிப்பாக கூற்றம் என்ற பெயரில் வழங்கும் சிறுநிலப்பரப்பைக் குறிக்கும் நாட்டுப்பிரிவுகள் தொண்டை நாடு, பாண்டியநாடு, கொங்குநாடு போன்ற பகுதிகளைக் காட்டிலும் அதிகமாகக் காணப்படுகின்றன. பல ஆறுகளும் ஏராளமான ஆற்றுக்கால்களும் ஓடி கூறுபட்ட நிலப்பகுதிகளை அதிகமாகக் கொண்டு விளங்குவதால் சோழ நாட்டில் கூற்றம் என்ற பெயரில் அமைந்த நாட்டுப் பிரிவுகள் அதிகமாகக் காணப்படுகின்றன இதனாலேயே தமிழ் நாட்டில் வளமான ஆறுகள் பாயும் ஆற்றையொட்டிய பகுதியிலேயே பெருபாலும் கூற்றம் என்ற பெயரிலமைந்த நாட்டு பிரிவுகள் இருந்திருக்கின்றன கூறுபடுத்தப்பட்டபகுதி கூற்றம் என்று கொள்வதைவிட ஆறுகளாலும், ஆற்றுக்கால்களாலும் கூறுபட்ட நிலப்பகுதியே கூற்றம் என்ற பெயரில் அமைந்த நாட்டுப்பிரிவாக வழங்கப்பெற்றிருக்க வேண்டும் எனத் தோன்றுகின்றது. இதே போன்று கடல் நீரால் அறுக்கப்பட்டு

துண்டுபட்ட கடற்கரைப்பகுதிகள் தொண்டி என்ற பெயரில் வழங்கப்பெறுகின்றன.

தொண்டைநாட்டில் பாலாறு, செய்யாறு, ஆகியவற்றின் போக்கில் அமைந்திருந்த பலவூர்கள அப்பகுதியில் இருந்த ஏரி, தடாகம், நிலை எனறழைக்கப்பெற்ற நீர்நிலைகளைச் சார்ந்த நாட்டுப்பிரிவுகள் இருந்துள்ளன. இவை பின்வருமாறு பெயரிடப்பெற்று அழைக்கப் பெற்றுள்ளன.

1 ஏரிக்கீழ்நாடு
2. கோனேரிக்கீழ்நாடு
3. சித்திரமேகத்தடாகத்தின்கீழ்
4. அரைசூர்நிலைக்கீழ்
5. ஆரணிநிலைக்கீழ்
6. பெரும்பேடுநிலைகீழ்

மகேந்திரவாடி என்ற ஊர மகேந்திரபல்லவன் காலத்தில் அவனது பெயரில் அமைந்த மகேந்திரதடாகத்தினைச் சார்ந்திருந்தது என்று அங்குள்ள கல்வெட்டு தெரிவிக்கிறது.[5]

தொண்டை நாடும் பாண்டியநாடும் இவ்வகையில் ஒரே வகையான சூழ்நிலையைப் பெற்றிருந்த நாடுகளாக விளங்கியிருந்த போதிலும் நீர்நிலைகளை வைத்து நாட்டுப்பிரிவுகள் வகுக்கப்பெறும் வழக்கம் தொண்டைநாட்டைக் காட்டிலும் பாண்டியநாட்டிலேயே அதிகமாகக் காணப்படுகின்றது. தொண்டைநாட்டிற்குச் சற்று முன்பிருந்தே குளத்தைப் பயன்படுத்தி வேளாண்மைத் தொழில் செய்யும்முறை பாண்டிய நாட்டில் தொடங்கி சிறந்திருந்தமையே இதற்குக் காரணம் எனலாம். தொண்டைநாட்டில் பல்லவர் வருகைக்குப் பின்னரே குளங்களை வெட்டி வேளாண்மைத் தொழில் செய்வது பெருவழக்கிற்கு வந்துள்ளது. இதனைப் பல்லவர் கல்வெட்டுக்களும் அவர்கள் பெயரால் எடுக்கப்பெற்ற ஏரிகளும் உணர்த்துகின்றன. பாண்டியநாட்டின் சிறப்புதன்மை பற்றிக் குறிப்பிடும் கோவூர்கிழாரின் புறநானூற்றுப் பாடல் ஒன்று

பாண்டியநாட்டை 'ஏரினைக் கொண்டு வாழ்வு நடத்தும் உழவர்களின் மனைவியர் குளக்கீழ் விளைந்த வெண் நெல்லைப் பிறருக்கு அள்ளித்தருவதால் அதனைப் பெற்றவர்கள் மகிழ்வோடு செல்லும் தென்னவன் நாடு' என்று குறிப்பிடுவது இக்கருத்திற்கு வலிவூட்டுகின்றது.

ஏரின் வாழ்நர் பேரில் அரிவையர்
குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்
முகந்தனர் கொடுப்ப உகுந்தனர் பெயரும்
தென்னன் பொருப்பன் நல்நாடு — புறம் 33

குளத்தால் நீர்ப்பாசனம் செய்து வேளாண்மைத் தொழில் செய்முறை பழந்தமிழிலக்கிய காலத்திலிருந்தே பாண்டிய நாட்டில் இருந்தது என்பதற்கு இப்பாடல் சான்றாக விளங்குகின்றது.

பாண்டியநாட்டில் குளக்கீழ் பேரேரிக்கீழ் என்ற நாட்டுப் பிரிவுகள் அதன் வடபகுதிகளிலேயே குறிப்பாக இன்றைய மதுரைமாவட்டம், பசும்பொன் முத்துராமலிங்க மாவட்டம் ஆகியவற்றில் வைகையாறு பாயும் பகுதிகளிலும் திருப்பத்தூர் வட்டத்திலும் குண்டாறு, பாலாறு பாயும் பகுதிகளிலும் மேலும் வைப்பாற்றிற்கும் வைகையாற்றிற்கும் இடைப்பட்ட மதுராந்தக வள்நாடு என்றழைக்கப்பெற்ற பகுதியில் சில இடங்களிலும் அதிகம் காணப்படுகின்றன. பாண்டியநாட்டின் தென்பகுதியில் இவை அருகிக் காணப்படுவதற்குக் காரணம் தென்பாண்டியநாட்டில் பாயும் தாமிரபரணி போன்ற ஆறு களில் பலநேரங்களில், நீர்பெருகிவந்து அவற்றின் கரையில் அமைந்த ஊர்ப்பகுதிகள் ஆற்றுப்பாசனத்தால் செழித்தமையே இதற்குக் காரணம் எனலாம். இதன் காரணமாகவே ஸ்ரீவைகுண்டம், திருச்செந்தூர் முதலிய தாமிரபரணி ஆற்றை யொட்டிய பகுதிகளிலும் நாட்டாறு பாயும் நாங்குனேரி வட்டத்துப் பகுதிகளிலும் அவற்றின் கரைப்பகுதிகளில்

அமைந்த ஊர்ப்பகுதிகளை அடக்கிய நாடுகள் முற்காலப் பாண்டியரின் முயற்சியால் பாசனவளம்பெற்று வேளாண்மை வளம் பெருகியமையால் 'வளநாடு' என்ற அடைமொழி கொடுத்து வழங்கப் பெற்றன. அவர்கள் பெயரால் பாண்டி மார்த்தாண்ட வளநாடு, திருவழுதி வளநாடு, அமிதகுணவள நாடு, பராந்தக வளநாடு, ஸ்ரீவல்லப வளநாடு, வைகுந்த வளநாடு என்று அழைக்கப்பெற்றிருக்கின்றன[6] இவ்வகை யான போக்கு மானாமதுரையிலிருந்து இராமநாதபுரம் நோக்கிச் செல்லும் வைகையாற்றுப் பகுதிகளிலும அருகிய அளவில் காணப்படுகின்றது. இப்பகுதியில் அமைந்த சில நாடுகள் மானவீர வளநாடு, மகிமாகர வளநாடு, வரகுண வளநாடு என்றழைக்கப்பட்டுள்ளன.[7]

வைகையாறு மதுரைமாவட்டத்தில் திருவேடகம் மேலக் கால், துவரிமான் என்ற ஊர்களைக் கடந்து மதுரையாநகர் வந்து அங்கிருந்து பழைய இராமநாதபுர மாவட்டத்தில் நுழைந்து சிலைமான், மணலூர் திருப்புவனம், திருப்பாச்சேத்தி முதலிய ஊர்களைத் தாண்டி மானாமதுரை நோக்கிச் செல் கிறது இவ்வழியில் அமைந்திருந்த ஊர்களின் இருபுறமும் அமைந்த பலநாடுகள் ஆங்காங்கே அமைந்திருந்த குளங் களின் (ஏரிகள்) பெயரால் 'குளக்கீழ்' என்ற பெயரிடப்பெற்று பின்வருமாறு அழைக்கப்பெற்றுள்ளன.

1 வீரநாராயண குளக்கீழ் 5. இராசசிங்க குளக்கீழ்
2. மாடக் குளக்கீழ் 6. அழகியபாண்டிய குளக்கீழ்
3 வேலூர் குளக்கீழ் 7. குன்றத்தூர் குளக்கீழ்
4. மணலூர் குளக்கீழ்

இவற்றில் முதல் ஆறுநாடுகள் மேலக்காலையடுத்து கொடி மங்கலம் என்ற ஊரிலிருந்து வைகையாற்றின் தென்புறம வரிசையாக ஒன்றையடுத்து ஒன்றாக திருப்பாச்சேத்தி என்ற

ஊர்வரை அமைந்திருந்தன. குன்றத்தூர் குளக்கீழ் மட்டும் வைகையாற்றின் வடபுறம் மதுரைமாவட்டத்தில் வரிச்சியூர் என்ற ஊருக்கு அருகிலுள்ள குன்னத்தூர் பகுதியாக விளங்கி யுள்ளது. இந்நாட்டில் அமைந்திந்த ஊர்களில் ஒன்றாக விக்கிரமபாண்டிய நல்லூர் விளங்கியிருக்கின்றது[8].

வீரநாராயண குளக்கீழ் என்பது நாகமலையின் தென்புறம் அமைந்துள்ள கொங்கர் புளியங்குளம் வடபழஞ்சி ஆகிய பகுதி களைக் கொண்டதாகும். கொங்கர் புளியங்குளம் கல்வெட்டில் 'வீரநாராயணகுளக்கீழ் புளிங்குன்றூரான சுந்தரபாண்டியபுரம்' என்று[4] குறிப்பிடப்படுகின்றது.[9] வீரநாராயணன் என்பது தளவாய்புரம் செப்பேட்டை வெளியிட்ட பராந்தக வீர நாராயணன் என்ற முற்காலப் பாண்டியனுக்குரிய பெயராகும் மாடக்குளக்கீழ் என்பது வைகையாற்றின் தென்புறம் மதுரை யைச்சூழ்ந்த பகுதிகளாகும். இவற்றில் அடங்கிய ஊர்களாக கொடிமங்கலம், வாமதேவமங்கலம். கோனேரி, சிறுவெண் குன்றம், திருவுருவகம், மதுரைமாநகர் ஆகியவை இருந் துள்ளன [10] வேலூர்குளக்கீழ் என்பது சிலைமானுக்கு அருகி லுள்ள கீழடி, கொந்தகை போன்ற ஊர்ப்பகுதிகளைக் கொண்ட மைந்த பகுதியாகும். கீழடியுள்ள பிற்காலப்பாண்டியர் கல் வெட்டுக்களில் அவ்வூர்ப் பகுதிகள் 'வேலூர்குளக்கீழ் குந்தி தேவிச் சதுர்வேதி மங்கலம்' என்று குறிப்பிடப்படுகின்றது.[11] மணலூர்குளக்கீழ் என்பது சிலைமானையடுத்துள்ள இன்றைய மணலூர் பகுதியாகும், இரணசிங்கமங்கலம இதிலமைந்த ஊராக விளங்கியுள்ளது [12] மணலூரையடுத்துள்ள திருப்பு வனம் பகுதி இராசசிங்கக்குளக்கீழ் என்றழைக்கப்பட்டுள்ளது இதிலமைந்த ஊர்களாக அம்பலத்தாடி நல்லூர், சூழல், குறிச்சி, திருப்புவனம், இராசேந்திரம் ஆகியவை விளங்கியிருக்கின்றன. [13] இராசசிங்கன் என்பவன்சின்னமனூர் செப்பேட்டை வெளி யிட்ட பாண்டியமன்னன் இராசசிங்கனின் பெயராகும் அழகிய பாண்டியகுளக்கீழ் என்பது திருப்புவனத்தை அடுத்துள்ள

திருப்பாச்சேத்திக்கு அருகிலுள்ள வெள்ளிக்குறிச்சிப் பகுதியாகும். இதமைந்த ஊர்களாக சிறுகுளந்தூர் சூரக்குடி, மாறனூர், நெல்குப்பை, வெள்ளூர்குறிச்சி ஆகியவை இருந்துள்ளன.[14] அழகியபாண்டியன் எபைது முதற்குலோத்துங்கன் காலத்தில் வாழ்ந்த பாண்டிய மன்னர்களில் ஒருவனுக்குரிய பெயராகும், இப்பெயரால் அமைந்த அழகியபாண்டியன்கூடம் ஒன்று மதுரையிலிருந்த பாண்டியமன்னர் அரண்மனையில் இருந்திருக்கின்றது. இதிலிருந்து பல அரச ஆணைகளை இடைக்காலப் பாண்டிய மன்னர்கள் ஆளித்திருக்கின்றனர்.[15]

பாண்டியநாட்டில் சோழராட்சியின் போது பெயரிடப் பெற்ற முடிகொண்ட சோழப்பேரேரிக்கீழ் எனற பகுதி திருப்பத்தூர் வட்டத்திலுள்ள மட்டியூர், சித்தர்விளாகம் முதலிய ஊர்களை அடக்கிய பகுதியாகும்.[16] இதேபோன்று சோழபாண்டியர் ஆட்சிக்காலத்தில பெயரிடப்பெற்ற 'சோழ பாண்டியன் குளக்கீழ்' என்ற பகுதி பாண்டியநாட்டில் வெள்ளி என்ற ஊர்ப்பகுதியில் இருந்துள்ளது[17] மதுராந்தக வள நாட்டில் குறிச்சி என்ற ஊர்ப்பகுதியை அடக்கி இராசேந்திர சோழ குளக்கீழ் விளங்கியிருக்கினறது[18] சோழ கேரளக் குளக் கீழ்[19] என்பது வைகையாற்றுக்கு வடக்கேயிருநத இராசேநதிர சோழ வளநாட்டில் இருந்திருக்கிறது. கோக்கிழான் குளக்கீழ்[20] என்பதும் சோழமன்னரது தேவியின பெயரால் பெயர்பெற்ற குளக்கீழாக பாண்டியநாட்டில் இருந்திருக்கின்றது. பாண்டிய நாட்டு அல்லூர் பகுதியில் அல்லூர் குளக்கீழ் என்ற பகுதி இருந்திருக்கின்றது[21]

குளக்கீழ், ஏரிக்கீழ் தடாகத்தின்கீழ், நிலைக்கீழ் என்று வரும் சொற்களில் 'கீழ்' என்பது எதனைக் குறித்தது என் பதில் இதுவரை தெளிவான முடிவு வெளியிடப்பெறவில்லை. இச்சொற்களில் வரும் 'கீழ்' என்பது அக்குளத்தின கீழ் அமைந்த பலவூர்களை உள்ளடக்கிய நாட்டுப்பகுதியைக்

குறிககவே வழங்கியிருக்க வேண்டும் என்பதை தொண்டை நாட்டில் அமைந்த இருநாடுகளுக்கு ஏரிக்கீழ்நாடு, கோனேரி கீழ்நாடு என்றே பெயர் வழங்கியிருப்பது தெளிவாக்குகின்றது. ஆனால் இதனைத் திசையை மட்டுமே குறிக்கும் சொல்லாகக் கொண்டு ஒரு குறிப்பிட்ட நீர்நிலையின் கீழ்திசையிலுள்ள ஊரை மட்டுமே குறிக்க வழங்கியது என்று சொல்வது பொருத்தமற்றது எனத் தோன்றுகின்றது. இச்சொல் ஒருகுறிப்பிட்ட குளத்தின் கீழ்திசையில அமைந்த ஊர்களை மட்டுமல்லாமல் அக்குளத்தின் மேல்புறம் வடமேற் கேயும் அமைந்த பகுதிகளையும் அக்குளத்திற்கு ஆற்றிலிருந்து நீரைக்கொண்டு வரும் வாய்க்கால் வழியிலமைந்த பகுதிக ளையும் குறிக்கும் சொல்லாகவும் விளங்கியிருக்கின்றது. இதனை பாண்டியநாட்டிலுள்ள சில குளக்கீழ் நாட்டுப் பகுதி களைக் களஆராய்ச்சி செய்ததன் மூலம் தெரிய வந்தது.

'மாடக்குளக்கீழ்' என்ற நாட்டுப்பகுதியில் அடங்கியிருந்த ஊர்ப்பகுதிகள் மேலேகண்டவாறு அமைந்திருந்தன. இதில் மதுரைமாநகர், சிறுவெண்குன்றம் (பசுமலை) போன்ற பகுதிகள் மாடக்குளத்தின் வடகிழக்கேயும் தென்கிழக்கேயும்' உள்ளன. திருவுருவகம் என்பது மாடக்குளத்தின் மேல்திசை யிலுள்ள பகுதியாகும். இன்று அமணமலை என்ற பெயரில் விளங்குகின்றது. கொடிமங்கலம். கோனேரி போன்ற ஊர்ப்பகுதிகள் மாடக்குளத்திற்குப் பல கிலோமீட்டர் தொலைவில் வைகையாற்றின் தென்கரையிலுள்ள பகுதிக ளாகும். ஆனால் இவை மாடக்குளத்திற்கு வைகை யாற்றிலிருந்து நீரைக்கொணடு வரும் ஆற்றுக்கால் பகுதியில் அமைந்திருந்தன. இதிலிருந்து 'கீழ்' என்ற சொல் ஒரு குறிப் பிட்ட குளத்தின் பிற திசைகளிலும் அக்குளத்திற்கு நீரைத் தரும் வாய்க்கால் வழியில் வேறுதிசையில் அமைந்த ஊர்ப் பகுதிகளையும் உள்ளடக்கிக் குறிக்கும் சொலலாக கல்வெட் டுக்களில் ஆளப்பட்டிருக்கின்றது ; இது வெறும் திசையை

மட்டும் குறிக்காது அக்குளத்தின் பாசனத்தோடு தொடர்புடைய வகையில் ஆளப்பட்ட சொல்லாகவே இருக்க வேண்டும் என்று தோன்றுகின்றது. இது ஒரு குறிப்பிட்ட குளத்தின் மடைகளின் மூலம் நேரடியாகப் பாசனத்திற்கு உட்பட்ட ஊர்களையும் அக்குளத்திற்கு நீர் வரும் வாய்க்கால் வழியில் அமைந்து பாசனத்திற்குட்பட்ட ஊர்களையும் குறிக்கும் சொல்லாகவே எடுத்தாளப்பட்டிருக்கின்றது. சுருங்கச்சொன்னால் இச்சொல் ஒரு குறிப்பிட்ட குளத்தால் நீர்ப்பாசனம் பெறும் பகுதிகளையும் அக்குளத்திற்கு நீரைத்தரும் வாய்க்கால் வழியில் அமைந்து பாசனம் பெறும் ஊர்களையும் குறிக்கவே விளங்கியிருக்க வேண்டும் என்று கூறலாம்

இருந்தபோதிலும் கிழக்குத் திசையைக் குறிக்கும் 'கீழ்' என்ற சொல்லை தமிழ்நாட்டில் பல்வேறு இடங்களிலுமுள்ள குளக்கீழ் நாடுகளில் அக்காலத்தில் பயன்படுத்தியதன் காரணம தமிழ்நாட்டில ஆறுகளும் அவற்றிலிருந்து நீரைப் பெறும் நீர்நிலைகளின் கரையின் அமைப்பே ஆகும். தமிழகத்தின் நில அமைப்பு மேல்திசையில் உயர்ந்தும் கீழ்திசையில் தாழ்ந்தும் அமைந்துள்ளமையால் தமிழ்நாட்டு ஆறுகள் மேல்புறமிருந்து கீழ்த்திசைநோக்கியே பாய்ந்து கடலில் கலக்கின்றன. இவ்வாறுகளின் வழியில் அமைந்து நீரைத்தாங்கி நிற்கும் குளங்களின் கரைகளும் ஏறக்குறைய வடக்கு தெற்காகவே அமைந்து அவற்றின் தாழ்ந்துள்ள கீழ்புறப்பகுதி நோக்கியே மடைகளின் மூலம் நீரை அளித்துவருகின்றன. பெரும்பாலும் அக்குளத்தின் கீழ்த்திசை நோக்கியே பாசன நீர் பாய்வதால் அக்குளத்தால் பாசனம்பெறும் பெரும்பாலான பகுதிகளைக் குறிக்கின்ற வகையில் 'கீழ்' என்ற சொல் ஆளப்பட்டிருக்கின்றது. பிற்காலத்தில் நிலவுடமை வளர்ச்சியடைந்தபோது குளங்கள் பெரிதாக்கப் பெற்று ஆற்றிலிருந்து நீர் குளத்திற்கு எடுத்துவரப்பெற்று அக்குளத்தின பக்க

வாட்டிலும் உள்ள நிலங்களுக்கும் பயன்படும் வகையில் நீர்ப் பாசனத்தின் எல்லைகள் விரிவடைந்தன. அப்போது 'கீழ்' என்ற சொல் முன்னர் முடிவு செய்தவாறு திசையைமட்டும் குறிக்காது பரந்துபட்ட பொருளில் பரந்துபட்ட பாசனப் பரப்பைக் குறிக்கும் சொல்லாக ஆளப்பட்டிருக்கின்றது.

தொடக்ககாலத்தில் 'குளக்கீழ்' என்ற சொல் ஒரு சிறு நாட்டுப் பிரிவைக் குறிக்காது அக்குளத்தால் நீர்ப்பாசனம் பெறும் நிலத்தைமட்டும் குறிக்கும் சொல்லாக விளங்கியிருக் கின்றது. இதனை புறம் - 33 ஆம் பாடல் உணர்த்துகின்றது. குளம் சிறியதாக இருந்து அக்குளம ஒரு ஊரின் நிலங்களுக்கு மட்டும் நீரப்பாசனம் அளிந்துவந்தபோது பாசனத்திற்கு அக் குளத்தினைச் சார்ந்திருந்த ஊர் என்ற முறையில் அழைக் கப்பெற்றது [22] (எ. கா. சேந்தனேரிக் கட்டிக்கள்ளூர்) அதன் பிறகு நிலவுடமை வளர்ச்சியடைந்த காலத்தில் அக்குளத் தோடு தொடர்பு கொண்டு பாசனத்தைப்பெறும் சிறுநிலப் பரப்பைக் குறிக்கும நாட்டுப்பிரிவு என்ற பொருளில் இது மாறி விளங்குகினறது. எனவே குளக்கீழ் என்ற இந்நாடு தோன்றுவதற்கு நீர்ப்பாசனமும் அதனை ஒட்டிய வேளாண் மையுமே அடிப்படைக்காரணங்களாக இருந்திருக்கின்றன எனலாம்.

**அடிக்குறிப்புக்கள் :**

1. Y. Subarayalu., "Some Reflections on Pandi-Mandalam c. 700-300" DAMILICA, Vol. II. part. 3. Ed. R. Nagaswamy State Dept. of Arthaeology Madras (1973) pp. 27-37
2. Ibid.
3. அகநானூறு. பா 236
4. S.I.I. XIV. Nos. 260,261.
5. E. I. IV. pp. 152-153,

6. S I.I. XIV. Nos. 68, 16A, 19.
7. S.I.I. XIV. Nos. 145, 119
8. ARE. 226 of. 1964
9. S.I.I. IV. No 372
10. ARE. 272 of 1941/42 ; S.I.I. XIV, No. 86 ; ARE. 66 of 1916; S.I.I. VI No. 372
11. ARE. 447 of 1906.
12. E.I. 25. p. 25.
13. S.I.I. III, No. 423, 206, S.I.I. XIV. 405, 160 ; E.I. 25 p, 11 ; Ibid p. 25.
14. E.I. 25, p. 11.
15. S.I.J. XIV. No. 206.
16. S.I.I XIV. 260, 261.
17. S.I.I. XIV, No. 194.
18. Ibid, No. 157.
19. Ibid. 194.
20 S.I.I. VII No. 506.
21. S I.I. XVII No. 522
22. தென்கரைக் கல்வெட்டு.

---

**நிவந்தக்காரர் குடியிருப்பு**

திருவாரூரில் கோயில் பணியாளர்களுக்கு விக்கிரமசோழன் காலத்தில் கோயிலை ஒட்டிக் குடியிருப்புப் பகுதி ஒதுக்கப்பட்டது. ஆனால் சிறிது காலத்தில் செட்டிகளாலும், செக்காராலும் ஆக்கிரமிக்கப்பட்டு கடைகள் அமைந்தன. பணியாளர்கள் ஊரில் பல இடங்களில் குடியேறிவிட்டனர். இராஜாதிராஜன் காலத்தில் (கி பி. 1167) அவர்கள் அரசனிடம் "நிவந்தக்காரர் பல இடங்களிலும் குடியிருக்கிறார் திருவீதியிலே ஒரு சேரமனையெடுத்து இருக்க" வேண்டினர். ஆணைபிறப்பிக்கப்பட்டு மீண்டும் குடியிருப்பு உண்டாகியது. செட்டிகளுக்கும் செக்காருக்குப் தனித்தனி குடியிருப்புகள் உண்டாக்கப்பட்டன. (S.I.I. vol XVII 588)

## முகவுரை

சு. இராசகோபால் எம்.ஏ; டி.இ ஏ;
மதுரை

தமிழகத்தில் சுமார் 75 ஆண்டுகளுக்கு முன் 'முறி' என்ற சொல் அன்றாடப் பொருளாதார வாழ்வில் நிறைய வழங்கிய சொல்லாகும். இன்று அது வழக்கொழிந்து ஆய்வுக்குரியதாகி விட்டது. 'பத்திரம்' என்ற சொல் இன்று முறியின் இடத்தில் வழங்கி வருகின்றது. சென்ற நூற்றாண்டில் ஒருவருக்கு ஒருவர் கொடுத்தல், வாங்குதல், விற்றல் போன்ற ஆவணப பதிவுகளைச் செய்து அவற்றை 'முறி' என்றே அழைத்தனர்.

முறி என்பதற்குக் கொழுந்தாக உள்ள இலை என்று பொருள் உண்டு. தொல்காப்பியம் இதனை "இலையே, முறியே, தளிரே, தோடே" என்ற சூத்திரத்தின் மூலம் (தொல் பொருள். 642) உணர்த்துகின்றது. பனை ஓலையில் குருத்தாக உள்ளதையே ஏடுகளாகப் பயன்படுத்தி ஆவணங்கள் எழுதப்பட்டதால் கொழுந்து இலையில் எழுதிய அவற்றை 'முறி' என்றே அழைக்கும் மரபு உண்டாகியிருக்க வேண்டும்.

ஆவணங்களை முறி என்று அழைக்கும் மரபு செனற நூற்றாணடில் இருந்தபோதிலும் இது பன்னெடுங்காலமாகத் தமிழகத்தில் வழங்கித் தொடர்ந்து வந்த மரபுதான். கல்வெட்டுகளிலும், இலக்கியங்களிலும் ஆவணத்தை முறி என்று அழைக்கும் மரபு இருந்ததைக் காண்கிறோம்.

மதுரையை அடுத்த வெள்ளாளப்பட்டியிலிருந்து பல ஓலைச்சுவடிகள் பெறப்பட்டு தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை சேலத்தில் நடத்திய கருத்தரங்கில் திரு. பொ. இராசேந்திரன் அவர்களால் ஒரு கட்டுரை வாசிக்கப்

பட்டது. அவ்வேடுகள் அவை கொண்டுள்ள வாசகங்களால் **நஞ்சைவிலை முறி, குடிவிலை சாதனமுறி, ஒத்தி முறி, நில ஒத்திமுறி, கடன்முறி, காவல் ஒத்திமுறி, பரைவிலைசாதன முறி** என்று பலவாறு அழைக்கப்பட்டுள்ளன. பொதுவாகக் கல்வெட்டுகளில் பிரமாணம், ஆவணம், தீட்டு என்று பயன் படுத்தப்பட்ட இடங்களுக்கு ஈடான இடங்களில் எல்லாம் முறி என்ற சொல் இச்சுவடிகளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**பற்றுமுறி :** காளையார் கோயில் கல்வெட்டு ஒன்று (S.I.I. VIII 174) பற்று முறி ஒன்றினைக் குறிக்கின்றது. அக் கல்வெட்டில் பற்று முறி என்ற சொல் பின்வருமாறு எடுத்தா ளப்படுகிறது "தேவகன்மிகளுக்கு இக்கூற்றத்து சேற்றூர் ஊருக்குச் சமைந்த ஊரோம் **பற்று முறி** குடுத்த பரிசாவது", "இப்பணம் மூவாயிரத்து (எண்ணூறும் கைக் கொண்டு) **பற்று முறி** குடுத்தோம் ஊர்க்குச் சமைந்த ஊரோம் இந்நாயனார் கோயில் ஆதிசண்டேசுர நாயனார் தேவகன்மிகளுக்கு."

ஆளுடையான் பெருங்கருணையாளன் என்பவன் சுந்தரபாண்டியனது 10வது ஆண்டில், திருக்கானப்பேர் இறைவனுக்குத் தன்பேரால் ஒருவழிபாட்டை ஏற்படுத்தி னான். அவ்வழிபாட்டுச் செலவிற்காக சோலை ஏரி ஏர்பல் என்ற பகுதியைத் தானமாகத் தந்தான். அப்பகுதிக்கான வரிவகைகளையும் நீக்கி இறையிலியாகவும் செய்தான். இப் பகுதி சேற்றூர் ஊரார் கண்காணிப்பில் இருந்தது. எனவே அவர்கள் இப்பகுதிக்கு 3200 பணம் விலை நிச்சயித்தனர். இப்பகுதியின் 4 எல்லைகளையும் அளந்து கோயில் நிலமென அறிய சூலக்கற்கள் நாட்டினர் அளந்ததின் பிறகு விலை 3188 பணம் வரவே அதனை ஆளுடையான் பெருங் கருணையாளனிடம் பெற்றுக் கொண்டனர். மேலும் இந்நிலப் பகுதியின் வரிவசூலிக்கும் உரிமை பெற்றிருந்த காராளர்கள்

சிலர் இதுவரை பற்றியிருந்த 611 பணத்தையும் பெற்றுக் கொண்டனர் ஆக 3799 பணத்தை 3800 பணம என்று கொண்டு பற்று முறி எழுதிக் கொடுத்தனர்.

இந்நிலங்கள் வரியில்லாது கோயிலுக்குக் கொடுக்கப் பட்டவை ஆதலால் ஆளுடையானுக்குப் பற்று முறி எழுதப் படாது கோயிலுக்கு எழுதப்பட்டது அனறைய தமிழகக் கோயில் மாபுகளுக்கு ஏற்ப இறைவன் பெயரிலில்லாது ஆதிசண்டேசுவரர் பெயருக்குப் பற்று முறி எழுதப்பட்டது இங்கு பற்று முறி என்பது பணத்தைப் பற்றிக் கொண்டு எழுதிக் கொடுத்ததால் பற்று முறி என அழைக்கப்படுகிறது எனக் கருதலாம் முறி என்பது ஆவணம் என்ற பொரு ளிலேயே இங்கு பயன்படுத்தப்பட்டுள்ளது ஒலையில் எழுதப் பட்ட முறி பின் கல்லிலும் செப்பிலும் வெட்டப்பட்டது.

***சிறுமுறி*** : சிறுமுறி என்பது கைச்சீட்டு என்ற பொரு ளில் பயன்படுத்தப்பட்டதாகத் தமிழ்ப்பேரகராதி பொருள் தருகிறது. "பரமபதம் தங்கள் சிறுமுறிப்படி செல்லும்" என்ற நம்பிள்ளையின் ஈடு முப்பத்தாறாயிரப்படி வரிகளால் அதற்கு விளக்கமும் தரப்பட்டுள்ளது.

புதுக்கோட்டை மாவட்டம் ஆதனூரில் உள்ள பராக்கிரம பாண்டியனின் 8 + 53 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் சிறுமுறி என்ற சொல்லாட்சி காணப்படுகிறது (I.P.S. 623) இக்கல்வெட்டைப் பதிப்பித்தவர்கள், 'சறுமுறி' என்று பதிப் பித்து 'சறுவமான்யமுறி'யாக இருக்க வேண்டுமென அடிக் குறிப்புத் தந்துள்ளனர் கல்வெட்டுப்பகுதி பின்வருமாறுள் ளது. "திருமேனி அழகியார் விசையாலய தேவற்குத் திருவாய் மொழித்தருளினபடிக்கு ***சறுமுறி***." இதே கல்வெட்டில் மற் றொரு பகுதி, "நாநா கோத்திரத்துச் சதுர்வேதிப் பேற்குத்

தாங் **கையோலை** குடுத்த பேர் பன்னிரண்டுச்சும் காணி யாட்சியாக ஒரு ஊர் தரவேணுமென்று சொல்லுகையில்.'' இவ்விரு பகுதிகளில் வரும் *சிறுமுறி*, கையோலை ஆகிய வற்றை நோக்கும்போது தமிழ்ப்பேரகராதி குறிப்பிடும் பொருள் இவற்றின் மூலம் ஓரளவு தெளிவடைகிறது.

மன்னார்குடி இராஜராஜன் III கல்வெட்டில் (S.I.I. Vol VI 50) *சிறுமுறி* என்ற சொல்லாட்சி *கீழ்க்கண்டவாறு இரண்டிடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது* ''மக்கட் சேவகப் பேற்றுக்குப் பரப்பு ஒரு மாவுக்கு குறுணியர்கத் தண்டுகிற நெல்லு மக்கட் சேவகர் கொண்டு ***சிறுமுறி*** யெடுத்து தேவை செல்வதாகவும் ***சிறுமுறி*** காசென .. ... .. ஒருகாசும் *நாழி அரிசியும் தண்டிக் கடவ.*'' இங்கு *சிறுமுறி* என்பது தமிழ்ப்பேரகராதி குறிப்பிடும் பொருளில் பயன்படுத்தப்பட் டுள்ளதா என்பது தெளிவில்லை. பின் ஆய்வில் தெளிவு றக்கூடும்.

***முறியன் — முறிச்சி***: இச்சொற்களுக்கு ஆண் அடிமை பெண்அடிமை என்று தமிழ்ப்பேரகராதி வழக்குச் சொற்களி லிருந்து பொருள் தந்துள்ளது. *திருவாசகத்தில் மாணிக்க* வாசகர் ''ஆண்டபிரான குணம் பரவி முறிசெய்து நம்மை'' என்றவரியால் அடிமையாதலுக்கு முறிசெய்தல் என்ற சொல் லாட்சியைக் கையாண்டுள்ளார் (திருவாசகம் 13-8). தாயு மானவர் பாடலிலும் 'மோகவாசை முறியிட்ட பெட்டியை' என்றவரி மூலம் ஆசையை அடிமைப்படுத்துவது முறியிடுதல் என்ற சொல்லால் வெளிப்படுத்தப்பட்டுள்ளதை (தாயு சிற்ப 1) அறியமுடிகிறது.

வெள்ளாளப்பட்டியில் கிடைத்த ஒரு ஏடு 'பறைவிலை சாதன முறி' என்ற ஒரு ஆவணத்தைக் குறிக்கிறது. இதில் பறையர் விலைக்கு விற்கப்பட்டது தொடர்பான செய்திகள்

உள்ளன இங்கு முறி என்ற சொல் அடிமை என்ற கருத்தில் கையாளப்படவில்லை ஆவணம் என்ற கருத்திலேயே கையாளப்பட்டுள்ளது.

கல்வெட்டுகளில், இதுவரை அறிந்தவரை, முறி என்ற சொல் அடிமைக்குப் பயன்பட்டதாகத் தெரியவில்லை, கல்வெட்டுகளில் ஆள் ஓலை, ஆள் விலைப்பிரமாணம் என்ற சொற்களே அடிமை தொடர்பான ஆவணங்களுக்குப் பயன் பட்டுள்ளன சேக்கிழார் பெரிய புராணத்தில் சுந்தரமூர்த்தி நாயனாரை அடிமையெனக்காட்ட வந்த இறைவன் வைத்திருந்த ஓலையை ஆள்ஓலை என்றே குறிக்கின்றார் *

முறிகளாகிய ஆவணங்கள் வைக்கும் பெட்டிகள் முறிப் பெட்டி என்று அழைக்கப்படடன. ஆவணம், பத்திரம், பிரமாணம் என்பனவற்றிற்கு ஈடாகப் பயன்படுத்தப்பட்ட முறி என்ற சொல் அவற்றோடும் சேர்ந்து முறிப்பத்திரம், முறி சாதனம், முறிச்சீட்டு, முறிப்பட்டையம் என்றும் சென்ற நூற்றாண்டில் வழங்கப் பட்டிருக்கின்றது.

---

* **பார்க்க** : கட்டுரை ஆசிரியரின் 'சோழர்காலத்திய ஆவணப் பதிவு முறைகள்' என்ற கட்டுரை. இராசராசன் 1000 ஆவது ஆண்டு முடிபுனை விழா நூலுக்கான கட்டுரை.

---

**நிலைமைத் தீட்டு - உறுதிப்பத்திரம்**

"இராஜராஜ சம்புவராயர்க்கு ... ... ... இராஜராஜ மூவேந்தரையனும் ... .. இராஜராஜ ஜனநாத மூவேந்தரையனும் .. ... ... செய்த **நிலைமைத்தீட்டின்படியே** இவற்குப் பிழையாதே நிற்கக் கடவோமாகவும் இப்படிக்குப் பிழைத்தோமாகில எங்களோடை(ய) வன்னிமார்க்குச் செருப்புங் கலசப்பானையும் எடுக்கக் கடவோமாகவும்"

— மேலச்சேரி(செஞ்சி) கல்வெட்டு(கி.பி.1191) ]

# மும்முடிச் சோழ போசன்

இல. தியாகராஜன்
எம். ஏ; எம். பில்; பி. எட்; டி. இ. ஏ;
அரசினர் கலைக்கல்லூரி, அரியலூர்.

மாமன்னன் இராஜராஜசோழன் காலத்தில் ஸ்ரீகிருஷ்ணன் இராமன், பழுவூர்நக்கன், மதுராந்தகன் கண்டராதித்தன கிழவன் சூரியன் ஆதித்தன் போன்று பல அதிகாரிகள் அரசியல், சமயம், கலை, இராணுவம் போன்று பல்வேறு துறைகளில் சிறந்த முறையில் விளங்கியிருக்கின்றனர். இவர்களில் இராஜராஜனிடம் நெருக்கமாகவும், அவன் வாழ் நாள் முழுவதும் பல்வேறு பதவிகளை வகித்துச் சிறந்து விளங்கியவன் மும்முடிச் சோழ போசன் என்பவன். இவனைப் பற்றிய சான்றாதாரங்கள் இதுவரை முழுமையாகக் கிடைக்காததால் வரலாற்றறிஞர்கள் இவனைப்பற்றி அதிகம் குறிப்பிடவில்லை. தற்போது கிடைத்துள்ள சான்றாதாரங்களைக் கொண்டு இவனைப் பற்றிய செய்திகள் இங்கு தரப்படுகின்றன.

சோழநாட்டு நித்தவிநோத வளநாட்டுப் பாம்புணிக் கூற்றத்து அரசூர் இவனுடைய ஊர். ஈராயிரவன் பல்லவரயன் என்பது இவனது பெயர். அரசனின் சிறப்புப் பெயரான மும்முடிச் சோழன் என்பதே இவனுக்குச் சிறப்பாக அமைந்து மும்முடிச் சோழ போசன் என இவன் அழைக்கப்பட்டான். இவன் உடையார் ஸ்ரீராஜராஜதேவரின் பெருந்தரத்து அதிகாரியாகவும், ஸ்ரீகாரியம் கடைக்காண்கின்றவனாகவும், திருமந்திர ஓலை நாயகமாகவும், இராஜராஜன் காலத்தில் விளங்கினான். இராஜராஜனுக்குப் பிறகு இராசேந்திர சோழன் காலத்திலும் இவன் தொடர்ந்து சிறந்த அதிகாரியாக விளங்கியுள்ளான்.

**மேநாயகம் செய்வான் :** இவன் வட ஆர்க்காடு மாவட்டம் திருவல்லம் கோயிலில் நடந்த ஊழல்களை விசாரித்ததின் மூலம் இவனை 'மேநாயகம் செய்வான்' என்று அறிகின்றோம்.[1] இராசராச சோழனின் 7வது ஆட்சியாண்டில் இக் கோயிலுக்கு மதுராந்தகன் கண்டராதித்தன் (உத்தம சோழனது மகன்) வருகை தந்தபோது கோயிலில் வழிபாடுகள் ஒழுங்காக நடைபெறவில்லை. கோயிலுக்கு உண்டானவற்றைச் சிவப்பிராமணர்களே அனுபவித்து வந்தனர். இக்குற்றத்தை விசாரித்து சொத்துக்களை மீட்டு, தண்டித்து மீண்டும் வழிபாடுகள் செவ்வனே நிகழ வேண்டியவை செய்யும் பணி மும்முடிச் சோழ போசனுக்கு விடப்பட்டது. ஆளும் கணத்தார் என்ற அமைப்பின் உறுப்பினன் ஒருவனின் மருமகன் சவட்ட சடங்கவி என்பான் தண்டிக்கப்பட்டு அவன் ஏற்ற விளக்கு மீண்டும் ஏற்றப்பட்டது.[2] ஆளுங்கணத்தார் அனுபவித்து வந்த நிலங்கள் மீண்டும் கோயிலுக்குச் சேர்க்கப்பட்டன.[3] கோயிலின் கருவூலத்தின் வருமானமான 40 கழஞ்சு 7 மஞ்சாடி பொன் மீட்கப்பட்டது[4] இப்பொன்னால் "பொற்பூக்கள் இறைவனுக்குச் செய்தளிக்கப்பட்டன. இவன் மேலும் தானே இக்கோயிலுக்கு விளக்குகள், நவரத்தினம் பதித்த பொற்பூக்கள், வெள்ளிக் கச்சோலம், விழாக்காலக் கொடியேற்றத்திற்கு வேண்டியவை ஆகியவற்றையும் கொடையாகக் கொடுத்துள்ளான்.[5]

**ஓலை நாயகம் :-** *திருவல்லத்துக்கு வடக்கே 6 கல் தொலைவில் உள்ள மேற்பாடிக் கோயில் கல்வெட்டுகளில் ஓலை நாயகங்கள் நால்வரில் ஒருவனாக இவன் குறிக்கப் படுகின்றான். 'மேநாயகம்' பதவியை விட 'ஓலைநாயகம்' பதவி சிறப்பானது. இராஜராஜனின் 7வது ஆண்டில் இவன் 'மேல்நாயகம்'. 14வது ஆண்டில் ஓலை நாயகம். மேல்பாடி சோழேந்திரசிங்க ஈஸ்வரம் கோயிலுக்கு நிவந்தக் கட்டளை

கள் ஏற்படுத்தி இராஜராஜன் சொல்லிய ஆணைகள் ஓலைகளில எழுதப்பட்டு மும்முடிச்சோழ போசனாலும் இன்னும் மூவராலும் ஒப்பிட்டு சரி பார்க்கப்பட்டு நிறைவேறியுள்ளன.[6]

பெருந்தரம் :- இன்னும் ஏழு ஆண்டுகள் கழித்து இராஜராஜனின் 21 வது ஆண்டில் இராஜராஜனுடன் நெருங்கிய பெருந்தரத்து அதிகாரியாக இவன் உயர்ந்து விடுகின்றான். கடாரத்திலிருந்து வந்து நாகப்பட்டிணத்தில் புத்தவிஹாரம் எடுக்க கடாரத்தரசனுக்கு அனுமதி அளிக்கப்பட்டு அவ் விஹாரத்திற்கு 'ஆனைமங்கலம்' என்ற ஊர் தானமளிக்கப் பட்டது. இந்த ஆணையை நிறைவேற்றுப் பெருந்தர அதிகாரிகளில் ஒருவனாக மும்முடிச் சோழபோசன் விளங்கினான். இது தொடர்பாக அளிக்கப்பட்ட ஆனைமங்கலச் செப்பேட்டில் மூன்று இடங்களில் இவன் கையொப்பம் குறிக்கப்படுகின்றது [7]

ஸ்ரீ காரியம் கடைக் காண்பவன் :- இராஜராஜனின் அடுத்த ஆண்டான 22ல் மும்முடிச் சோழபோசன் திருவல்லம் கோயிலின் 'ஸ்ரீ காரியம் கடைகாண்கின்ற ஸ்ரீ ராஜராஜ தேவர் பெருந்தரத்து அரைசுருடையான் மிராமிரவன் பல்லவரையனான மும்முடிச் சோழபோசன்' [8] என்று ஸ்ரீ காரியம் கடைகாண் அதிகாரியாக விளங்கியுள்ளான். கோயிலின் ஸ்ரீ காரியம் பதவி சிறந்த தெய்வப்பற்று மிக்கவர்களுக்கே இராசராசன் காலத்தில் வழங்கப்பட்டிருந்தது.

திருமந்திர ஓலை நாயகம் :- அடுத்து இரண்டு ஆண்டுகள் கழித்து அதாவது இராஜராஜனின் 24வது ஆண்டில் இவனைத் திருமந்திர ஓலை நாயகமாகக் காண்கின்றோம் பாப்பன ஊர்கள், வைகாஸனர் ஊர்கள், சமண ஊர்களி லிருந்து கிடைக்கப் பெறாத வரிகள் நிலங்களைப் பறிமுதல் செய்வதன் மூலம் பெறப்பட்டன. இது தொடர்பான ஆணை

யை இராசராசன் இட்ட அது 'ஆணையாக ஒலையில் திரு மந்திர ஒலை என்னும் அலுவலரால் எழுதப்பட்டது அப்படி எழுதப்பட்ட ஒலை இரண்டு ஒலை நாயகங்களால் ஒப்பிடப்பட்டது அப்படி ஒப்பிட்டவர்களில் ஒருவன் இராஜராஜனின் சேனாபதி ஸ்ரீ கிருஷ்ணன் இராமன, மற்றொருவன் இம் மும்முடிச் சோழ போசன் ஆவான்.'

**சண்டேசர் செப்புத்திருமேனி :-** சிவபெருமானது பக்தர்களில் எல்லாம் சிறந்த, முதலாவது பக்தனாகக் கருதப்படுபவர் ஆதிசண்டேஸ்வரதேவர். சிவபெருமானுக்குரிய மரியாதைகள் அனைத்தும் இவருக்கும் கிடைக்கும். சிவன் கோயில் நிலங்கள், பொருள்கள், கணக்குகள் அனைத்தும் இவரது பெயரிலேயே விளங்கும். அப்படிப் பக்தர்களில் உயர்ந்த பதவி இவருக்குண்டு. மும்முடிச் சோழபோசன் சண்டிகேஸ்வரர் செப்புத்திருமேனி ஒன்றைத் தஞ்சை பெரிய கோயிலில் செய்தளித்துள்ளான்.[10] இது இராசராசனின் இறுதியாண்டுக் கல்வெட்டில் தெரிகிறது. இராஜராஜனிடம் உயர்ந்த பதவியும் மிகுந்த அன்பும் கொண்ட இவன் அவற்றை வெளிப்படுத்துவது போல இச் செப்புத் திருமேனியைச் செய்து வைத்தானோ? என்று எண்ணத் தோன்றுகிறது. இராஜராஜனிடம் கொண்ட பெருமதிப்புகாரணமாகத் திருவல்லம் கோயிலில் 'இராஜராஜ ஈஸ்வரம்' என்ற மற்றொரு கோயிலைக் கட்டியுள்ளான்.

**இராசேந்திரன் காலத்தில் :** இராஜராஜனுக்குப் பிறகு இராசேந்திரன் காலத்திலும் அதே செல்வாக்குடன் மும்முடிச் சோழ போசன் விளங்கியிருக்கிறான். இக்காலத்தில் இவன் இராசேந்திரனின் சிறப்புப் பெயரோடு (உத்தமசோழன்) அழைக்கப்பட்டான். "ஸ்ரீராஜேந்திர சோழ தேவர் பெருந்தரத்து ......... அரைகுருடையான் ஈராயிரவந்த பல்லவரை

யனாந உத்தம சோழ பல்லவரயன்'' 11 என்று இராசேந்திரனின் 4வது ஆண்டுத் திருவல்லம் கல்வெட்டு குறிக்கின்றது.

**கடைசிக் கல்வெட்டு :** இராசேந்திர சோழனின் 10வது ஆண்டுக் கல்வெட்டில்[12] இவன் குறிக்கப்படுவதே கடைசிக்குறிப்பெனலாம். அதன் பிறகு இவன் கல்வெட்டுகளில் குறிக்கப்படவில்லை இப்படி இராஜராஜனின் 13வது ஆண்டு முதல் அதாவது கி.பி 998 முதல் இராசேந்திரனின் 10வது ஆண்டு வரை (கி பி 1022) சுமார் 24 ஆண்டுகளுக்கு மேலாகச் சிறந்த சோழ அதிகாரியாக, சிவபக்தனாக, கோயில் வழிபாடுகளையும், உடைமைகளையும் முறைப்படுத்தி நடத்து பவனாக, இம் மும்முடி சோழ போசன் விளங்கிச் சோழராட்சியைச் சிறக்கச் செய்திருக்கின்றான். *

**அடிக்குறிப்புகள்**

1) தென்னிந்தியக் கல்வெட்டுகள் மடலம் : 3 எண் : 49
2) ARE 209/1921
3) ARE 210/1921
4) Ibid
5) ARE 210/1921, 212/1921, 216/1921
6) தென்னிந்தியக் கல்வெட்டுகள் மடலம் : 3 எண் : 19
7) பெரியலெய்டன் செப்பேடு, வரிகள் 129 - 133, 162—164, 436 440 தென்னிந்தியக் கல்வெட்டுகள் மடலம் : 3 எண் : 9, அடிக்குறிப்பு : 2
8) ARE 219/1921—22 இக்கல்வெட்டு வாசகம் திருவல்லம் கோயிலில் நேரில் கட்டுரை ஆசிரியரால் படிக்கப்பட்டது
9) தென்னிந்தியக் கல்வெட்டுகள் மடலம் : 3, எண் : 9
10) Ibid : 2 பகுதி : 2 எண் : 55
11) Ibid : 3 எண் : 54
12) Ibid : 2 பகுதி : 1 எண் : 12

* கட்டுரை ஆசிரியரால் நிறையக் கல்வெட்டுகள் நேரில் படிக்கப்பட்டு அவற்றின் வாசகங்கள் தரப்பட்டுள்ளவை விரிவஞ்சி இங்கு வெளியாகவில்லை.

# பாண்டிநாட்டுக் குடைவரைக் கோயில் சிற்ப வடிவங்களில் முருகன்

மா. சந்திரமூர்த்தி, எம். ஏ.,
சிதம்பரம்

அறுபடை வீடுகளில் மூன்று படைவீடுகள் பாண்டிய நாட்டிலேயே அமைந்துள்ளன. இப்படை வீடுகளில் தோற்றுவிக்கப்பட்ட பண்டைச் சிற்பங்கள் தற்போது ஏதும் காணக் கிடைக்கவில்லை. கி பி. 7, 8 ஆம் நூற்றாண்டிலிருந்து தோற்றுவிக்கப்பட்ட சிற்பங்களே தற்போது காணக்கிடைக்கின்றன. பாண்டிய நாட்டில் திருப்பரங்குன்றம், திருமலை, ஆனைமலை, குன்றக்குடி ஆகிய இடங்களிலுள்ள குடைவரைக் கோயில்களில் முருகப் பெருமானின் பல்வேறு சிற்பங்கள் செதுக்கப் பட்டுள்ளன. இச் சிற்பங்கள் யாவும் முற்காலப் பாண்டியர் கலைப்படைப்புக்களாக விளங்குகின்றன. திருப்பரங்குன்றம் உமையாண்டார் குடைவரையிலும், மூவரைவென்றான் குடைவரைக் கோயிலும் செதுக்கப்பட்டுள்ள சிற்பங்கள் கி. பி. 13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பிற்காலப் பாண்டியர் கலைப் பாணியாகும். இந்த இரண்டு இடங்களிலும் முருகப் பெருமானை வள்ளி, தெய்வயானையுடன் கல்லிலே வடித்துள்ளனர் இங்கு திருமலை சேவற்கொடியோனையும், ஆனைமலை தானைத்தலைவனையும், பரங்குன்றத்துப் பெரும் பெயர் முருகன், மலை மகள் மகன் ஆகியோரையும் காண்போம்

**திருமலை சேவற்கொடியோன் :** இராமநாதபுரம் மாவட்டம், சிவகங்கை வட்டத்தில் அமைந்துள்ள ஊர் திருமலை இங்குள்ள மலைக்கோயிலின் தென்பகுதியில் குடைவரை உள்ளது. இக்குடைவரை முகமண்டபத்தின் தென்புறச் சுவரில் முருகனின் உருவம் சேவற்கொடியுடனும் கணங்களுடனும்

புடை சூழ புடைச்சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளது இங்கு முருகப் பெருமான் இரண்டு கைகளுடன துவி பங்கமாய் நின்றக் கோலத்தில் காணப்படுகிறார் வலதுகை தொடையின் மீது சரிந்தபடி (ஊரு முத்திரையில்) காணப்படுகிறது இடது கை தூக்கலான இடையிலே ஊன்றிய படி அமைந்துள்ளது. தலையில் அடர்த்தியாகவும், அழுத்தமாகவும் தொங்கியமைந்த தலைக்கோலம் அணி செய்கிறது இது பல்லவ மன்னன், சிம்மவர்மன், சிம்ம விஷ்ணு ஆகிய மன்னர்களின் காலத்து நடுகல் சிற்பங்களில் உள்ள வீரனின் தலைக் கோலத்தை நினைவூட்டுகிறது. மேலும் முருகனின் தலைக் கோலம் திருநெல்வேலி மாவட்டம் செந்தாமரம் குடைவரை கோயிலில் உள்ள துவாரபாலகரின் தலைக்கோலத்தையும், புதுக்கோட்டை மாவட்டம் திருமெய்யம் குடைவரைக் கோயிலில் உள்ள துவாரபாலகரின் தலைக்கோலத்தையும், ஒத்தமைந்துள்ளது.

முருகப் பெருமாளின் காதுகளில் சுருள்தோடும் (பத்திரக் குண்டலம்) கழுத்தில் பிறைவடிவான அணியும், மார்பில் புரிநூலும், மேற்கைகளில் தோள் வளையும், முன் கையில் தடித்த வளையும், இடையில் பளுவான ஆடையும், கடிபந்தம் என்ற இடைவார்கச்சையும், காலில் கழலும் அணி செய்கின்றன, இவை தொன்மையான மரபில் அமைந்து விளங்குகின்றன. பொதுவாக முருகனின் மார்பில் காணப்படும் குறுக்குவார் (சன்னவீரம்) இங்கு இல்லை, புரிநூல் மட்டும் காட்டப்பட்டுள்ளது. இப்புரிநூல் இடது தோளில் புறப்பட்டு வலது மேற்கையின் மேல் ஏறி ஓடும் நிலையில் காணப்படுகிறது இடையில் உள்ள தடித்த இடைவார்கச்சை (கடிபந்தம்) இரண்டு

அங்குல கனத்தில் இடது தொடையின் கீழே சரிந்து வளையமாக வீழ்ந்துள்ளது.

இச்சிற்பத்தில் இளமையும் கம்பீரமும் உள்ளது. வனப்பு கொப்பளிக்கிறது. கைகளில் சக்திப்படை, வச்சிரப்படை முதலிய ஆயுதங்கள் ஏதும் காட்டப்படாத எளிமையான முறை-யில் மாணிடத் தோற்றம் கொண்டு நின்ற கோலத்தில் உள்ள முருகன் சிற்பத்தை புடைப்புச் சிற்பமாக வேறெங்கும் காண்பது அரிது.

முருகனின் வலப்புறம் குள்ளச்சிறுகணம் ஒன்று நீண்ட குடைக்காம்பைச் சாய்வாக உயர்த்திப் பிடிப்பது போல சாமரைக் குடையை தாங்கியுள்ளது. இதன் நீண்ட தண்டும், தோகையும் முருகனின் இடதுத்தோளின் பின்புறம் காட்டப் பட்டுள்ளது. பூதகணத்தின் தலைமேல் முருகனின் சேவற் கொடி காணப்படுகிறது. பாண்டி நாட்டில் உள்ள குடை வரைக் கோயில்களில் முருகனின் உருவத்தை அமைக்கும் பொழுதெல்லாம் அவனது சேவற்கொடியையும் இணைத்தே அமைப்பது முற்காலப் பாண்டியர் கலைமரபாக இருந்து வந்துள்ளது ஆனைமலை முருகன் கோயிலில் சேவற்கொடியுடன் மயில் கொடியும் தனித்தனியே காட்டப்பட்டுள்ளது இங்கு நினைவு கூரத்தக்கது. இவை "பல் பொறி மஞ்ஞை வெல் கொடி கோழி ஓங்கிய வென்றாடு விறல் கொடி" என- திருமுருகாற்றுப்படை கூறும் வரிகளை நினைவூட்டுகின்றன. எனவே பாண்டிய நாட்டுச் சிற்பங்கள் தமிழ் இலக்கியங்களின் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளன என்ற கருத்து வெளிப்படுகிறது. முருகனின் இடப்புறம் இரண்டு கைகளையும் கட்டிக் கொண்டு பணிந்து நிற்கும் அடியாரின் உருவம் ஒன்று உள்ளது. இங்கு முருகனின் கீழ் உள்ள பீடத்தின் வலப்புறத்தில் ஆட்டுக்கடாயும், இடப்புறத்தில் மயிலும் ஒன்றையொன்று

பார்த்துக்கொண்டு நிற்கின்றன. ஆட்டுக்கடாவின் சற்று கீழ் நோக்கி வளைந்த கொம்பும், குட்டையான வாலும் வனப்புடன் விளங்குகின்றன. ஆட்டுக்கடாய் (தகர்) அக்கினியின் ஊர்த்தி ; சிவக்குமாரனே அக்கினியின் அம்சமாக கருதப்படுபவன். 'ஏழகன் (தகர்) மேற்கொண்டு இளையோன் இகல் வென்றான்'' என்பது புறப்பொருள் வெண்பாமாலை. எனவே யானையொடு மயிலும், தகரும் (ஆட்டுக்கடாய்) அவனது வாகனங்களாயின என்பதை அறிகிறோம். இச்சிற்பங்கள் கி.பி. 700 முதல் 750 ஆண்டுகளுக்குள் செதுக்கப்பட்டிருக்கலாம்.

அகமும் புறமும் மயில்க் கொடியை போற்றுகின்றன. இம் மயில்க் கொடி கி.பி. 8ம் நூற்றாண்டு வரை முருகனின் கொடியாக விளங்கியது. பின்னர் மயில் முருகனின் வாகனமாகவே கோழி கொடி ஆயிற்று. இதனை பாண்டியர் சிற்பங்கள் வழி அறிகின்றோம். திருமுருகாற்றுப்படை மயில்க் கொடியையும், கோழிக் கொடியையும் குறிப்பதால், அவை அவ்விலக்கிய காலத்தில் முருகனது கொடியாக வழக்கில் இருந்தன என்பது பெறப்படுகிறது.

**ஆனைமலை – தானைத்தலைவன் :** மதுரை மாவட்டம் ஆனைமலை லாடன் கோயிலில் மூலதெய்வமாக விளங்கும் முருகனின் வடிவம் பாண்டிய நாட்டுச் சிற்பக்கலைக்கு சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகிறது கருவறையில் உள்ள நீண்ட பீடத்தில் இடது காலை மடித்து வலது காலைத் தொங்கவிட்டு அமர்ந்த நிலையில் காணப்படுகிறது. இது பண்டைய மரபைத் தழுவி இரண்டு கைகளுடன் வடிக்கப்பட்டுள்ளது. இவ்வுருவத்தின் வலது கை கடகமுத்திரையிலும் இடது கை தொடையின் மீதும் அமைந்துள்ளன.

கருவறையில் உள்ள இவ் உருவத்தையும் அதன் தேவியையும் பாண்டியனும் அவனுடைய இராணியுமாக இருக்கவேண்டும் என்று திரு மயிலை சீனிவேங்கடசாமி அவர்கள் கூறுகிறார்கள். ஆனால் அச்சிலையின் நெற்றியில் உள்ள கண்ணி, மார்பிலே அணி செய்யும் சன்ன வீரம் என்ற குறுக்கு வார், உருவமைதி, உண்ணாழிகை வாயிலில் உள்ள சேவல் மயிற்கொடி ஆகிய சின்னங்களைக் கொண்டு அவை முருகனின் உருவம் என்பது தெளிவு: "வானோர் தானைத்தலைவன்" (திருமுரு – அடி 260), "வெல்போர்ச் சேஎய்" (மலைபடு – 493), "செருவெஞ் சேஎய்" (புறநா – 120 : 21), "செருமிகு சேஎய்" (புறநா – 14 : 19), "செரு மிகு சேஎய்" (அகநா – 266 : 21), என்று போரிற் சிறந்த தெய்வமாக சங்க இலக்கியங்களில் போற்றப்படும் முருகப் பெருமான் இங்கு மார்பிலே வீரத்திற்கு இலக்கணமான சன்ன வீரத்தையும், நெற்றியிலே கண்ணியும் சூடி தெய்வயானை யுடன், போரில் வல்ல முருகனாக வானோர் தானைத் தலை வனாக (தேவ சேனாபதி) காட்டப்பட்டுள்ளார். மலையும் மலையைச் சார்ந்த இடமும் குறிஞ்சி நிலப்பகுதியாகை யால், குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகப் பெருமானுக்கு இங்கு சிறப்பு தரப்பட்டுள்ளது என்பது பெறப்படுகிறது.

தானைத்தலைவனாக தோன்றும் அண்ணலின் அழகிலே தன்னை அர்ப்பணித்த தேவ அணங்காக, அண்ணலின் இடப்புறத்தே தெய்வயானை அமர்ந்த நிலையில் தோற்று விக்கப்பட்டுள்ளாள். அண்ணலின் முகத்திலே தோன்றும் வீரத்தின் சாயலைக் கண்டு, நாணத்தால் மேலிட்ட தெய்வ நங்கையாக இங்கே தெய்வானை காட்டப்பட்டுள்ளாள். இவள் தரை நோக்கும் பார்வை, முகத்திலே தோன்றும் சந்திரவதனம், அதரங்களில் தவழும் புன்னகை யாவும் பாண்டியர் கால சிற்பியின் கைவினைக்குச் சிறந்த எடுத்துக்

காட்டாக விளங்குகின்றன. ஆற்றல் மிக்க அண்ணலின் அருகே தோன்றும் மென்மை வாய்ந்த இத் தேவியின் படைப்பு பாண்டிய சிற்பங்களில் மகுடம் வைத்தது போல் அமைந்துள்ளது.

**பரங்குன்றத்துப் பெரும் பெயர் முருகன்:** திருமுருகாற்றுப் படை இவனை 'அரும் பெறல் மரபின் பெரும்பெயர் முருகன்' என்கிறது திருப்பரங்குன்றம் குடைவரைக் கோயிலில் நான்கு தோள்களுடன் முருகப் பெருமானின் அமர்ந்த கோலத்தைக் காணலாம். இடது காலை மடக்கி வலது காலை தொங்கவிட்டு சுகாசனத்தில் முருகனின் அமர்ந்த கோலம் செதுக்கப்பட்டுள்ளது மேல் வலக்கையில் சக்திப் படையும், இடக்கையில் வச்சிரப்படையும் காணப்படுகிறது. கீழ்வலக்கை அபயம் காட்டுகிறது, கீழ் இடக்கை இடது தொடை மீது அமைந்தவண்ணம் மலர் ஏந்தியுள்ளது திரு டி. ஏ. கோபிநாதராவ் அவர்கள் இந்த முருகனை ஜேஷ்ட்டை என்று கருதுகிறார்கள் ஆனால் ஜேஷ்ட்டையின் உருவம் அம் மலையின் அடித்தளத்தில் தனிக்குகையில் உள்ளது.

**தெய்வயானை :-** முருகப் பெருமானின் இடதுபுறம் தெய்வயானை உருவம் நின்ற கோலத்தில் காணப்படுகிறது. வலது பக்கம் நாரதர் மலர்க்கொத்தை ஏந்தி நிற்கின்றார். முருக பெருமானின் திருவுருவத்திற்கு மேலே சூரியனும் சந்திரனும் பறக்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளனர் அவரது பக்கங்களில் காயத்திரி, சாவித்திரி, சரஸ்வதி, நான்முகன், இந்திரன் ஆகியோரின் உருவங்கள் உள்ளன. அவரது காலடியின் கீழ் யானை, மயில், ஆடு, குள்ளச் சிறுகனம், கணநாதர் ஆகியவையும் உள்ளன. அவற்றில் சேவல் கொடி தாங்கிய கண-நாதர் உருவம் குறிப்பிடத்தக்கது இது காணத் தவறக் கூடாதச் சிற்பமாகும். திருப்பரங்குன்றத்தைக் காவல்புரியும்

காவல் கணங்களான உக்கிரமூர்த்தி, அண்டாபரணர் ஆகிய சிற்பங்களும் மிகப் பெரிய அளவில் செதுக்கப்பட்டுள்ளன. இவையாவும் வனப்புடையவை.

**மலை மகள் மகன் :** இதே குடைவரையில் உள்ள சிவாலயக் கருவறையில் உட்புறச்சுவரில் சோமாஸ்கந்தரின் பெரிய சிற்பம் காணப்படுகிறது. இங்கு சிவனுக்கும் உமைக்கும் நடுவே சேயோனின் உருவம் காணப்படுகிறது. சேயோன் ஆகிய குழந்தை முருகன் தன் வலக்கையில் தாமரை ஏந்தி இடக்கையை மடிமீது வைத்துள்ளார். கழுத்தில் அணிகளும், இடையில் அரைஞாணும் காலில் கழலும் உள்ளன. தந்தையின் அருகிலே அமர்ந்துள்ள சேயோனின் உருவம் குழந்தைப் பருவத்தின் மகத்தான சித்தரிப்பாக அமைகிறது. மிகவும் நேர்த்தியான இம் மூர்த்தம் 'ஆல்கெழு கடவுள் புதல்வ, மால்வரை மலைமகள் மகனே' என்று திருமுருகாற்றுப் படையிலேயே நக்கீரர் போற்றுகிற பாங்கிலுள்ளது இவ்விலக்கியத்தின் அடிப்படையில் தோற்றுவிக்கப்பட்ட குடைவரைச் சிற்பத்தை பாண்டிய நாட்டில் வேறு எங்கனும் காண்பது அரிது. முருகன் படைவிடாகப் புகழ்பெற்றுள்ள இக்கோயில் கி.பி. 773ல் சிவபெருமானுக்கு எடுக்கப்பட்டது, என்று இதன் கல்வெட்டு கூறுகிறது. எனவே இச்சிற்பங்கள் கி.பி.8 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எழுந்த பாண்டியர் கலை, பாணிக்குசிரிய எடுத்துக்காட்டுகளாக விளங்குகின்றன.





பிள்ளையாரும் பரிவார ஆலயமும்

தஞ்சைக் கோயில் (பக். 44)



எறும்பூர் கற்கோயில் காலம் கி. பி. 935 (பக். 49



பத்தமடை — திருப்பூப் பலகை (பக். 116



மருதுபாண்டியர். காளையார் கோயில் (பக். 214)






பெருங்கற்கால ஓவியங்கள். வேட்டைக்காரன் மலை, பாடியேந்தல், சென்னராயன் பள்ளி (பக். 57 & 71)



அதியமான் பெருவழி
நாவற் தாவளத்துக்கு
காதம் 29

○○
∘ ∘ ∘
∘ ∘ ∘
∘ ∘ ∘

(பக். 118)



சரவண பெல்கோலா

58 அடி உயரச்சிலைக் கல்வெட்டு-கங்கர் கி. பி. 978 -2வது வரி 'சாமுண்டராஜன் செய்வித்தது'

கர்நாடக மாநிலம் சரவண பெல்கோலா 58 அடி உயர கோமத்தீஸ்வர் சிலைக் கல்வெட்டு. காலம் கி. பி. 978. 2 வது வரியில் 'சாமுண்டராஜன் செய்வித்தது' என்று தமிழில் உள்ளது. கங்கர் கலைப்பணி. (பக். 185)




பாண்டியன் கோட்டை அமைப்பு (பக். 9)



பறம்புக் கண்மாய்க் கல்வெட்டு (பக். 18)



ரோமானியர் மதுச்
சாடி 'ஆம்போரோ'
(பக். 78)



தொண்டி கல்வெட்டு மூவேந்தரது
மீன், வில், புலி சின்னங்கள்
(பக். 209)



பூதல உதயமார்த்தாண்டன் கல்வெட்டு (பக். 145)

